M. வடிவேல்

2393

ஓம்.

தத்ஸத்பிரஹ்மணே நம:

# ஸ்ரீவிசாரசந்திரோதயம்.

இது

தஞ்சை ஸ்ரீபிரஹ்மநிஷ்டபண்டித

வே. குப்புஸ்வாமிமஹாராஜ்

என்னும் பூர்வாசிரமநாமம்பூண்டிருந்த

ஸ்ரீ வி. பிரஹ்மாநந்தஸ்வாமிகளால்

மொழிபெயர்க்கப்பட்டு

தஞ்சை

ஸ்ரீசங்காவிலாசசாரதாமந்திர பிரஸில்,

பதிப்பிக்கப்பட்டது.

நான்காம் பதிப்பு.

ருதிரோத்காரி-௵ வைகாசி-௴.



விலை] 1923. [ரூ ௧௨.

1923 ← 12 அணா

9/2


श्रीः श्रीगुरुदेवाय परपुरुषाय सर्वदेवतावशीकरणाय सर्वारिष्टविनाशाय सर्वमंत्रच्छेदनाय त्रैलोक्यं वशमानय स्वाहा ॥

உ

ஓம்கணேசாய நம:

# முதற்பதிப்பின் முகவுரை.



எல்லாமதங்களிலும் முதன்மைபெற்று விளங்கும் ஸ்ரீவேதாந்தசித்தாந்தத்தை அறிதற்பொருட்டு, கனிஷ்ட மத்திம அதிகாரிகளுக்காக அநேக சமஸ்கிருத பிராகிருதநூல்கள் இருக்கின்றன. ஆனால்உள்ளத்தில் விசேஷ சங்கைகளெழும்பாத மந்தமதியுள்ள பரமஆஸ்திகர்களாகிய சித்தசுத்தியுடைய வுத்தம அதிகாரிகளின் பொருட்டுச் சிறிதும், மேன்மையுடையதும், கடினமில்லாததும், விரிந்த வேதாந்தப்பிரக்கிரியைகளுள்ளதுமாகிய ஓர் நூல், தமிழில் இதுகாறும் வெளிப்படவில்லை யென்றுணர்ந்து அவ்வியல்பினதாய் ஹிந்திபாஷையில் மகாத்துமா பிரஹ்மநிஷ்டபண்டித ஸ்ரீபீதாம்பரஜீ அவர்களாற் செய்யப்பட்டிருக்கும் ஸ்ரீவிசாரசந்திரோதய மென்னு மிந்நூலானது தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது. வினாவிடையாகிய இந்நூலிற் கலையெனபெயரிய

பதினாறு பிரகரணங்களிருக்கின்றன. அவற்றிற்கு ஆங்காங்கு டிப்பணி யென்னும் விளக்கவுரையும் செய்யப்பட்டிருக்கின்றது. இதில் முமுக்ஷுக்களுக்குப் பிரஹ்மசாக்ஷாத்காரத்தில்மிகவுமுபயோகமுள்ளவை யாவும் சுருக்கமாய் எழுதப்பட்டிருக்கின்றன. கடைசியாகிய பதினாறுவது கலையில் அநேக வேதாந்தபதார்த்தங்களின்பெயர்களும் அவற்றின் சுருக்கமாகிய இலக்ஷணங்களும் வைக்கப்பட்டிருக்கின்றன. இந்நூலிற் பழகுவோர்களுக்கு மற்றும் பெரிய நூல்களை விசாரிப்பதில் மிக்க திறமை யுண்டாகும். வேதாந்தத்தை அப்பியசிக்க ஆரம்பிப்பவர்களுக்கு இந்நூலைப்போல உபகாரமுடையது வேறில்லை. பெரும்பாலும் அப்பியாசிகளை முன்னிட்டும், இதனால் ஹிந்திபாஷையின் நடையும் பழகத்தக்கதாயிருக்கவேண்டு மென்று சிலர் கேட்டுக்கொண்டமையாலும், இது நேரான மொழிபெயர்ப்பாய் மிகவும் எளிதான நடையிற் செய்யப்பட்டது. இந்நூலைப் பிரஹ்மநிஷ்டராகிய குருமுகமாகப்

படிக்கும் அல்லது அதன் பொருளை யுள்ளத்தி லமைக்கும் முமுக்ஷுக்களின் உள்ள மென்னும் ஆகாயததில் ஞானமென்னும் யௌவனுவஸ்தை யைப் பூண்ட விசார மென்னும் சந்திரனுதயமா ய்ச் சந்தேக விபரீதங்களோடு அஞ்ஞானமென் னு மிருளைத் துறக்கும். இக்காரணத்தாற்றான் இ தற்கு விசாரசந்திரோதய மென்னும் பெயரிடப் பட்டது இதன் விஷயம் பின்வரும் அட்டவணை யிற் காண்க. இதிலேதேனும் எழுத்துப்பிழை சொற்பிழைக ளிருக்குமாயின் அவற்றைப்பெரி யோர் “ஜீவர்கள் சுபாவமாகத் தோஷமுடையவர் களே” என்னும் சுருதியின் கருத்தை யுட்கொ ண்டவர்களாய்ச் சேர்த்துப் படித்துக்கொள்வார் களென நம்புகிறேன்.

வி. கு.

தஞ்சாவூர்.

ஸ்ரீகணேசாய நம:

# இரண்டாம்பதிப்பின் முகவுரை.

இந்நூல் முமுக்ஷுக்களுக்கு அத்தியந்தம் உபயோகமுள்ளதெனக் கருதி முன்பதிப்பை விட இப்பதிப்பில் அநேகம் பதங்களுக்குத் தெளிவாய் உரை யெழுதப்பட்டிருப்பதும் தவிர ஸ்ரீபீதாம்பரஜீ அவர்களது ருவது பதிப்பில் மூலத்திலும் டிப்பணியிலும்செய்யப்பட்ட சிலதிருத்தங்களும் இதில் செய்யப்பட்டுள்ளன. அல்லாமலும் மூலத்திலுள்ளதுபோலவே ஒவ்வொருகலையின் ஆரம்பத்திலும் அக்கலையின் அபிப்பிராயம், தாரணையாமாறு நூற்பாவாக அமைக்கப்பட்டுள்ளது. அன்றியும் பதினாறுவதுகலையில் முன்னினும் சில அதிகபதார்த்தங்கள் சுருதியிலுள்ளபடி சேர்க்கப்பட்டிருக்கின்றன. வேதாந்தாப்பியாசஞ் செய்வோர்கள் மனதில் பிறமத வாதிகளால் கலக்கமுண்டாகாத வண்ணமும்,இவ்வேதாந்தப்பிரக்கிரியைகள் முழுவதும் வேதத்திற் சொல்லப்பட்டனவே யல்லாது, ஸ்ரீமத் சங்கா

பகவத்பாதாசாரியர்கள் முதலியோர்களால் கற்பிக்கப்பட்டனவன் றென்னும் துணிவு பிறக்குமாறும், கo அ உபநிஷதங்களினின்றும் ஒவ்வொரு பிரக்கிரியைக்கும் ஒன்று அல்லது பலசுருதிவாக்கியங்களைப் பிரமாணமாகக் காட்டி அவற்றிற்குத்தமிழுரையும் இதன் குறிப்புரையில் எழுதப்பட்டுள்ளது. இதில் வாசிப்பவர்களின் சௌகரியத்தை யுத்தேசித்துப் பிரசங்கங்கள் தக்கபடி பிரிக்கப்பட்டும், முக்கிய விஷயங்கள் எளிதாய்ப் புலப்படுமாறு தடிப்பான எழுத்துக்களால் அமைக்கப்பட்டு மிருக்கின்றன. இந்நூலில் சொல்லப்பட்டுள்ள விஷயங்கள் இவை அவை இன்ன பக்கங்களிலுள வென்று எளிதிலறியுமாறு நூன்முகப்பில்அகராதி விஷயஅட்டவணை யொன்றும், அதனோடு இந்நூலிற் பலவிடங்களில் வந்துள்ள சுருதிகள் இவை யென்றும் அவை இன்னபக்கங்களில் வந்துள்ளனவென்றும் விளக்கத்தக்க ஓர் அநுக்கிரமணிகையும் அமைக்கப்பட்டுள்ளன.

வி. கு. தஞ்சாவூர்.

உ

ஸ்ரீகணேசாய நம:

# மூன்றும்பதிப்பின் முகவுரை.



இப்பதிப்பில் இரண்டாம்பதிப்பினைவிட அதிகமாய்ச் சில சுருதிகள் சேர்க்கப்பட்டிருப்பதோடு பலபிரதிகளைக்கொண்டு சுருதிகள் செவ்வையாய்த் திருத்தப்பட்டுள்ளன. அன்றியும் சில விஷயங்கள் கூட்டியும் விளக்கியும் திருத்தியும் ஒவ்வொரு கலைகளின் தலைப்பிலும் குருசிஷ்யவடிவாகச் சித்திரப்படங்கள் அமைக்கப் பட்டுள்ளன.

வி. கு.

தஞ்சாவூர்.

ஸ்ரீகணேசாய நம:

# நான்காம்பதிப்பின் முகவுரை.



இப்பதிப்பில் மூன்றும் பதிப்பில் ஏற்பட்டிருந்த பிழைகள்யாவும் திருத்தப்பட்டிருப்பதோடு கைவல்யம் வாசிஷ்டம் வேதாந்தசூடாமணி முதலிய நூல்களில் வாராத சிலவிஷயங்கள் மனனஞ் செய்வதற்கேதுவாகச் செய்யுள் வடிவமாயமைக்கப்பட்டுமுள.

தஞ்சாவூர் ஸ்ரீசங்கரவிலாசசாரதாமந்திர
காரியதரிசி.

# இந்நூலில் வரும் சுருதிகளின்

# அநுக்கிரமணிகை.

உபநிஷதங்களின் பெயர்களும் — பக்கங்களும்.

இந்நூலில் வரும் சுருதிகளின்

அநுக்கிரமணிகை

முடிந்தது.

---

உ

ஸ்ரீசற்குருப்யோ நம:

திருநெல்வேலிஜில்லா மன்னார்கோயில்

திருப்புடைமருதூர் வேதாந்தமடாலயஸ்தாபகர்

மகா-ா-ா-ஸ்ரீ

முத்துகிருஷ்ணஞ்செட்டியார் அவர்கள்

பொருளுதவியால்

இப்பதிப்பு அச்சிடப்பட்டது.

இவருக்கு ஈசுவரன்கிருபை செய்வாராக.

சு. பாக்கியம் பிள்ளை,

மானேஜிங் டிரஸ்டி.

ஸ்ரீசங்கரவிலாசசாரதாமந்திரம்,

தஞ்சாவூர்.

# ஸ்ரீவிசாரசந்திரோதயம்.

## அகாராதி விஷய அட்டவணை.

ஆ

சா

அகாராதி விஷய அட்டவணை

முற்றிற்று.



॥ ओ३म् ॥

ஸ்ரீவிசாரசந்திரோதயம்.





# ॥ अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

## ஆறு தர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.



॥ अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

| न<br>நெ. | विषयः<br>விஷயம். | पूर्वमीमांसा<br>பூர்வமீமாம்ஸை. | उत्तरमीमांसा (वेदांत)<br>உத்தரமீமாம்ஸை. (வேதாந்தம்) |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| १ | जगत् | स्वरूपेणानादि अनन्तं प्रवाह-रूपं संयोगावियोग-वत् | नामरूपक्रिया-त्मकं मायापरि-णामः चेतनविवर्तः |
| க | உலகம். | ஸ்வரூபத்திஞல் அநாதி அநந்தம் பிரவாகவடிவம் ஸையோகவியோகங்களையுடையது. | நாமரூபக்கிரியை வடிவமானது மாயையின் பரிணமம் சேதநத்தின் விவர்த்தம். |

ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.

| न्याय: நியாயம். | वैशेषिक: வைசேஷிகம். | सांख्यम् சாங்கியம். | योग: யோகம். |
|---|---|---|---|
| 5 | 6 | 7 | 8 |
| परमाण्वारब्ध: संयोगवियोगजन्यश्च आकृतिविशेष: பரமாணுக்களால் ஆரம்பிக்கப் பெற்றதும் சையோகவியோகங்களாலுண்டாகியதுமான ஓர்வகை ஆகிருதி. | परमाण्वारब्ध: संयोगवियोगजन्यश्च आकृतिविशेष: பரமாணுக்களால் ஆரம்பிக்கப் பெற்றதும் சையோகவியோகங்களாலுண்டாகியதுமான ஓர்வகை ஆகிருதி. | प्रकृतिपरिणाम: त्रयोविंशतितत्त्वात्मकं च பிரகிருதியின் பரிணாமமும் இருபத்துமூன்றுதத்துவ வடிவமும். | प्रकृतिपरिणाम: त्रयोविंशतितत्त्वात्मकं च பிரகிருதியின் பரிணாமமும் இருபத்துமூன்றுதத்துவ வடிவமும். |

॥ अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

| न<br>நெ. | विषयः<br>விஷயம். | पूर्वमीमांसा<br>பூர்வமீமாம்ஸை. | उत्तरमीमांसा (वेदांत)<br>உத்தரமீமாம்ஸை. (வேதாந்தம்) |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| २ | जगत्कारणम् | जीवादृष्टपरमाणवः | अभिन्ननिमित्तोपादानभूत ईश्वरः |
| உ | உலகத்துக்குக் காரணம். | ஜீவனும் அதிருஷ்டமும் பரமாணுக் களும். | உபாதானமும் நிமித்தமுமான ஈசுவரன். |
| ३ | ईश्वरः | ० | मायाविशिष्टश्चेतनः |
| ௩ | கடவுள். | | மாயைவிசேஷித்த சேதநன். |

## ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.

| न्यायः<br>நியாயம். | वैशेषिकः<br>வைசேஷிகம். | सांख्यम्<br>சாங்கியம். | योगः<br>யோகம். |
|---|---|---|---|
| 5 | 6 | 7 | 8 |
| परमाणवः ईश्वरादिनवकं च<br>பரமாணுக்களும் ஈசுவரன் முதலிய ஒன்பதும். | परमाणवः ईश्वरादिनवकं च<br>பரமாணுக்களும் ஈசுவரன் முதலிய ஒன்பதும். | त्रिगुणात्मिका प्रकृतिः<br>முக்குணவடிவமான பிரகிருதி. | कर्मानुसारिणी प्रकृतिः तन्नियामक ईश्वरश्च<br>கருமத்தை அநுசரித்தபிரகிருதியும் அதனை நியமிக்கும் ஈசுவரனும். |
| नित्येच्छाज्ञानादिगुणवान् विभुश्च कर्तृविशेषः<br>நித்தியமான இச்சைஞானம் முதலிய | नित्येच्छाज्ञानादिगुणवान् विभुश्च कर्तृविशेषः<br>நித்தியமான இச்சைஞானம் முதலிய | 0 | क्लेशकर्मविपाकाशयैरसंबद्धः पुरुषविशेषः<br>கிலேசகர்மவிபாகாசயங்கள் சம்பந்திக்கப்பெறாத ஓர் புருஷன். |

|| अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ||

| न<br>நெ. | विषयः<br>விஷயம். | पूर्वमीमांसा<br>பூர்வமீமாம்ஸை. | उत्तरमीमांसा (वेदांत)<br>உத்தரமீமாம்ஸை. (வேதாந்தம்) |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| ௫ | தொடர்ச்சி | ... | ... |
| ४ | जीवः | जडचेतनात्मकः विभुः नाना कर्ता भोक्ता च | अविद्याविशिष्टश्चेतनः |
| ௪ | ஜீவன். | ஜடசேதநவடிவனும் வியாபகனும் வெவ்வேறானவனும் கர்த்தாவும் போக்தாவும். | அவித்தை விசேஷித்த சேதநன். |

## ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.

| न्यायः<br>நியாயம். | वैशेषिकः<br>வைசேஷிகம். | सांख्यम्<br>சாங்கியம். | योगः<br>யோகம். |
|---|---|---|---|
| 5 | 6 | 7 | 8 |
| குணங்களை யுடையவரும் வியாபகருமான ஓர் கர்த்தா. | குணங்களை யுடையவரும் வியாபகருமான ஓர் கர்த்தா. | ... | ... |
| ज्ञानादिचतुर्दशगुणवान् कर्ता भोक्ता जडो विभुर्नाना च<br>ஞாநம்முதலிய பதினன்குகுணங்களையுடையவனும் கர்த்தாவும் போக்தாவும் ஜடனும் வியாபகனும் வெவ்வேருனவனும். | ज्ञानादिचतुर्दशगुणवान् कर्ता भोक्ता जडो विभुर्नाना च<br>ஞாநம்முதலிய பதினன்குகுணங்களையுடையவனும் கர்த்தாவும் போக்தாவும் ஜடனும் வியாபகனும் வெவ்வேருனவனும். | असङ्गश्चेतनो विभुर्नाना भोक्ता<br>பற்றில்லாதவனும் சேதநனும் வியாபகனும் வெவ்வேருனவனும் போக்தாவும். | असङ्गश्चेतनो विभुर्नाना भोक्ता<br>பற்றில்லாதவனும் சேதநனும் வியாபகனும் வெவ்வேருனவனும் போக்தாவும். |

## ॥ अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

| न<br>நெ. | विषय:<br>விஷயம். | पूर्वमीमांसा<br>பூர்வமீமாம்ஸை. | उत्तरमीमांसा (वेदांत)<br>உத்தரமீமாம்ஸை. (வேதாந்தம்) |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| ५<br>ரு | बन्धहेतुः<br>பந்தத்துக்குக் காரணம். | निषिद्धं कर्म<br>விலக்கப்பட்ட கருமம். | अविद्या<br>அவித்தை. |
| ६<br>சு | बन्धः<br>பந்தம். | नरकादिदुःखसंबन्धः<br>நரகம் முதலிய துக்கத்தின் சம்பந்தம். | अविद्या तत्कार्यं च<br>அவித்தையும் அதன் காரியமும். |

## ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.

| | | | |
|---|---|---|---|
| न्यायः<br>நியாயம். | वैशेषिकः<br>வைசேஷிகம். | सांख्यम्<br>சாங்கியம். | योगः<br>யோகம். |
| 5 | 6 | 7 | 8 |
| अज्ञानम्<br>அஜ்ஞாநம். | अज्ञानम्<br>அஜ்ஞாநம். | अविवेकः<br>அவிவேகம். | अविवेकः<br>அவிவேகம். |
| एकविंशति-दुःखानि<br>இருபத்தோர் துக்கங்கள். | एकविंशति-दुःखानि<br>இருபத்தோர் துக்கங்கள். | आध्यात्मिकादि त्रिविधदुःखानि<br>ஆத்தியாத்மிகம் முதலிய மூவகை துக்கங்கள். | प्रकृतिपुरुषसंयोगजन्या अविद्यादयः पञ्च क्लेशाः<br>பிரகிருதிபுருஷர்களின் ஸையோகத்தாலுண்டாகிய அவித்தை முதலிய ஐந்து கிலேசங்கள். |

## ॥ अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

| न<br>நெ. | विषयः<br>விஷயம். | पूर्वमीमांसा<br>பூர்வமீமாம்ஸை. | उत्तरमीमांसा (वेदांत)<br>உத்தரமீமாம்ஸை. (வேதாந்தம்) |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| ७ | मोक्षः | स्वर्गप्राप्तिः | अविद्यातत्कार्य-निवृत्तिपूर्वकः परमानन्दब्रह्म प्राप्तिः |
| எ | மோக்ஷம். | ஸ்வர்க்கத்தை அடைதல். | அவித்தையும் அதன் காரியமும் நீங்குவதை முன்னிட்ட பரமாநந்தவடிவமான ப்ரஹ்மத்தை அடைதல். |

ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.

| न्याय: நியாயம். | वैशेषिक: வைசேஷிகம். | सांख्यम् சாங்கியம். | योग: யோகம். |
|---|---|---|---|
| 5 | 6 | 7 | 8 |
| एकविंशति-दु:खध्वंस: | एकविंशति-दु:खध्वंस: | त्रिविधदु:ख-ध्वंस: | प्रकृतिपुरुषसंयोगाभावपूर्विका अविद्यादिपञ्च-क्लेशनिवृत्ति: |
| இருபத்தோர் துக்கங்களுடையவும் நாசம். | இருபத்தோர் துக்கங்களுடையவும் நாசம். | மூவகை துக்கங்களின் நாசம். | பிரகிருதிபுருஷர்களின் சையோகமின்மை முன்னிட்ட அவித்தைமுதலிய ஐந்து கிலேசங்களின் நீக்கம். |

## ॥ अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

| न<br>தெ. | विषयः<br>விஷயம். | पूर्वमीमांसा<br>பூர்வமீமாம்ஸை. | उत्तरमीमांसा (वेदांत)<br>உத்தரமீமாம்ஸை. (வேதாந்தம்) |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| ८<br>அ | मोक्षसाधनम्<br>மோக்ஷசாதநம். | वेदविहितं कर्म<br>வேதத்தில் விதித்தகர்மம். | ब्रह्मात्मैक्यज्ञानम्<br>ப்ரஹ்மஆத்ம ஒற்றுமை ஞாநம். |
| ९<br>௯ | अधिकारी<br>அதிகாரீ. | कर्मफलासक्तः<br>கருமத்தின் பயனில் பற்று ள்ளவன். | मलविक्षेपदोष-रहितःसाधनचतु-ष्टयसंपन्नः<br>மலவிக்ஷேப தோஷங்களற்று |

ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.

| | | | |
|---|---|---|---|
| न्यायः<br>நியாயம். | वैशेषिकः<br>வைசேஷிகம். | सांख्यम्<br>சாங்கியம். | योगः<br>யோகம். |
| 5 | 6 | 7 | 8 |
| इतरभिन्नात्म-<br>ज्ञानम्<br>பிறவற்றினின்று வேறுபட்ட ஆத்மாவின் ஞாநம். | इतरभिन्नात्म-<br>ज्ञानम्<br>பிறவற்றினின்று வேறுபட்ட ஆத்மாவின் ஞாநம். | प्रकृतिपुरुष-<br>विवेकः<br>பிரகிருதி புருஷர்களின் பிரிவினையறிவு. | निर्विकल्पक-<br>समाधिपूर्वको<br>विवेकः<br>நிர்விகற்பக ஸமாதியை முன்னிட்ட விவேகம். |
| दुःखजिहासुः<br>कुतर्की<br>துக்கங்களையகற்றவிரும்பும் குதர்க்க(க்காரன்)சீலன். | दुःखजिहासुः<br>कुतर्की<br>துக்கங்களையகற்றவிரும்பும் குதர்க்க(க்காரன்)சீலன். | संदिग्धविरक्तः<br>ஸம்சயத்துக்கிடமான வைராக்கியமுற்றவன். | विक्षिप्तचित्तः<br>சித்தவிக்ஷேபமுள்ளவன். |

|| अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ||

| न<br>நெ. | विषयः<br>விஷயம். | पूर्वमीमांसा<br>பூர்வமீமாம்ஸை. | उत्तरमीमांसा (वेदांत)<br>உத்தரமீமாம்ஸை. (வேதாந்தம்) |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| க | தொடர்ச்சி | ... | நால்வகை சாதநங்களும் பெற்றவன். |
| १० <br>கo | प्रकटयिता आचार्यः<br>வெளியிட்ட ஆசிரியர். | जैमिनिः<br>ஜைமிநி. | वेदव्यासः<br>வேதவியாஸர். |
| ११<br>கக | प्रधानकाण्डः<br>முக்கியமான காண்டம். | कर्मकाण्डः<br>கருமகாண்டம். | ज्ञानकाण्डः<br>ஞாநகாண்டம். |

ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.

| | | | |
|---|---|---|---|
| न्यायः<br>நியாயம். | वैशेषिकः<br>வைசேஷிகம். | सांख्यम्<br>சாங்கியம். | योगः<br>யோகம். |
| 5 | 6 | 7 | 8 |
| ... | ... | ... | ... |
| गौतमः<br>கௌதமர். | कणादः<br>கணாதர். | कपिलः<br>கபிலர். | पतञ्जलि<br>பதஞ்சலி. |
| ज्ञानकाण्डः<br>ஞானகாண்டம். | ज्ञानकाण्डः<br>ஞானகாண்டம். | ज्ञानकाण्डः<br>ஞானகாண்டம். | उपासनाकाण्डः<br>உபாஸநாகாண்டம். |

॥ अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

| न<br>தெ. | विषयः<br>விஷயம். | पूर्वमीमांसा<br>பூர்வமீமாம்ஸை. | उत्तरमीमांसा (वेदांत)<br>உத்தரமீமாம்ஸை. (வேதாந்தம்) |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| १२<br>கஉ | वादः<br>வாதம். | आरम्भवादः<br>ஆரம்பவாதம். | विवर्तवादः<br>விவர்த்தவாதம். |
| १३<br>கங | आत्मपरिमाण-संख्ये<br>ஆத்மாவின் பரிமாணமும் எண்ணும். | विभुः अनन्तः<br>வியாபகனும் கணக்கில்லாதவனும். | विभुः एकश्च<br>வியாபகனும் ஒருவனும். |
| १४<br>கச | प्रमाणानि<br>பிரமாணங்கள். | षट्<br>ஆறு. | षट्<br>ஆறு. |

## ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.

| | | | |
|---|---|---|---|
| न्यायः<br>நியாயம். | वैशेषिकः<br>வைசேஷிகம். | सांख्यम्<br>சாங்கியம். | योगः<br>யோகம். |
| 5 | 6 | 7 | 8 |
| आरम्भवादः<br>ஆரம்பவாதம். | आरम्भवादः<br>ஆரம்பவாதம். | परिणामवादः<br>பரிணமவாதம். | परिणामवादः<br>பரிணமவாதம். |
| विभुः अनन्तः<br>வியாபகனும் கணக்கில்லாதவனும். | विभुः अनन्तः<br>வியாபகனும் கணக்கில்லாதவனும். | विभुः अनन्तः<br>வியாபகனும் கணக்கில்லாதவனும். | विभुः अनन्तः<br>வியாபகனும் கணக்கில்லாதவனும். |
| प्रत्यक्षानुमानोपमानशब्दाः<br>பிரத்தியக்ஷம், அநுமாநம், உபமாநம், சப்தம் என்னும்நான்கு. | प्रत्यक्षानुमाने<br>பிரத்தியக்ஷம், அநுமாநம் என்னுமிரண்டு. | प्रत्यक्षानुमानशब्दाः<br>பிரத்தியக்ஷம், அநுமாநம், சப்தம் என்னும் மூன்று. | प्रत्यक्षानुमानशब्दाः<br>பிரத்தியக்ஷம், அநுமாநம், சப்தம்என்னும் மூன்று. |

## ॥ अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

| न<br>நெ. | विषयः<br>விஷயம். | पूर्वमीमांसा<br>பூர்வமீமாம்ஸை. | उत्तरमीमांसा (वेदांत)<br>உத்தரமீமாம்ஸை. (வேதாந்தம்) |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| १५<br>௧௫ | ख्यातिः<br>கியாதி. | अख्यातिः<br>அக்கியாதி. | अनिर्वचनीय<br>அநிர்வசநீயக் கியாதி. |
| १६<br>௧௬ | सत्ता<br>ஸத்தை. | जीवजगत्परमार्थ-सत्ता<br>ஜீவனும் உலகமும் பரமார்த்தத்தில் உண்டென்பது. | परमार्थरूपात्म-सत्ता जगतः व्यावहारिकी प्रातिभासिकी च सत्ता<br>பரமார்த்தத்தில் ஆத்மா உண்டென்பதும், |

ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.

| | | | |
|---|---|---|---|
| न्यायः<br>நியாயம். | वैशेषिकः<br>வைசேஷிகம். | सांख्यम्<br>சாங்கியம். | योगः<br>யோகம். |
| 5 | 6 | 7 | 8 |
| अन्यथा<br>அந்யதாக்கியாதி. | अन्यथा<br>அந்யதாக்கியாதி. | अख्याति<br>அக்கியாதி. | अख्याति<br>அக்கியாதி. |
| जीवजगत्पर-मार्थसत्ता<br>ஜீவனும் உலகமும் பரமார்த்தத்தில் உண்டென்பது. | जीवजगत्पर-मार्थसत्ता<br>ஜீவனும் உலகமும் பரமார்த்தத்தில் உண்டென்பது. | जीवजगत्पर-मार्थसत्ता<br>ஜீவனும் உலகமும் பரமார்த்தத்தில் உண்டென்பது. | जीवजगत्पर-मार्थसत्ता<br>ஜீவனும் உலகமும் பரமார்த்தத்தில் உண்டென்பது. |

## ॥ अथ षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

| न<br>நெ. | विषयः<br>விஷயம். | पूर्वमीमांसा<br>பூர்வமீமாம்ஸை. | उत्तरमीमांसा (वेदांत)<br>உத்தரமீமாம்ஸை. (வேதாந்தம்) |
|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 |
| கசு | தொடர்ச்சி. | ... | உலகம் விவகாரத்திலும் தோற்றத்திலும் உண்டென்பதும். |
| १७<br>கஎ | उपयोगः<br>உபயோகம். | चित्तशुद्धिः<br>சித்தசுத்தி. | तत्त्वज्ञानपूर्वको मोक्षः<br>தத்துவஞானத்தை முன்னிட்ட மோக்ஷம். |

## ॥ इति षट्दर्शनसारदर्शकपत्रकम् ॥

## ॥ समाप्तम् ॥



ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்.

| | | | |
|---|---|---|---|
| न्यायः<br>நியாயம். | वैशेषिकः<br>வைசேஷிகம். | सांख्यम्<br>சாங்கியம். | योगः<br>யோகம். |
| 5 | 6 | 7 | 8 |
| ... | ... | ... | ... |
| मननम्<br>மநநம். | मननम्<br>மநநம். | त्वंपदार्थशोधनम्<br>'நீ' என்னும் சொற்பொருளின் ஆராய்ச்சியறிவு. | चित्तैकार्ग्यम्<br>சித்தம் ஒருமுனைப்படுதல். |

ஆறுதர்சநங்களின் ஸாரத்தைக்காட்டும் பத்திரம்

முற்றிற்று.







ஓம் கணேசாய நம:

# ஸ்ரீ விசாரசந்திரோதயம்.

## முதற்கலை.

### மங்கலம்.

ஐங்கரனல் வாணிபருட் குரவ னம்மையெழிற்
சங்கரனு மாவார் சரண்.

அந்தமி லின்ப மேதன் னருளினா லுருவு
கொண்டு, பந்தம தொழியும் வண்ணம் படியி
னிலுள்ளார் யார்க்குஞ், சந்தத மின்ப முட்டுஞ்
சங்கரப் பெயராற் றோன்றிற், றந்தநற் பொரு
ளின் பாத மநுதினஞ் சிந்தை செய்வாம். (௧)

இந்திரை மணாளப் பேரெம் மெழிற்குரு சர
ணம் போற்றி, யிந்திரன் முதலா னோர்க் ளெய்
திடற் கரிய தாய, சுந்தரப் பொருளைச் செவ்வே
துலக்கிடு நல்வி சார, சந்திரோ தயமா நூலைச்
சாற்றுவன் றமிழில் யார்க்கும். (௨)

## * க. உபோற்காதவர்ணநம்.

புருடன திச்சைக்கு விடயமா மதனைப்
புருடார்த்த மென்பர் புலவர்க ளதுதான்
றுன்ப வொழிவு மின்ப வடைவுமா
மோக்ஷம தென்று மொழியப் படுமப்
பிரம வுணர்ச்சியே யதன்கா ரணமது
பரோக்ஷமோ டபரோக்ஷ மென்றிரு கூறு
மபரோக்ஷ மிடர் திடமென் றிரண்டாந்
திடமே நேரின் முத்திகா ரணமா
மத்திட வுணர்ச்சிக் கேது வான்மா
பிரம முலகெனு மிவற்றின் விசார
மூவகைப் பொருளுஞ் சிற்சடத் தடங்கு
மித்தையா மாயை ஜடமே யாகலிற்
பிரமஞ் சித்தது நானெனக் கொள்ளே. (க)

---

* க. சொல்லத்தக்க அர்த்தத்தை மனதில்வைத்துக் கொண்டு அதன்பொருட்டு அந்நிய அர்த்தத்தைச் சொல்லுதல் உபோற்காதமாம். ஒருவனுக்கு அந்நியன் வீட்டிலிருந்து மோர் வாங்கவேண்டியிருக்குமானால், அப்போது அவன் அந்த வார்த்தையை மனதில் வைத்துக்கொண்டு, அதன்பொருட்டு "உங்கள் பசு பால் கறக்கிறதா? இல்லையா?" என்னு மிவைமுதலிய அந்நியவார்த்தைகளைச் சொல்லுதல் உபோற்காதம். அதுபோல இங்கே சொல்லத்தக்க விசாரத்தை மனதில் வைத்துக்கொண்டு, அதன் ஆரம்பத்தின்பொருட்டு அந்நியமாகிய

க. வி௵:—புருஷார்த்தமென்பது யாது?

விடை:—சகல புருஷர்களின் இச்சைக்கும் எது விஷயமோ அது *உ. புருஷார்த்தமாம்.

உ. வி௵:—சகல புருஷர்களுக்கும் எதில் இச்சையுண்டாகிறது?

விடை:—சகலபுருஷர்களுக்கும் சர்வதுக்க நிவிருத்தி பரமாநந்தப்பிராப்தியில் இச்சையுண்டாகிறது.

௩. வி௵:—சர்வதுக்கநிவிருத்தி பரமாநந்தப்பிராப்தி யென்பது யாது?

விடை:—சர்வ *௩. துக்க *௪. நிவிருத்தி

---

மோக்ஷமுதலிய பதார்த்தங்களைக் கூறுதல் உபோற்காதம். உபோற்காதம் = பாயிரம்.

* உ. அறம் பொருள் இன்பம் வீடு என்னும் இந்நான்கிற்கும் புருஷார்த்த மென்று பெயர். அவற்றுள் முதல்மூன்றும் கௌணமாகையால் அவற்றை விட்டு, இங்கே கடைசியாகிய முக்கியபுருஷார்த்தம் கொள்ளப்பட்டது. (முக்கியமல்லாதது கௌணம்). புருஷர்களால் அர்த்திக்கப்படுவது அதாவது விரும்பப்படுவது புருஷார்த்தம் என்பது பதப்பொருள்.

* ௩. அஞ்ஞானத்தோடு ஜனனமரணாதிகள் துக்கமெனப்படும்.

* ௪. மித்தியாத்வ (பொய்யென்னும்) நிச்சயமாகிய பாதம் நிவிருத்தி யெனப்படும்.

*௬. பரமாநந்தப் *௬. பிராப்தியென்பது
*எ. மோக்ஷத்தின் சொரூபம்.

---

* ௫. பரமப்பிரேமையின் (மிகுந்த பிரியத்தின்) விஷயம் பரமாநந்தமாம்.

"परप्रेमास्पदतया मानभूवमहं सदा भूयासमिति यो दृष्टस्सोहं विष्णुर्मुनीश्वर.

முனீசுவர! எது யான் இல்லாதிருக்கலாகாது எப்போதுமிருக்கவேண்டும் என்று மேலானபிரியத்திற்கு விஷயமாந்தன்மையாகக் காணப்படுகின்றதோ, அதுவே விஷ்ணுவாகிய யான்." என்னும் வராகசுருதியால் பரமாநந்தம் பிரஹ்மமாகிய ஆத்மாவாம்.

* ௬. இங்கே காணாதுதேடியபோது கிடைத்தகழுத்திலுள்ள ஆபரணத்தைப்போன்ற நித்தியப்பிராப்தத்தின்பிராப்தி (என்றும் அடையப்பட்டுள்ளதன் அடைவு) ஒப்பப்பட்டிருக்கிறது.

* எ. "स्वरूपावस्थितिर्मुक्तिः

தனது ரூபமாக நிலைத்தல் மோக்ஷம்" என்னும் மகோபநிஷதமாகியசுருதியினால் கர்த்திருத்துவபோக்திருத்துவாதி வேற்றுத்தன்மையை விட்டுத் தனது சொரூபமாக நிலைத்திருத்தல் மோக்ஷமாம். சில ஜனங்கள் சொர்க்கம் வைகுந்தம் கோலோகம் பிரஹ்மலோகமுதலியவற்றின் பிராப்தியை மோக்ஷமென அறிகின்றார்கள்; அது வேதவிரோதமாம்.

ச. வினு:—மோக்ஷம் எதனு லுண்டாம்?

விடை:—மோக்ஷம் *அ. பிரஹ்மஞானத்தா லுண்டாம்.

---

* அ. கர்ம உபாசனைகளினுல் சித்தசுத்தியும் ஏகாக்கிரத்தன்மையுமாகிய ஞானசாதனங்கள் உண்டாம்; மோக்ஷமுண்டாகாது.

"ब्रह्मविदाप्नोति परम्.

பிரஹ்மத்தை யறிந்தவன் பரத்தை யடைகின்றுன்." என்னும் தைத்திரீயம்,

"ज्ञात्वा देवं मुच्यते सर्वपाशैः

தெய்வமாகிய பிரஹ்மத்தை யறிந்து சகலபாசங்களினின்றும் விடுபடுகின்றுன்." என்னும் சுவேதாசுவதரம்,

"ब्रह्मवेदनमात्रेण ब्रह्माप्नोत्येव मानवः

மனிதன் பிரஹ்மஞானமாத்திரத்தால் பிரஹ்மத்தை யடையவே செய்கின்றுன்." என்னும் கடோபநிஷத்து,

"अद्वितीयब्रह्मतत्त्वं न जानन्ति यथा तथा।
भ्रांताः एवाखिलास्तेषां क्व मुक्तिः केह वा सुखम्॥

அத்விதீயபிரஹ்மதத்துவத்தை உள்ளபடியே அறியாதவர்கள் யாவரும் பிராந்தர்களே. அவர்களுக்கு முக்தி

யேது? இம்மையிற்றான் சுகமேது?" என்னும் வாராகோபநிஷத்து,

"यदा पश्यति चात्मानं केवलं परमार्थतः ।
मायामात्रं जगत्कृत्स्नं तदा भवति निर्वृतिः ॥

எப்போது பரமார்த்தமாய் ஆத்மாவைக் கேவல(ஏக)மாகவும், ஜகத்து முழுவதையும் மாயாமாத்திரமாகவும் காண்கின்றானோ, அப்போது பரமாநந்த முண்டாகின்றது." என்னும் தர்சனோபநிஷத்து,

"यस्मिन्सर्वाणि भूतान्यात्मैवाभूद्विजानतः ।
तत्र को मोहः कः शोक एकत्वमनुपश्यतः ॥

எதில் விசேஷமாயறிதலால் எல்லாப்பூதங்களும் ஆத்மாவே யாயிற்றோ, அங்கு ஒருமையையறிபவனுக்கு மோக மேது? சோக மேது? (இல்லை யென்றபடி)" என்னும் ஈசாவாஸ்யோபநிஷத்து,

"विद्यया विन्दतेऽमृतम्.

வித்தையினால் அமிர்த(மோக்ஷ)த்தை யடைகிறான்." என்னும் கேனோபநிஷத்து,

"यस्तु विज्ञानवान् भवति समनस्कः सदा शुचिः ।
स तु तत्पदमाप्नोति यस्माद्भूयो न जायते ॥"

"यज्ज्ञात्वा मुच्यते जन्तुरमृतत्वं च गच्छति ॥"

ரு. வினு:—பிரஹ்மஞானமென்பது யாது?

விடை:—பிரஹ்மஞானமென்பது பிரஹ்ம சொரூபத்தை யதார்த்தமாக அறிதல்.

சு. வினு:—பிரஹ்மஞானம் எத்தனை வகையாம்?

விடை:—பிரஹ்மஞானம் பரோக்ஷம் அபரோக்ஷம் என்னும் பேதத்தால் இரண்டுவகையாம்.

எ. வினு:—பரோக்ஷப்பிரஹ்மஞானமென்பது யாது?

---

"எவன் மனம் வசப்பட்டவனுய், எப்போதும் சுசியாய், விஞ்ஞானமுடையவனுயிருக்கிறனே, அவன் எதனினின்றும் மறுபடியும் பிறக்கிறதில்லையோ, அப்பதத்தினை அடைகின்றான்." "எதனை (பரமாகியபுருஷனை) அறிந்து, ஜந்துவானவன் சம்ஸாரத்தினின்று விடுபடுகின்றனே, அமிர்தத்தன்மையினையு மடைகின்றனே," எனபன முதலிய கடவல்லியுபநிஷத்து,

"अज्ञानादेव संसारो ज्ञानादेव विमुच्यते.

அஞ்ஞானத்தினுலேயே சம்ஸாரம் ஞானத்தினுலேயே விடுபடுகின்றான்." என்பது யோகதத்வோபநிஷத்து.

ஆகிய இவை முதலிய சுருதிகளால் பிரஹ்மாபின்ன ஆத்மாவின் ஞானமே மோக்ஷத்திற்கு எதுவாம்.

விடை:—(க. சொரூபம்) "சச்சிதாநந்தமாகிய பிரஹ்மம் இருக்கிறது" என்று அறிதல் * கூ. பரோக்ஷப்பிரஹ்மஞானமாம்.

அ. வினா:—பரோக்ஷப்பிரஹ்மஞானம் எதனு லுண்டாம்?

விடை:—(உ. ஏது) சற்குருசற்சாத்திரவசனங்களில் விசுவாசம்வைத்தலால் பரோக்ஷப்பிரஹ்மஞான முண்டாம்.

கூ. வினா:—பரோக்ஷப்பிரஹ்மஞானத்தால் உண்டாவது யாது?

விடை:—(ந. பலம்) *கo. அசத்துவாபாதக ஆவரணத்தின் நிவிருத்தி யுண்டாம்

---

*கூ. "अस्ति ब्रह्मेति चेद्वेद परोक्षज्ञानमेव तत्
பிரஹ்மம் இருக்கிறது என்று அறியின், அதுபரோக்ஷஞானமேயாம்." என்பது வராகோபநிஷத்து. இப்பரோக்ஷஞானம் "தத்துவமஸி" மகாவாக்கியத்திலுள்ள "தத்" என்னும் பதத்தின் அர்த்தத்தை அறிவிக்கிறது. ஆகையால் அது அபரோக்ஷ அத்வைதஞானத்தில் உபயோகமுள்ளதாம்.

* கo. "பிரஹ்மமில்லை" என்பதாகப் பிரஹ்மத்தினது அசத்தத் (இல்லையெனும்) தன்மையை ஆபாதகஞ்செய்யும் (சம்பாதிக்கும்) ஆவரணம் (மறைப்பு) அசத்துவாபாதகஆவரணமாம்.

௧0. வினா:—பரோக்ஷப்பிரஹ்மஞானம் எப்போது பூரணமாகும்?

விடை:—(௪. அவதி) பரோக்ஷப்பிரஹ்மஞானம் பிரஹ்மநிஷ்டகுரு வேதாந்தசாஸ்திராநுசாரமாகப் பிரஹ்மசொரூபத்தை நிச்சயஞ்செய்யப் பூரணமாகும்.

௧௧. வினா:— அபரோக்ஷப்பிரஹ்மஞானமென்பது யாது?

விடை:— (௧. சொரூபம்) "சச்சிதாநந்தமாகிய பிரஹ்மம் நான்" என்று அறிதல் * ௧௧. அபரோக்ஷப்பிரஹ்மஞானமாம்.

௧௨. வினா:—அபரோக்ஷப்பிரஹ்மஞானம் எதனாலுண்டாம்?

விடை:—(௨. ஏது) "आचार्यवान् पुरुषो वेद

ஆசாரியனையுடைய புருஷன் அறிகிறான்." என்னும் சாந்தோக்கியசுருதியினால் குருமுகமாகத் "தத்துவமஸி" முதலிய மகாவாக்கியத்

---

* ௧௧. "अहं ब्रह्मेति चेद्वेद साक्षात्कारस्स उच्यते

யான் பிரஹ்மம் என்று அறியின், அது சாக்ஷாத்காரம் அதாவது அபரோக்ஷஞான மெனப்படும்" என்பது வராகோபநிஷத்து.

தின் சிரவணத்தால் அபரோக்ஷப்பிரஹ்மஞான முண்டாம்.

கந. வினா:— அபரோக்ஷப்பிரஹ்மஞானம் எத்தனை வகையாம்?

விடை:—அபரோக்ஷப்பிரஹ்மஞானம் அதிடம் (உறுதியில்லாதது) திடம் (உறுதியானது) என்னும் பேதத்தால் இரண்டுவகையாம்.

கச, வினா:—அதிடஅபரோக்ஷப்பிரஹ்மஞானமென்பது யாது?

விடை:-(க. சொரூபம்) *கஉ. அசம்பாவனை

---

* கஉ. க. வேதாந்தத்தில் ஜீவப்பிரஹ்மங்களின் பேதம் பிரதிபாதிக்க(சொல்ல)ப்பட்டிருக்கின்றதா? அல்லது அபேதம் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றதா? என்பது பிரமாணகதசமுசயம்.

உ. "ஜீவப்பிரஹ்மங்களின் பேதம் சத்தியமா? அல்லது அபேதம் சத்தியமா?" என்பது பிரமேயகதசமுசயம்.

இவ்விருவகைச்சமுசயமும் அசம்பாவனை யெனப்படும். சமுசயம்=ஐயம். அது இரண்டு(பல)கோடி (பக்ஷங்)களையுடைய ஞானம். அசம்பாவனையினை அபேதமுதலியன சம்பவியாமை (பொருந்தாமை)லக்ஷணமெனக்கொண்டு சம்சயத்தினும் வேறெனக் கொள்வதுமுண்டு.

* கங. விபரீதபாவனைகளோடு உண்டாகும் பிரஹ்மாத்மஐக்கியநிச்சயம் அதிடஅபரோக்ஷப் பிரஹ்மஞானமாம்.

கரு. வி:—அதிட அபரோக்ஷப்பிரஹ்மஞானம் எதனாலுண்டாகும்?

விடை:—(உ. எது) க. சிறிது *கச. மலவிக்ஷேபதோஷ முளதாகச் சுருதிநாநாத்துவத்தின் ஞானமும்,

உ. பிரஹ்மத்தின் அத்வைதத்தன்மையின் அநுபவஞானமும்,

ங. பேதவாதிபாமரபுருஷர்களது சங்கத்தின் சம்ஸ்காரமும்

ஆகிய இவற்றோடுகூடிய புருஷனுக்குக் குருமுகமாக மகாவாக்கியசிரவணத்தால் அதிடஅபரோக்ஷஞானம் உண்டாம்.

கசு. வி:—அதிடஅபரோக்ஷஞானத்தால் உண்டாவது யாது?

---

கங. "ஜீவப்பிரஹ்மங்களின் பேதமும் சத்தியம்; தேகாதிப்பிரபஞ்சமும் சத்தியம்." என்னும் விபரீதநிச்சயம் விபரீதபாவனையாம். விபரீதம்=திரிபு.

*கச. மலம்=பாபம் விக்ஷேபம்=சித்தத்தின் சஞ்சலத்தன்மை.

தின் சிரவணத்தால் அபரோக்ஷப்பிரஹ்மஞான முண்டாம்.

௧௩. வினா:— அபரோக்ஷப்பிரஹ்மஞானம் எத்தனை வகையாம்?

விடை:—அபரோக்ஷப்பிரஹ்மஞானம் அதிடம் (உறுதியில்லாதது) திடம் (உறுதியானது) என்னும் பேதத்தால் இரண்டுவகையாம்.

௧௪. வினா:—அதிடஅபரோக்ஷப்பிரஹ்மஞானமென்பது யாது?

விடை:-(௧. சொரூபம்) *௧௨. அசம்பாவனை

---

*௧௨. ௧. வேதாந்தத்தில் ஜீவப்பிரஹ்மங்களின் பேதம் பிரதிபாதிக்க(சொல்ல)ப்பட்டிருக்கின்றதா? அல்லது அபேதம் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றதா? என்பது பிரமாணகதசமுசயம்.

௨. "ஜீவப்பிரஹ்மங்களின் பேதம் சத்தியமா? அல்லது அபேதம் சத்தியமா?" என்பது பிரமேயகதசமுசயம்.

இவ்விருவகைச்சமுசயமும் அசம்பாவனை யெனப்படும். சமுசயம்=ஐயம். அது இரண்டு(பல)கோடி (பக்ஷங்)களையுடைய ஞானம். அசம்பாவனையினை அபேதமுதலியன சம்பவியாமை (பொருந்தாமை)லக்ஷணமெனக்கொண்டு சம்சயத்தினும் வேறெனக் கொள்வதுமுண்டு.

* ௩௩. விபரீதபாவனைகளோடு உண்டாகும் பிரஹ்மாத்மஐக்கியநிச்சயம் அதிடஅபரோக்ஷப் பிரஹ்மஞானமாம்.

௩௫. வினா:—அதிட அபரோக்ஷப்பிரஹ்மஞானம் எதனாலுண்டாகும்?

விடை:—(௨. எது) ௧. சிறிது *௩௪. மலவிக்ஷேபதோஷ முளதாகச் சுருதிநாநாத்துவத்தின் ஞானமும்,

௨. பிரஹ்மத்தின் அத்வைதத்தன்மையின் அசம்பவஞானமும்,

௩. பேதவாதிபாமரபுருஷர்களது சங்கத்தின் சம்ஸ்காரமும்

ஆகிய இவற்றோடுகூடிய புருஷனுக்குக் குருமுகமாக மகாவாக்கியசிரவணத்தால் அதிடஅபரோக்ஷஞானம் உண்டாம்.

௩௬. வினா:—அதிடஅபரோக்ஷஞானத்தால் உண்டாவது யாது?

---

௩௩. "ஜீவப்பிரஹ்மங்களின் பேதமும் சத்தியம்; தேகாதிப்பிரபஞ்சமும் சத்தியம்." என்னும் விபரீத நிச்சயம் விபரீதபாவனையாம். விபரீதம்=திரிபு.

*௩௪. மலம்=பாபம் விக்ஷேபம்=சித்தத்தின் சஞ்சலத்தன்மை.

விடை :—(ரு. பலம்) அதிடஅபரோக்ஷஞானத்தால் க. உத்தமலோகப்பிராப்தியும், உ. புனிதமாகிய ஸ்ரீமான்களது குலத்திலேனும் அல்லது நிஷ்காமத்தன்மையால் ஞானவான்களது குலத்திலேனும் ஜன்மமுண்டாம்.

கஎ. வின:—அதிடஅபரோக்ஷஞானம் எப்போது பூரணமாகும்?

விடை :—(சு. அவதி) சத்து சித்து ஆநந்த முதலிய பிரஹ்மவிசேஷணங்களின் அபரோக்ஷ ஞானம் உண்டாகியும் சமுசயவிபரீதபாவனைகளிருக்குமாயின், அப்போது அதிட அபரோக்ஷ ஞானம் பூரணமாகும்.

கஅ. வின :—திட அபரோக்ஷஞானமென்பது யாது?

விடை:—(க. சொரூபம்) அசம்பாவனை விபரீதபாவனைகளில்லாமல் உண்டாகும் பிரஹ்மாத்ம ஐக்கியநிச்சயம் திடஅபரோக்ஷப்பிரஹ்மஞானமாம்.

கக. வின :—திடஅபரோக்ஷப்பிரஹ்மஞானம் எதனாலுண்டாம்?

விடை:—(உ. ஏது) குருமுகமாக *கரு. மகாவாக்கியஅர்த்தத்தின் சிரவணமனனநிதித்தியாசனமாகியவிசாரம் செய்வதால் திடஅபரோக்ஷப்பிரஹ்மஞான முண்டாம்.

உ௦. வினா:—திடஅபரோக்ஷஞானத்தால் உண்டாவது யாது?

விடை:—(ங. பலம்) *கசு. அபானுபாதக ஆவரணமும் *கள. விக்ஷேபமுமாகிய காரியத்தோடு அவித்தையி (அஞ்ஞானத்தி)ன் நிவிருத்தியுண்டாய்ப் பிரஹ்மப்பிராப்தியாகிய மோக்ஷமுண்டாம்.

உக. வினா:—திடஅபரோக்ஷஞானம் எப்போது பூரணமாகும்?

---

*கரு. ஜீவப்பிரஹ்மங்களின் ஐக்கியத்தை (ஆத்மாவும் பிரஹ்மமும் ஒன்று என்னுந் தன்மையை) அறிவிக்கும் வாக்கியம் மகாவாக்கியம்.

*கசு. "பிரஹ்மம் தோற்றவில்லை" என்பதாக அபானமாகிய பிரஹ்மத்தின் அப்பிரதீதி (தோற்றாமை) யை ஆபாதகஞ்செய்யும் (சம்பாதிக்கும்) ஆவரணம் அபானுபாதகஆவரணமாம்.

*கள. ஸ்தூலசூக்ஷமசரீரத்தோடு கூடிய சிதாபாசனும், அவனது தருமமாகிய கருத்திருத்துவ போக்திருத்துவ ஜனனமரணாதிகளும் விக்ஷேபமாம்.

விடை:—(ச. அவதி) தேகத்திலுள்ள நானென்னும் ஞானத்தைப் பாதித்து, இதைப்போலப் பிரஹ்மாபின்னமாகிய ஆத்மாவில் எப்போது ஞானமுண்டாகுமோ, அப்போது திடஅபரோக்ஷஞானம் பூரணமாகும்.

உஉ. வினா:—விசாரமென்பதுயாது?

விடை:—(க. சோரூபம்) ஆத்மாநாத்மாக்களை வேறுபிரித்தறிதல் விசாரமாம்.

உங. வினா:—இந்த விசாரம் எதனாலுண்டாகும்?

விடை:—(உ. ஏது) இந்த விசாரம் ஈசுவரன், வேதம், குரு, தனது அந்தக்கரணம் என்னும் *கஅ. இந்நான்கன் கிருபையாலுண்டாகும்.

---

* கஅ. க. சற்குருமுதலிய ஞானசாமக்கிரி (சாதனங்) களின் பிராப்தி ஈசுவரகிருபை.

உ. சாஸ்திரார்த்தத்தின் தாரண (ஞாபக) சக்தி வேதகிருபை.

ங. சாஸ்திராநுசாரமாகவும் தனது அநுபவாநுசாரமாகவும் யதார்த்த உபதேசத்தைச் செய்தல் குருகிருபை.

ச. சாஸ்திராநுசாரமாகவும் குருவாக்கியாநுசாரமாகவும் சாதனங்களைச்சம்பாதித்தல் தனது அந்தக்கரணத்

உச. வினு:—இந்த விசாரத்தாலுண்டாவது யாது?

விடை:—(ரு. பலம்) *கக. இந்த விசாரத்தால் திடஅபரோக்ஷஞானம் உண்டாம்.

---

தின்கிருபை. குருகிருபை வேண்டுமென்பது மகோபநிஷத்தின் ச-வது அத்தியாயத்திலும், மகாநாராயணோபநிஷத்தின் ரு-வது அத்தியாயத்திலும், பிரஹ்மவித்தியோபநிஷத்திலும், அத்வயதாரகோபநிஷத்திலும், அந்தக்கரணக்கிருபை வேண்டுமென்பது,

"चित्तस्य हि प्रसादेन हन्ति कर्म शुभाशुभम् ।
प्रसन्नात्मात्मनि स्थित्वा सुखमव्ययमश्नुते ॥

சித்தத்தின் பிரசாதத்தினுலேயே சுபாசுபமான கர்மத்தினைக் கெடுக்கின்ருன். பிரசன்னுந்தக்கரண முடையவன் ஆத்மாவில் நிலைத்து அவ்யயசுகத்தை யநுபவிக்கின்ருன்." என்று மைத்திராயணியுபநிஷத்தின் ச-வது பிரபாடகத்திலும், மைத்திரேயோபநிஷத்தின் முதலத்தியாயத்திலும் கூறியிருத்தல் காண்க ஈசுவர கிருபையும் வேதகிருபையும் வேண்டுமென்பது பிரசித்தம்.

* கக. "अविचारकृतो बंधो विचारान्मोक्षो भवति । तस्मात्सदा विचारयेत् । अध्यारोपापवादतस्स्वरूपं निश्चयीकर्तुं शक्यते ॥

உரு. வின :—இந்த விசாரம் எப்போது பூரணமாகும்?

விடை :—(ச. அவதி) இந்த விசாரம் திடஅபரோக்ஷஞான முண்டாகுமாயின் பூரணமாகும்.

உசு. வின :—எதை விசாரிக்கவேண்டும்?

விடை :—(ரு. விஷயம்) க. நான் யார்? உ. பிரஹ்மமென்பது யாது? ந. பிரபஞ்சமென்பது யாது? என்று *உ0. இம்மூன்று வஸ்துக்களையும் விசாரிக்கவேண்டும்.

உஎ. வின :—இம்மூன்று வஸ்துக்களின் சாதாரணவடிவம் யாது?

---

அவிசாரத்தினலாகியது பந்தம், விசாரத்தினல் (திடாபரோக்ஷஞானவாயிலாக) மோக்ஷ முண்டாகின்றது. ஆதலால் எப்போதும் விசாரிக்கவேண்டும். அத்தியாரோபாபவாதத்தினல் சொரூபம் (தனதுவடிவம்)நிச்சயஞ்செய்யக்கூடியதாம்." என்னும் பைங்கலசுருதியினல் விசாரமே ஞானவாயிலாக மோக்ஷஹேது வென்பது பெறப்படுகின்றது.

* உ0. "तस्मात्सदा विचारयेज्जगज्जीवपरमात्मनः॥

ஆதலால், ஜகத்து ஜீவன் பரமாத்மா இம்மூன்றையும் எப்போதும் விசாரிக்கவேண்டும்." என்பது பைங்கலசுருதி.

விடை :—"க. நானும், உ. பிரஹ்மமும், சைதன்னியம்; ந. *உக. பிரபஞ்சம் ஜடம்."

உஅ. வினா :—சைதன்னிய மென்பதுயாது?

விடை :—

(க) எது ஞானவடிவமாய்,

(உ) சகல கடாதிப் பிரபஞ்சங்களையும் அறிகிறதோ,

(ந) எதை அந்நியமாகிய மன இந்திரியாதிகளெவையும் அறியமாட்டாவோ,

அது சைதன்னியம்.

உகூ. வினா :—ஜடமென்பது யாது?

விடை :—

(க) தன்னை யறியாததும்,

(உ) மற்றவைகளை யறியாததுமான

* உக. சமஷ்டி வியஷ்டி ஸ்தூல சூக்ஷ்ம காரண தேகங்களும், அவற்றின் அவஸ்தைகளும், தர்மங்களும் பிரபஞ்ச மெனப்படும்.

*௨௨. அஞ்ஞானமும், அதனது காரியமாகிய *௨௩. பூத *௨௪. பௌதிகபதார்த்தங்களும் ஜடமாம்.

௩௦. வின:—மேற் கூறப்பட்ட மூன்று வஸ்துக்களின் விசாரம் எந்தவிதமாக உபயோகப்படும்?

விடை:—(௩. உபயோகம்) ௧. "தத்துவமஸி" மகாவாக்கியத்திலுள்ள "துவம்" பத "தத்" பதங்களின் வாச்சியார்த்தமாகிய *௨௫. ஜீவ *௨௬. ஈசுவரர்களது *௨௭. உபாதியாகிய

---

*௨௨. "யான் அறியேன்" என்னும் வியவகாரத்திற்கு ஏதுவாகிய ஆவரணவிக்ஷேபசக்திகளையுடைய அநாதிஸ்வரூபம் அஞ்ஞானம்.

*௨௩. ஆகாசமுதலிய ஐந்தும் பூதம்.

*௨௪. பூதங்களின் காரியமாகிய பிண்டப்பிரஹ்மாண்டாதிகள் பௌதிகம்.

*௨௫. சிதாபாசனோடுகூடிய அந்தக்கரணத்தோடுகூடஸ்தசைதன்னியம் ஜீவன்.

*௨௬. சிதாபாசனோடுகூடிய மாயையோடு பிரஹ்மசைதன்னியம் ஈசுவரன்.

*௨௭. எது தனது ஆசிரயத்தின் சொரூபத்திற்பிரவேசியாமல், அதனைப் பிறவற்றினின்றும் வேறுபடுத்தறிவிக்கின்றதோ அது உபாதியாம். அது கடம் தனது

*உஅ. பிரபஞ்சத்தைப் பழுதையில் பாம்புபோலும், கட்டையில் புருஷன்போலும், மருபூமியில் கானற்சலம்போலும் விசாரத்தால் மித்தையென வறிந்து நீக்குதல் பிரபஞ்சவிசாரத்தின் உபயோகமாம்.

உ. "யானாகிய ("துவம்" பதலக்ஷியார்த்த) ஆத்மா, அந்த ("தத்" பதலக்ஷியார்த்த)ப் பிரஹ்மமாயிருக்கிறேன்," என்று *உகூ. பிரஹ்மாத்ம ஐக்கியத்தை விசாரத்தினால் சத்தியமென்றறிந்துமிஞ்சவைத்தல், "நான்யார்?"

---

ஆசிரயமாகிய ஆகாயத்தின் சொரூபத்தில் பிரவேசியாது, அக்கடாகாயத்தைப் பிற மகாகாயமுதலியவற்றினின்றும் வேறுபிரித்தறிவித்தலால் உபாதியாதல் போலவாம்.

* உஅ. சமஷ்டிவியஷ்டியாகிய மூன்றுசரீரம், பஞ்சகோசம், மூன்றவஸ்தைமுதலிய நாமரூபங்கள் பிரபஞ்சமெனப்படும்.

*உகூ. "जीवभावजगद्भाववाधे प्रत्यगभिन्नब्रह्मैवावशिष्यते ॥

ஜீவத்தன்மைஜகத்தன்மைகளை யறிந்தகாலத்தில் பிரத்தியகபின்னபிரஹ்மமே மிஞ்சுகின்றது." என்னும் பைங்கலசுருதியினால் பிரஹ்மாத்மவைக்கியம் மிஞ்சுதல் காண்க.

"பிரஹ்ம மென்பது யாது?" என்னும் விசாரத்திற்கு உபயோக (பல) மாம்.

ஙக. வினா:—இந்த விசாரத்திற்கு அதிகாரி யாவன்? அவன் என்ன செய்யவேண்டும்?

விடை:—(எ. விசாரத்தினதிகாரி) க. இந்த விசாரத்திற்கு அதிகாரி *ஙo. உத்தமஜிஞ்ஞாசு. உ. அவன் சற்குருகிருபையால் உபோற்காதமுதலிய *ஙக. பிரக்கிரியைகளை விசாரித்து, "நான்தானே பிரஹ்மமாயிருக்கிறேன்" என்று பிரஹ்மாத்மாவைஅபரோக்ஷமாக அறியவேண்டும்.

ஙஉ. வினா:—அந்தப்பிரக்கிரியைகளின்பெயர்களவை.

---

*ஙo. விவேகம், வைராக்கியம், ஷட்சம்பத்தி, முமுக்ஷுத்துவம் என்னு மிந்நான்கு சாதனங்களோடு கூடினவனும், பிரஹ்மநிஷ்டராகிய குருவினது வாக்கியத்திலும் வேதாந்தசாஸ்திரத்திலும் பரமவிசுவாசமுடையவனும், ஒருபோதும் குதர்க்கஞ்செய்யாதவனும், சொருபத்தை அறியவேண்டு மென்னும் தீவிர இச்சையுள்ளவனுயு மிருக்கும் அதிகாரி உத்தமஜிஞ்ஞாசு (ஞானவிருப்பமுள்ளவன்).

* ஙக. அத்வைதத்தைப் போதிக்கும் யாதேனும் ஓர் பிரகாரம் (விதம்) பிரக்கிரியையாம்.

விடை:—

க. உபோற்காதம்.

உ. பிரபஞ்சத்தின் ஆரோப அபவாதங்கள்.

ந. தேக மூன்றற்கும் நான் திருஷ்டா (பார்க்கிறவன்).

ச. நான் பஞ்சகோசாதீதன்.

ரு. அவஸ்தை மூன்றற்கும் நான் சாக்ஷி.

சு. பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மை.

எ. ஆத்மாவின் விசேஷணம்.

அ. சச்சிதாநந்தவிசேஷவர்ணநம்.

கூ. அவாச்சியசித்தாந்தவர்ணநம்.

க0. சாமானியசைதன்னியம்; விசேஷசைதன்னியம்.

கக. "தத்" பத "துவம்" பதங்களின் வாச்சியார்த்தலக்ஷியார்த்தங்களும்; அவ்விரண்டுலக்ஷியார்த்தங்களினது ஐக்கியமும்.

கஉ. ஞானியின் கர்மநிவிருத்தி.

கந. ஞானபூமி ஏழு.

கச. ஜீவன்முக்தி விதேகமுக்தி.

கரு. வேதாந்தப்பிரமேயம்.

கசா. வேதாந்தபதார்த்தங்களின்பெயர் அல்லது இலகுவேதாந்தகோசம்.

இவை *ஙஉ. அந்தப் பிரகிரியைகளின் பெயர்களாம்.

## ஸ்ரீ விசாரசந்திரோதயம் முதற்கலை
### உபோற்காதவர்ணநம்
### முற்றிற்று.

---

*ஙஉ. க. பிரபஞ்சத்தின்விசாரம் க-வது, உ-வது, சா-வது, கஉ-வது, கங வது பிரக்கிரியை (கலை)களிலும்,

உ. பிரபஞ்சத்தோடு "நான் யார்?" என்னும் விசாரம் ங-வது, ச-வது, ரு-வது, பிரக்கிரியைகளிலும்,

ங. "பரமாத்மா யார்?" என்னும் விசாரம் கo-வது பிரக்கிரியையிலும்,

ச. பிரஹ்மாத்மாக்களிருவர்களது சொரூபத்தின் விசாரம் எ-வது, அ-வது, கூ-வது, கக-வது, கச-வது பிரக்கிரியைகளிலும்,

ரு. பிரபஞ்சபிரஹ்மாத்மாக்களது சொரூபவிசாரம் கரு-வதுபிரக்கிரியையிலும்செய்யப்பட்டிருக்கின்றது. சகலப்பிரக்கிரியைகளுக்கும் "தத்" பத "த்வம்" பதார்த்தங்களின் சோதனமும், அவற்றின் ஐக்கியநிச்சயமும் பிரயோஜனமாம்.



# ஸ்ரீ விசாரசந்திரோதயம்.

## இரண்டாங்கலை.

### * க. பிரபஞ்சாரோபாபவாதம்.

பிரபஞ்ச மதனு ரோபா பவாத
மெனுமிவை தம்மா னிட்பிர பஞ்ச
வத்துவே பிரஹ்ம மற்றைமா யாதி
யவத்துவென் றன்ப வறிவாய் நீயே. (க)
பிரமம் மாயை யவற்றின் னியைபு
சீவனே டீச னவற்றின் பேத
மென்பவை யாறு மநாதி யாகு
மவற்றிற் பிரம மநந்த மெனப்படும். (உ)
வத்துவி லவத்துவைக் கூறலா ரோபம்
பாதித் தவத்துவை வத்துவை யியம்ப
லபவாத மென்றே யறையப் படுமேற்
குரவ னருளி* னிப் பொருந்துமா றுணர்ந்து
தமத்துக ளொழித்துத் தனையே யுணர்க. (ங)

---

*க. இதனைப் பைங்கலசுருதியிற் காண்க.
* (இப்பொருந்துமாறு-இந்தயுக்தி)

௩௩. வினா :—சுத்தப்பிரஹ்மத்தில் பிரபஞ்சத்தின் *உ. ஆரோபம் எப்படி உண்டாயிருக்கிறது?

விடை :— *௩. அநாதிசுத்தப்பிரஹ்மத்தில் *ச. அநாதி *டு. கற்பிதமாகிய பிரகிருதிஉண்டு. அந்தப் பிரகிருதிக்குப் பிரஹ்மத்தோடு அநாதி கற்பிததாதாத்மிய(கற்பிதபேதத்தோடு வாஸ்தவஅபேதமாகிய) சம்பந்த முண்டு.

அந்தப்பிரகிருதி, க. மாயை, உ. அவித்தை, ௩. தமப்பிரதானப் பிரகிருதியெனப் பிரிவைஅடைகின்றது. அவற்றுள்,

க. *சு. சுத்தசத்துவகுணத்தோடு கூடியது மாயை.

உ. *எ. மலினசத்துவகுணத்தோடு கூடியது அவித்தை.

௩. தமோகுணத்தின்முக்கியத்தன்மையோடு கூடியது தமப்பிரதானப்பிரகிருதி.

---

* உ. வஸ்துவி(பிரஹ்மத்தி)ல் அவஸ்துவை (அஞ்ஞானத்தை)யும் அதன் காரியத்தையும் கூறுதல் ஆரோபமாம்; இதனையே அத்தியாரோப மென்றும் கூறுவர். வஸ்து=மெய்ப்பொருள். அவஸ்து=பொய்ப்பொருள்.

*ரு. அநாதிசுத்தப்பிரஹ்மத்தில் அநாதிகற்பிதமாகிய பிரகிருதி உண்டு என்பதற்கு,

"तस्मिन्मरुशुक्तिकास्थाणुस्फटिकादौ जलरौप्यपुरुषरेखादिवल्लोहितशुक्लकृष्णगुणमयी गुणसाम्याऽनिर्वाच्या मूलप्रकृतिरासीत् ॥

அவ்வத்விதியப்பிரஹ்மத்தில் கானல் சுத்தி தாணு படிக முதலியவற்றில் நீர் வெள்ளி புருஷன் இரேகை முதலியவற்றைப்போல வெண்மை செம்மை கருமை யென்னும் குணமயமானதும், குணசாம்மியமும், அநிர்வாச்சியமு(இத்தன்மையதென்று உறுதியாய்ச்சொல்ல முடியாதது)மான மூலப்பிரகிருதி இருந்தது." என்னும் பைங்கலசுருதியும், மற்றக் கோபாலதாபநீயம், வராகம், நிராலம்பம், ஸர்வசார முதலிய சுருதிகளும் பிரமாணமாதல் காண்க.

*சு. உற்பத்தியில்லாத பொருள் சொரூபமாக அநாதியாம். அப்படிப்பட்டவை சுத்தப்பிரஹ்மம், பிரகிருதி, அவற்றின் சம்பந்தம், ஈசுவரன், ஜீவன், அவற்றின் பேதம் என்னும் ஆறுமாம். பிரவாகரூபமாகப் பிரபஞ்சமும் அநாதியாம்.

* எ. எது இல்லாததாய்ச் சொப்பனபதார்த்தங்களைப்போலப் பிராந்தியினால் விளங்குகின்றதோ, அது கற்பிதமாம் (கற்பிக்கப்பட்டதாம்). மாயை கற்பிதமென்பதனைப் பாசுபதோபநிஷத்திற் காண்க.

*௬. "शुद्धसत्त्वप्रधानायां मायायां बिंबितोह्यजः । सत्त्वप्रधाना प्रकृतिर्मायेति प्रतिपाद्यते ॥ सा माया स्ववशोपाधिस्सर्वज्ञस्येश्वरस्य हि । वश्यमायत्वमेकत्वं सर्वज्ञत्वं च तस्य तु ॥

சுத்தசத்துவப்பிரதானமான மாயையில் பிரதிபிம்பித்தவரே அஜர் அதாவது ஈசுவரன். சத்துவப்பிரதானப் பிரகிருதி மாயையென்று சொல்லப்படுகின்றது. அந்த மாயை சர்வஞ்ஞனாகிய ஈசுவரனுக்குத் தன் வசப்பட்ட உபாதியாம். ஆதலால் அவ்வீசுவரனுக்கு வசப்பட்டமாயையினை யுடைமையும், ஏகத்தன்மையும், சர்வஞ்ஞத்தன்மையும் உண்டு." என்னும் சாஸ்வதீரஹஸ்யோபநிஷத்தின் ௧௪-௧௫ வாக்கியத்தால் சுத்தசத்துவப்பிரதானம் மாயையென்பதும், அதிற்பிரதிபிம்பித்தவன் ஈசுவரன் என்பதும், அவன் சர்வஞ்ஞன் ஏகனென்பதும் காண்க. க்ஷத்திரியசூத்திரர்களாகிய மந்திரிகளால் அமிழ்த்தப்படாத பிராஹ்மணனாகிய இராஜாவைப்போல, இரஜோதமோகுணங்களால் அமிழ்த்தப்படாது தான் அவற்றை அமிழ்த்தியிருப்பதாகிய சத்துவகுணம் சுத்த சத்துவகுணமாம்.

*௭. இரஜோதமோகுணங்களை அமிழ்த்தாமல் சூத்திரர்களாகிய இரண்டு இராஜகுமாரர்களால் அமிழ்த்தப்படும் பிராஹ்மணனாகிய ஒரு மந்திரியைப்போல, இரஜோ

க. *அ. மாயையிலுள்ள பிரஹ்மத்தின் பிரதிபிம்பம், அதிஷ்டான (பிரஹ்ம) த்துடனும்

---

தமோகுணங்களால் தான் அமிழ்த்தப்பட்டிருப்பதாகிய சத்துவகுணம் மலினசத்துவதுணமாம்.

*அ. "ब्रह्मैव स्वशक्ति प्रकृत्यभिधेयमाश्रित्य लोकान् सृष्ट्वा प्रविश्यांतर्यामित्वेन ब्रह्मादीनां बुद्धींद्रियनियन्तृत्वादीश्वरः।" "ईश्वर एव ब्रह्मविष्णवीशानेंद्रादीनां नामरूपद्वारा स्थूलोहामित्यध्यासवशाज्जीवः॥ सोऽयमेकोऽपि देहारंभकभेदवशाद्बहुजीवः॥"

"பிரஹ்மமேபிரகிருதி யென்னும் பெயருடைய தனதுசக்தியினை ஆசிரயித்து அதாவது இடமாகக்கொண்டு உலகங்களைச் சிருஷ்டித்து, பிரவேசித்து, அந்தரியாமித்தன்மையாகப் பிரஹ்மாமுதலியோரின் புத்தீந்திரியங்களை நியமிப்பதாயிருத்தலால் ஈசுவரனும்." "ஈசுவரனே பிரஹ்ம விஷ்ணு ஈசான இந்திராதியரின் நாமரூபவாயிலாகத் தூலன் யான் என்னும் அத்தியாசவசத்தால் ஜீவனாகின்றான். அத்தன்மைய இவன் ஒருவனாயினும், தேகாரம்பகபேதவசத்தால்வெகுஜீவனாவன்." என்னும் சுக்கிலயஜுர்வேதத்திலுள்ள நிராலம்போபநிஷத்தும்,

"ममत्वेन भवेज्जीवो निर्ममत्वेन केवलः।

(யான்) எனப்தெனுந்தன்மையால் ஜீவனாகின்றான் எனப்தெனுந்தன்மையின்மையால் கேவல (சிவ) னாகின்றான்." என்னும் யோகசூடாமணியுபநிஷத்தும்,

"पशुपतिरहंकाराविष्टस्सँसारी जीवः स एव पशुः ॥ सर्वज्ञः पंचकृत्यसंपन्नस्सर्वेश्वर ईशः पशुपतिः ॥

பசுபதியே அகங்காரத்திற் பிரவேசித்துச் சம்சாரி ஜீவனாய், அவரே பசுவாகின்றார். சர்வஞ்ஞராய்ப்பஞ்சகிருத்தியத்தோடு கூடிய சர்வேசுவரரான ஈசன் பசுபதியாவர்." என்னும் சாமவேதீய ஜாபாலியுபநிஷத்தும்,

"अहंकाराभिमानेन जीवस्स्याद्धि सदाशिवः

அகங்காராபிமானத்தினால் சதாசிவன் ஜீவனாகின்றான்." என்னும் திரிசிகிபிராஹ்மணோபநிஷத்தும்,

"शक्तिद्वयं हि मायाया विक्षेपावृतिरूपकं ॥ विक्षेपशक्तिलिंगादिब्रह्माण्डांतं जगत्सृजेत् । अंतर्दृश्ययोर्भेदं बहिश्च ब्रह्मसर्गयोः ॥ आवृणोत्यपरा शक्तिस्सा संसारस्य कारणम् । साक्षिणः पुरतो भातं लिंगदेहेन संयुतम् । चितिच्छायासमावेशाज्जीवस्स्याद्व्यावहारिकः । अस्य जीवत्वमारोपात्साक्षिण्यप्यवभासते ॥

மாயைக்கு விக்ஷேபம் ஆவரண மென்னும்இரண்டு சக்திகளுண்டு. அவற்றுள், விக்ஷேபசக்தி இலிங்காதிப்

பிரஹ்மாண்டாந்தமான ஜகத்லைச் சிருஷ்டிக்கின்றது. மற்றைச்சக்தி உள்ளில் திருக்குத்திருசியங்களின் பேதத்தையும், வெளியில் பிரஹ்மசர்க்கங்களின் பேதத்தையும் மறைக்கின்றது. அது ஸம்சாரத்திற்குக் காரணம்; சாக்ஷிக்குமுன் விளங்குகின்றது; இலிங்கதேகத்தோடு கூடியதாயிருக்கின்றது. அதில் சிற்சாயையின் பிரவேசத்தால்வியாவகாரிகஜீவனாகின்றான். இதன்ஜீவத்துவம் ஆரோபத்தினால் சாக்ஷியினிடத்துத் தோற்றுகின்றது." என்னும் ருக்வேதத்தின் சாஸ்வதிரஹஸ்யோபநிஷத்தும்,

"घटाकाशमठाकाशौ महाकाशे प्रतिष्ठितौ ।
एवं मयि चिदाकाशे जीवेशौ परिकल्पितौ ॥

கடாகாசமடாகாசங்கள் மகாகாசத்தில் நிலைத்திருக்கின்றன. இவ்வாறு சிதாகாசமாகிய என்னிடத்து ஜீவேசர்கள் கற்பிக்கப்பட்டிருக்கின்றனர்." என்னும் யஜுர்வேதிய வாராகோபநிஷத்தும்,

"मयि जीवत्वमीशत्वं कल्पितं वस्तुतो नहि ॥

என்னிடத்து ஜீவத்துவமும் ஈசத்துவமும் கற்பிதமாம்; உண்மையாக இல்லை." என்னும் ருக்வேதிய சாஸ்வதிரஹஸ்யோபநிஷத்தும்,

"सर्वज्ञेशो मायालेशसमन्वितो व्यष्टिदेहं प्रविश्य ।
तया मोहितो जीवत्वमगमत् । शरीरत्रयतादात्म्यात्क-

*௬. மாயையுடனும் கூடி ஜகத்கர்த்தாவாகிய சர்வஞ்ஞஈசுவர னெனப்படும்.

---

तृत्वभोक्तृत्वमगमत् । जाग्रत्स्वप्नसुषुप्तिमूर्छामरण धर्मयुक्तो घटीयंत्रवदुद्विग्नो जातो मृत इव कुलालचक्रन्यायेन परिभ्रमति ॥

சர்வஞ்ஞ ஈசன் மாயாலேசத்தோடு கூடியவனாய் வியஷ்டிதேகத்திற் பிரவேசித்து, அதனால் மோகிக்கப்பட்டவனாய், ஜீவத்தன்மையை அடைந்தான்; சரீரத்திரயதாதாத்மியத்தால் கர்த்திருத்தன்மை போக்திருத்தன்மையை யடைந்தான். ஜாக்கிர சொப்பன சுழுத்தி மூர்ச்சா மரண தர்மங்களோடு கூடியவனாய்க் கலசங்கள்கட்டிய ஏற்றம் போல் கலக்கமுடையவனாய்ப் பிறந்தவன் இறந்தவன்போலக் குலாலசக்கரநியாயத்தால் (குயவன் சக்கரம்போலச்) சுழல்கின்றான்." என்னும் பைங்கலோபநிஷத்துமாகிய இவைமுதலிய சுருதிகள் பிரஹ்மமே ஜகத்துக்குக் காரணமென்பதற்கும், பிரஹ்மமே மாயை அவித்தையுபாதிகளால் ஈசனும் ஜீவனுமாமென்பதற்கும், ஜீவேசுவரர் கற்பிதர்என்பதற்கும், மாயைக்கு ஆவரணம் விக்ஷேபமென்று இரண்டு சக்திகளுண்டென்பதற்கும், அவை சொரூபத்தை மறைத்துப் பிரபஞ்சத்தைக் காட்டுமென்பதற்கும் பிரமாணமாதல் காண்க.

*௬. இங்கே மாயை யென்னும் சத்தத்தால் மாயையும் தமப்பிரதானப்பிரகிருதியுமாகிய இவ்விரண்டு ஈசுவரனது உபாதிகளும் கொள்ளப்படும் அவற்றுள்,

௨. அவித்தையிலுள்ள பிரஹ்மத்தின் பிரதிபிம்பம், அதிஷ்டானத்து (கூடஸ்தரு)டனும்அவித்தையுடனும் கூடிப்போக்தாவாகிய அற்பஞ்ஞஜீவ னெனப்படும்.

அந்த ஈசுவரஜீவர்களும் அநாதிகற்பிதராவர்.

அவர்களுள்,

௧. ஈசுவரனது உபாதியாகிய மாயை ஏகமா (ஒன்று)யும் *௧௦. ஆபேக்ஷிகவியாபகமாயு மிருந்தலால் ஈசுவரனும் ஏகமாயும் வியாபகமாயு மிருக்கின்றனர்.

---

௧. மாயையாகிய உபாதியைக்கொண்டு ஈசுவரன் குலாலனைப்போல ஜகத்திற்கு நிமித்தகாரணமும்,

௨. தமப்பிரதானப்பிரகிருதியைக்கொண்டுமண்போல ஜகத்திற்கு உபாதானகாரணமு மாகின்றார்.

* ௧௦. ஒன்றன் அபேக்ஷையால் வியாபகமாயும் மற்றொன்றன் அபேக்ஷையால் பரிச்சின்னமாயு மிருப்பது ஆபேக்ஷிகவியாபக மெனப்படும். வீடானது கடாதிகளின் அபேக்ஷையால் வியாபகமாயும், கிராமத்தின் அபேக்ஷையால் பரிச்சின்னமாயுமிருக்கின்றது ஆகையால் ஆபேக்ஷிகவியாபகமாம். அதுபோல மாயையும்

உ. ஜீவனது உபாதியாகிய அவித்தை நாநா வாயும் பரிச்சின்னமாயு மிருத்தலால் ஜீவனும் நாநாவும் பரிச்சின்னமுமாம்.

அந்த ஜீவேசுவரர்களுக்கு அநாதிகற்பிதபே த முண்டு.

க. சிருஷ்டிக்கு முன்னே, அந்த ஜீவர்களது உபாதியாகிய அவித்தை ஜீவர்களது கர்மத்து டனே மாயையில் ஒடுங்கி யிருக்கிறது. அந்த மாயை சுழுத்தியில் அவித்தையைப்போலப் பி ரஹ்மத்துக்கு வேறாய்த் தோற்று (சித்திக்)கிற தில்லை. ஆகையால் *கக. சிருஷ்டிக்கு முன் னே சஜாதியவிஜாதியசுவகதபேத மில்லாத ஒ ரே அத்துவிதிய சச்சிதாநந்தப் பிரஹ்ம மிருந் தது.

---

பிருதிவிமுதலியவற்றின் அபேக்ஷையால் வியாபகமா (அதிக தேசத்திலுள்ளதா)யும், பிரஹ்மத்தின் அபே க்ஷையால் பரிச்சின்னமா (குறைந்தவிடத்துள்ளதா)யு மிருக்கின்றது. ஆகையால் ஆபேக்ஷிகவியாபகமாம்.

* கக. இதனை "सदेव सौम्येदमग्र आसीदेकमेवा-द्वितीयं तद्ध एक आहुः ॥

௨. அந்தப் பிரஹ்மத்திற்குச் சிருஷ்டியின் ஆரம்பத்தில் ஜீவர்களது பரிபக்குவப்பட்ட கர்

---

சௌமியனே! இது முன் ஒரே அத்விதீயப்பிரஹ்மமான சத்தாகவே இருந்தது. அதனை நிச்சயமாக ஒன்றென்று கூறுவர்." என்னும் சாந்தோக்கியம்ஆறுவது பிரபாடகத்தின் முதல் கண்டமும்,

"आत्मा वा इदमेक एवाग्र आसीन्नान्यत् किंचन मिषत् ॥

இது முன் நிச்சயமாக ஒரே ஆத்மாவாயிருந்தது; ஒரு சிறிதும் வியாபாரமுடையதாய் வேறு இருந்ததில்லை." என்னும் ஐதரேயத்தின் முதலத்தியாயம் முதல் கண்டமும்,

"आत्मैवेदमग्र आसीत् ॥

இது முன் ஆத்மாவாகவே இருந்தது." என்னும் பிருகதாரணியகம் முதல் அத்தியாயம் நான்காவது பிராஹ்மணம் முதலாவது சுருதிவாக்கியமும்,

"सदेव सौम्येदमग्र आसीत् ॥

சௌமியனே! இது முன் சத்தாகவே யிருந்தது." என்னும் பைங்கலத்தின் முதலத்தியாயமும், மற்றும் அநேக சுருதிகளும் கூறுதல் காண்க.

மமாகிய நிமித்தத்தால் "*௧௨. ஒன்ருகிய யான் அநேகரூப மாவேன்." என்னும் இச்சை யுண்டாயிற்று.

௩. அந்த இச்சையினுல் பிரஹ்மத்தின் உபாதியாகிய மாயையில் *௧௩. க்ஷோபமுண்டாய்க்

---

*௧௨. "सोऽकामयत बहुस्यां प्रजायेयेति। स तपोऽतप्यत। स तपस्तप्त्वा। इदं सर्वमसृजत यदिदं किंच। तत्सृष्ट्वा। तदेवानुप्राविशत्।

அவர் வெகு ஆவேன் அநேகமாகப் பிறப்பேன் என்று விரும்பினுர். அவர் ஆலோசனையைச் செய்தார். அவர் ஆலோசனையாகிய தபத்தைச்செய்து, இவ்வெல்லாவற்றையும் சிருஷ்டித்தார். யாதொரு இந்த ஜகத்துண்டோ அதனைச் சிருஷ்டித்து, அதன்கண்ணேயே பிரவேசித்தார்." என்னும் தைத்திரீயம் ௨-வது வல்லி ௬-வது அநுவாகத்திஞலும், இவ்வாறே சாந்தோக்கியம் ௬-வது பிரபாடகம் ௨-வது கண்டத்திஞலும், ஐதரேயம் முதல் அத்தியாயம் முதல் கண்டத்திஞலும், பிரசிஞேபநிஷத்து ஆருவதுபிரசினத்திஞலும், முண்டகோபநிஷத்து முதல் முண்டகம் முதல் கண்டத்திஞலும், யஜுர்வேதத்தின் யோகசிகோபநிஷத்து முதல் அத்தியாயத்திஞலும் பிரஹ்மத்தில் சிருஷ்டிக்குக் காரணமான ஈக்ஷணம் அதாவது சங்கற்பம் உண்டானமை காண்க.

*௧௩. காரியமாதற் கெதிர்ப்படும் நிலைமையினை க்ஷோப மென்றும், கலக்க மென்றும் கூறுவர்.

கிரமமாக ஆகாயம் வாயு தேயு அப்பு பிருதிவி யென்னும் பஞ்சமகாபூதங்களும் உண்டாயின,

ச. அவற்றிற்குப் * கச. பஞ்சீகரணமுண்டாகா திருந்தது; அப்போது அவை * கடு. அபஞ்சீகிருதமா யிருந்தன. அவற்றினின்றும் சமஷ்டிவியஷ்டியாகிய சூக்ஷ்மசிருஷ்டி யுண்டாய்ப், பின்னர் ஈசுவரனது இச்சையால் அவற்றிற்குப் பஞ்சீகரண முண்டானகாலத்து அவை பஞ்சீகி

---

* கச. அவ்வைந்தாகச் செய்தலைப் பஞ்சீகரண மென்பர். அவ்வைந்தாக்கப்பட்டதனைப் பஞ்சீகிருத மென்பர். பஞ்சீகரணம் செய்தலை ௩-வது கலையிற் காண்க.

* கடு. பிரஹ்மமாகிய ஆத்மாவினின்றும் அபஞ்சீகிருதபூதங்க ளுண்டாயின என்பதற்கு

"ब्रह्मभूतात्मनस्तस्मादेतस्माच्छक्तिमिश्रितात् । अपंचीकृत आकाशस्संभूतो रज्जुसर्पवत् । आकाशाद्वायुसंज्ञस्तु ॥

அந்த இந்தச் சக்தியோடுகலந்த பிரஹ்மவடிவ ஆத்மாவினின்றும் பழுதையிற் பாம்புபோல அபஞ்சீகிருத ஆகாய முண்டாயிற்று. ஆகாயத்தினின்றும் வாயுவென்னும் பெயருடைய துண்டாயிற்று." என்னும் கடோபநிஷத்து, பைங்கலம் முதலத்தியாயம், தைத்திரீயம் இரண்டாவது வல்லி முதல் அநுவாக முதலியனவும் பிரமாணமாதல் காண்க.

ருத மாயின. *கசு. அவைகளினின்றும் சமஷ்டி வியஷ்டியாகிய ஸ்தூலசிருஷ்டி உண்டாயிற்று.

ரு. அவற்றில் சமஷ்டிஸ்தூலசூக்ஷ்மகாரணப் பிரபஞ்சத்திற்கு அபிமானி, ஜீவனது பார்வையால் ஈசுவரனும், வியஷ்டிஸ்தூலசூக்ஷ்மகாரணப்பிரபஞ்சத்திற்கு அபிமானி ஜீவனுமாவர். அவர்களுள், ஈசுவரன் சர்வஞ்ஞனாயிருத்தலால் நித்தியமுக்தனும், ஜீவன் அற்பஞ்ஞனாயிருத்தலால் பெத்தனுமாவர்.

இவ்வாறு சுத்தப்பிரஹ்மத்தில் பிரபஞ்சத்தின் ஆரோப முண்டாயிருக்கிறது.

௯௪. வினா:—இவ்வாரோபம் சத்தியமா? மித்தையா?

விடை:—இவ்வாரோபம் பழுதையில் பாம்பு போலவும், சாக்ஷியில் சொப்பனம் போலவும்,

---

*கசு. இதனை "ईशः पंचीकृतमहाभूतलेशानादाय व्यष्टिसमष्ट्यात्मकस्थूलशरीराणि यथाक्रममकरोत् ।

ஈசுவரன் பஞ்சீகிருதமகாபூதங்களின் இலேசங்களைக் கொண்டு வியஷ்டி சமஷ்டிவடிவஸ்தூலசரீரங்களைக்கிரமப்படி செய்தார்." என்னும் பைங்கலோபநிஷத்திற் காண்க.

கண்ணாடியில்நகரப்பிரதிபிம்பம்போலவும்* ௧௭. மித்தையாம்.

---

* ௧௭. ஆரோபம் மித்தையா மென்பதற்கு,

"अथ कतिपदार्था इति । सदसन्मिथ्या चेति त्रयः । सदेव तत्र ब्रह्म असत्तुच्छं । जगत्कल्पितं ब्रह्मण्यसत्यं मिथ्या ॥

இனிப்பதார்த்தங்கள் எத்தனையெனின், அவை சத்து அசத்து மித்தையென மூன்றாம். அவற்றுள், சத்தே பிரஹ்மம். அசத்து துச்சம் அதாவது ஒன்றுமில்லாததாம். மித்தை யென்பது பிரஹ்மத்தின்கண் இல்லாததாய்க் கற்பிக்கப்பட்டுள்ள ஜகத்தாம்." என்னும் சர்வசாரோபநிஷத்தும்,

"स्वप्नजगदभ्रगजादितुल्यं । तद्रज्जुसर्पवत्कल्पितम् ॥

அந்த ஜகத்து சொப்பனஜகத்தையும் மேகத்திற்றோன்றும்யானைமுதலியவற்றையும் ஒத்ததாம். அது இரஜ்ஜுசர்ப்பம்போற் கற்பிதமாம்" என்னும் ருக்வேதத்தின் நிர்வாணோபநிஷத்தும்,

"लीलया कल्पयामास चित्रास्संकल्पतः प्रजाः । नानाचारसमारंभा गंधर्वनगरं यथा" "विरिंचिरूपान्म-

௩டு. வினு:—இவ்வாரோபம் எதனுலுண்டா கிறது?

விடை :—இவ்வாரோப மஞ்ஞானத்தினுலு ண்டாகிறது.

௩சு. வினு:—இவ்வாரோபம் எக்காலத்தது? எனுண்டாயிருக்கும்? என்னும் விசாரம் எப்படி யுண்டாகும்?

விடை :—ஓர் புருஷனது வஸ்திரத்தில் எண் ணெக்கறை பட்டிருக்குமாயின், அதை அறிந்து நீக்குதற்கு உபாயந் தேடவேண்டும்; அப்படிக் கில்லாமல் "இக்கறை எக்காலத்தது? எப்படிப் பட்டிருக்கும்?" என்று விசாரித்தலால் ஒரு பிர யோஜனமு மில்லாதது போல, "இந்தப்பிரபஞ்

---

नसः कल्पितत्वाज्जगत्स्थितेः । तावत्स्थितिरियं प्रोक्ता तन्नाशे नाशमाप्नुयात् ॥"

"நானா ஆசாரத்தோகூடியவர்களாய்ப் பலவித பிர ஜைகளைக் கந்தர்வநகரம் போலத் தமது சங்கற்பத்தால் விளையாட்டாகக் கற்பித்தார்." "பிரஹ்மவடிவ மனதி னின்றும் கற்பிக்கப்பட்டதா யிருத்தலின் ஜகத்தின் ஸ் திதிக்கு அதுவரையிலுமே இந்த ஸ்திதி சொல்லப்பட் டுளது. அம்மனதின் நாசத்தில் நாசத்தினை யடைகின் றது." என்னும் மகோபநிஷத்தும் பிரமாணமாம்.

சத்தின் ஆரோபம் எக்காலத்தது? ஏன்உண்டாயிருக்கும்?" என்று விசாரித்தலானும் ஒரு பிரயோஜனமு மில்லை. ஆனால் இதை நிவர்த்திக்க உபாயம் செய்தல் தகுதியாம்.

௯௭. வினா:—இவ்வெல்லா ஆரோபங்களும் எப்படி நிவர்த்தியாகும்?

விடை:—

௧. பிரஹ்மஞானத்தால் மாயை அவித்தைகளின் நிவிருத்தி உண்டாகின்றது.

௨. அதனால் காரியத்தோடு பிரகிருதியின் நிவிருத்தி உண்டாகின்றது.

௩. அதனால் பிரகிருதிப்பிரஹ்மங்களின் சம்பந்தநிவிருத்தி உண்டாகின்றது.

௪. *௧௮. அதனால் ஜீவத்தன்மை ஈசுவரத்தன்மைகளின் நிவிருத்தி உண்டாகின்றது.

௫. அதனால் ஜீவேசுரர்களின் பேதநிவிருத்தி உண்டாகின்றது.

---

*௧௮. "मायातत्कार्यविलये नेश्वरत्वं न जीवता।

(பிரஹ்மஞானத்தால்) மாயையும் அதன் காரியமும் நீங்கியபோது ஈசுவரத்தன்மையுமில்லை; ஜீவத்தன்மையுமில்லை." என்பது வராகோபநிஷத்து,

சு. அதனுல் பந்தநிவிருத்தி உண்டாய் மோக்ஷம் சித்த மாகின்றது.

இவ்வாறு ஒரேகாலத்தில் சகலஆரோபங்களின் நிவிருத்தியாகிய *கக. அபவாத முண்டாகின்றது.

ஙஅ. வின:—இந்தப் பிரஹ்மஞானம் எதனுல் உண்டாகும்?

விடை:—இந்தப் பிரஹ்மஞானம் மேற்சொல்லப்படும் விசாரத்தால் உண்டாகும்.

## ஸ்ரீ விசாரசந்திரோதயம் இரண்டாங்கலே

## பிரபஞ்சாரோபாபவாதம்

## முற்றிற்று.

---

* கக. சர்ப்பத்தையும் அதனது ஞானத்தையும்பாதித்தலால் இரஜ்ஜுவாகிய அதிஷ்டானம் அவசேஷமா(மிஞ்சு)வது போலப்பிரபஞ்சத்தையும் அதனது ஞானத்தையும் பாதித்தலால் அதிஷ்டானமாகிய சுத்தப்பிரஹ்மம் மிஞ்சுதல் அபவாதமாம். பாதித்தல்=மித்தை (பொய்)யென நிச்சயித்தல்.



# ஸ்ரீ விசாரசந்திரோதயம்.



## மூன்றுங்கலை.

### * க. தேகமூன்றற்கும் நான் திருஷ்டா.

மூவகை யுடலையுங் காண்பவன் யானே
தூலஞ் சூக்குமங் காரண மெனுமிம்
மூவுட றிருசிய மநான்மா வென்றுணர். (க)

அவ்வைந் தாகிய வைம்பெரும் பூதத்
தைந்தோ டிருபான் றத்துவத் தினதாந்
தூலம் போகா யதந மெனப்படு
மையைந் தாக்கப் படாதவைம் பூதப்
பதினெழு தத்துவத் தினதாஞ் சூக்குமம்
போகசா தநமாப் போற்றப் படுமஃ
தறியாமை காரண தேகங் குடம்போற்
றிருசிய மிதனைக் காண்பான் யானென்
றுணர்ந்து திருசிய மொழித்திடு வாயே. (உ)

---

* க. இந்தஸ்தூலதேகமுதலியன நானல்லஎன்பதற்கு,

ருக. வினு:— முதற்பிரக்கிரியை "மூன்று தேகங்களுக்கும் நான் திருஷ்டா." அம்மூன்று தேகங்கள் எவை?

விடை:—ஸ்தூலதேகம் சூக்ஷ்மதேகம் காரணதேகம் என்னுமிவை மூன்றுதேகங்களாம்.

க. ஸ்தூலதேகத்திற்கு நான் திருஷ்டா.

சO. வினு:—ஸ்தூலதேக மென்பது யாது?

---

"नाहं देहो न च प्राणो नेंद्रियाणि मनो नहि ।
सदा साक्षिस्वरूपत्वाच्छिव एवास्मि केवलः ॥

யான் தேகமல்லன்; பிராணனல்லன்; இந்திரியங்களல்லன்; மனதல்லன். எப்போதும் சாக்ஷிசொரூபமாயிருத்தலால் சிவமே நான்." என்னும் தர்சனுேபநிஷத்து,

"स्थूलदेहविहीनात्मा सूक्ष्मदेहविवर्जितः कारणादि-
विहीनात्मा ।

ஆத்மா ஸ்தூலதேக மில்லாதது, சூக்ஷ்மதேக மில்லாதது, காரணுதிக ளில்லாதது." என்னும் தேஜோபிந்தூபநிஷத்து,

"अकायमव्रणमस्नाविरँ ॥

அவ்வாத்மா சரீரமில்லாதது, புண்ணில்லாதது, நரம்பில்லாதது". என்னும் ஈசாவாஸ்யம் முதலிய அநேக சுருதிகள் பிரமாணமாதல் காண்க.

விடை :—*உ. ஸ்தூலதேகம் பஞ்சீகிருதப ஞ்சமகாபூதங்களின் இருபத்தைந்து தத்துவங் களினதாம்.

சக. வினா :—பஞ்சமகாபூதங்கள் எவை?

விடை :—ஆகாயம், வாயு, தேயு, ஜலம், பிரு திவி என்னும்இவை பஞ்சமகாபூதங்களாம்.

சஉ. வினா :—பஞ்சமகாபூதங்களின் இருபத் தைந்து தத்துவ(பதார்த்த)ங்கள் எவை?

க-ரு. விடை :—ஆகாயத்தின் ஐந்து தத்துவ ங்கள் :—சோகம், *ங. காமம், குரோதம், *ச. மோகம், பயம் என்பனவாம்.

சு-கo. வாயுவின் ஐந்து தத்துவங்கள் :—நட த்தல், இருத்தல், ஓடல், விரிதல் (நிமிர்தல்), சு ருங்குதல் (வளைதல்) என்பனவாம்.

---

* உ. ஸ்தூலசரீரம் பஞ்சீகிருத பஞ்சமகாபூதங்களி ன் இருபத்தைந்து தத்துவமா யிருத்தலையும், அவற்றி ன் கூறுபாட்டையும் இந்நூலிற் கூறியபடியே சாரீர கோபநிஷத்தும், பைங்கலோபநிஷத்தின் உ-வது அத்தியாயமும் கூறுதல் காண்க.

* ங. யாதேனும் ஓர் போகத்தின் இச்சை காமமெ னப்படும்.

* ச. அகந்தை மமதை வடிவமாகிய புத்தி மோக மாம். அகந்தை=யானெனல். மமதை=எனதெனல்.

௧௧-௧௫. தேயுவின் ஐந்து தத்துவங்கள் :—பசி, தாகம், சோம்பல், நித்திரை, காந்தி(ஒளி) என்பனவாம்,

௧௬-௨௦. ஜலத்தின் ஐந்து தத்துவங்கள் :—சுக்கிலம்(வீரியம்), சோணிதம் (உதிரம்),உமிழ்நீர்(வாய்நீர்), மூத்திரம், சுவேதம் (வியர்வை) என்பனவாம்.

௨௧-௨௫. பிருதிவியின் ஐந்து தத்துவங்கள்:—எலும்பு, மாமிசம், நாடி(நரம்பு), தோல், உரோமம் என்பனவாம்.

இவை பஞ்சமகாபூதங்களின் இருபத்தைந்து தத்துவங்களின் பெயர்களாம்.

௪௩. வினா :—பஞ்சீகிருதபஞ்சமகாபூதங்கள் எவை ?

விடை :—எந்தப் பூதங்களுக்குப் *௫. பஞ்சீகரண முண்டாயிருக்கிறதோ, அவை பஞ்சீகிருதபஞ்சமகாபூதங்க ளெனப்படும்.

௪௪. வினா :—பஞ்சீகரண மென்பது யாது ?

---

* ௫. முதலில் அபஞ்சீகிருதபஞ்சமகாபூதங்களிருந்தன. அவற்றிற்கு ஈசுவர இச்சையால் ஸ்தூலசிருஷ்டி வாயிலாக ஜீவர்களது போகத்தின்பொருட்டு ஒன்றற்கொன்று கலத்தலாகியபஞ்சீகரண முண்டாயிருக்கின்றது.

விடை :—*சுர. ஐந்து பூதங்களினின்றும் ஒவ்வொன்றை இரண்டிரண்டு பாகஞ் செய்ய, அவை பத்தாயின. அவற்றினின்றும் முதல் ஐந்து பாகங்களையும் நிறுத்திவிட்டு, மற்ற ஐந்து பாகங்களினின்றும் ஒவ்வொரு பாகத்தையும் நந்நான்கு பாகமாக்கி, அந்த நந்நான்கு பாகங்களையும் ஆகாயாதி பூதங்களின் யாதொரு தத்தம் அரை அரை முக்கிய பாகங்கள் நிறுத்தப்பட்டிருக்கின்றனவோ, அவற்றிற்சேர்க்காமல் தத்தம்மின் வேறாகிய நான்குபூதங்களின் அரை அரைப்பாகங்களில் சேர்த்தல் பஞ்சீகரண மெனப்படும்.

சரு. வி :—பஞ்சபூதங்களுக்குப் பரஸ்பரம் (ஒன்றற்கொன்று) எப்படிக் கலப்புண்டாகிறது ?

விடை :—திருஷ்டாந்தம் :—ஓர் ஐந்து சிநேகிதர்கள் மா வாழைமுதலிய ஒவ்வொரு பழத்தை ஒன்றாய்ச் சேர்த்துத்தின்னத் தொடங்கிச் சகலரும் தங்கள் தங்கள் பழத்தை இரண்டிரண்டாகச் செய்து, அரை அரைப்பாகத்தைத் தங்கள் பொருட்டு வைத்துக்கொண்டு, மிஞ்சிய அரை அரைப்பங்கை நந்நான்காக்கி, நான்கு சிநேகித

* சுர. இவ்விதத்தினைப் பைங்கலோபநிஷத்து உ-வது அத்தியாயத்திற் காண்க.

ர்களுக்கும் பிரித்துக் கொடுப்பார்களாயின், அப்போது ஐந்துபழங்களுக்கும் ஒன்றற்கொன்று கலப்புண்டாகிறது.

சித்தாந்தம் :—

க. அதுபோல ஆகாயத்தை இரண்டுபங்கு செய்து, அவற்றுள்,

(க) ஒருபாகத்தை வைத்து,

(உ) மற்றப் பாகத்தை நான்கு பாகஞ்செய்து, அவற்றினின்றும் ஆகாயத்திற் சேர்க்காமல்,

[க] ஒன்றை வாயுவிலும்,
[உ] ஒன்றைத் தேயுவிலும்,
[௩] ஒன்றை அப்புவிலும்,
[ச] ஒன்றைப் பிருதிவியிலுமாகச் சேர்த்தல்வேண்டும்.

உ. இப்படியே வாயுவை இரண்டுபங்குசெய்து, அவற்றுள்,

(க) ஒருபாகத்தை வைத்து,

(உ) மற்றப்பாகத்தை நான்குபாகஞ்செய்து, அவற்றினின்றும் வாயுவிற் சேர்க்காமல்,

[க] ஒன்றை ஆகாயத்திலும்,
[உ] ஒன்றை அக்கினியிலும்,

[ங] ஒன்றை அப்புவிலும்,

[ச] ஒன்றைப் பிருதிவியிலுமாகச் சேர்த்த ல்வேண்டும்

ங. இப்படியே தேயுவை இரண்டுபங்கு செ ய்து, அவற்றுள்,

(க) ஒருபாகத்தை வைத்து,

(உ) மற்றப் பாகத்தை நான்கு பாகஞ்செய் து, அவற்றினின்றும் தேயுவிற் சேர்க்காமல்,

[க] ஒன்றை ஆகாயத்திலும்,

[உ] ஒன்றை வாயுவிலும்,

[ங] ஒன்றை அப்புவிலும்,

[ச] ஒன்றைப் பிருதிவியிலுமாகச் சேர்த்த ல்வேண்டும்.

ச. இப்படியே அப்புவை இரண்டுபங்கு செ ய்து, அவற்றுள்,

(க) ஒருபாகத்தை வைத்து,

(உ) மற்றப் பாகத்தை நான்கு பாகஞ்செய் து, அவற்றினின்றும் அப்புவிற் சேர்க்காமல்,

[க] ஒன்றை ஆகாயத்திலும்,

[உ] ஒன்றை வாயுவிலும்,

[ங] ஒன்றை அக்கினியிலும்,

[ச] ஒன்றைப் பிருதிவியிலுமாகச் சேர்த்தல் வேண்டும்.

ரு. இப்படியே பிருதிவியை இரண்டுபங்கு செய்து, அவற்றுள்,

(க) ஒருபாகத்தை வைத்து,

(உ) மற்றப் பாகத்தை நான்கு பாகஞ்செய்து, அவற்றினின்றும் பிருதிவியிற் சேர்க்காமல்,

[க] ஒன்றை ஆகாயத்திலும்,
[உ] ஒன்றை வாயுவிலும்,
[ங] ஒன்றை அக்கினியிலும்,
[ச] ஒன்றை அப்புவிலுமாகச் சேர்த்தல்வேண்டும்.

இவ்வாறு இருபத்தைந்து தத்துவங்கள் உண்டாவதனால் பஞ்சமகாபூதங்களுக்கு ஒன்றற்கொன்று கலப்புண்டாகிறது.

சரு. வினா:—பஞ்சமகாபூதங்களின் இருபத்தைந்து தத்துவங்கள் எப்படி யுண்டாயின?

விடை:—சகலபூதங்களுக்கும் தத்தம் முக்கியபாகம் ஒன்றும், மற்றப்பூதங்களினது அமுக்கியபாகங்கள் நான்கும் சேர்ந்திருக்கின்றன. அதனுல் ஒவ்வொருபூதத்திற்கும் ஐந்து ஐந்து தத்துவங்க ளாயின. அவைகளெல்லாஞ் சேர்ந்து இருபத்தைந்து தத்துவங்களாயின.

சஎ. வினு:—ஸ்தூலதேகத்தில் இந்த இருபத்தைந்து தத்துவங்களும் எப்படி யிருக்கின்றன?

விடை:—

க-ரு. *எ. ஆகாயத்தின் ஐந்துதத்துவங்கள்:—(க) சோகம், (உ) காமம், (ங) குரோதம், (ச) மோகம், (ரு) பயம் என்பனவாம். அவற்றுள்,

---

*எ. சில நூல்களில் சிரம், கண்டம், இதயம், உதரம், இடை என்னும் இடங்களிலுள்ள ஆகாயங்கள் ஆகாயத்தின் ஐந்து தத்துவங்களெனப்படும். அவற்றுள்,

க. அநாகத(அடித்தல் முதலிய நிமித்தமின்றிஎழும்) சப்தத்திற்கு ஆசிரயமா யிருத்தலால், சிரத்திலுள்ள ஆகாயம் ஆகாயத்தின் முக்கியபாகமாம்.

உ. சுவாசப் பிரசுவாசங்களுக்கு ஆசிரயமா யிருத்தலால், கண்டதேசத்திலுள்ள ஆகாயம் வாயுவின் பாகமாம்.

ங. பித்தத்திற்கு ஆசிரயமா யிருத்தலால், இதயதேசத்திலுள்ள ஆகாயம் தேயுவின் பாகமாம்.

ச. குடிக்கப்பட்ட ஜலத்திற்கு ஆசிரயமா யிருத்தலால், உதரதேசத்திலுள்ள ஆகாயம் ஜலத்தின் பாகமாம்.

ரு. கந்தத்திற்கு ஆசிரயமா யிருத்தலால், இடை யிலுள்ள ஆகாயம் பிருதிவியின் பாகமாம்.

இவ்வாற்றுல் சோககாமக்குரோதாதிகள் ஸ்தூலதேகத்தின் தத்துவங்களன்று; ஆனல் இலிங்கதேகத்தின்

க. *அ. சோகம் :—ஆகாயத்தின் முக்கியபாகமாம், ஏனெனில், சோகமுண்டாகும்போது சரீரம் சூநியம்போ லாகின்றது ; ஆகாயமும் சூநியம்போன் றிருக்கிறது. ஆகையால் இது ஆகாயத்தின் முக்கியபாகமாம்.

(உ), *கூ. காமம் :—ஆகாயத்தில் வாயுவின் பாகம்சேர்ந்திருக்கிறது. ஏனெனின், காமமாகிய

---

தருமங்களாம். அந்நியகிரந்தத்தின் கிரமமாகவோ சோகாதிகள் இலிங்கதேகத்தின் முக்கியதர்மங்களாம் ; குடத்தில் நீரினது குளிர்ச்சியின் ஆவேசம்போல இவற்றின் ஆவேசம் ஸ்தூலதேகத்தில் உண்டாகிறது. ஆதலால் ஸ்தூலதேகத்திற்கும் கௌணதர்மங்க ளெனப்படும்.

*அ. வாயுமுதலிய பூதங்களின் பாகங்களிலும் ஆகாயத்தின் அந்நிய நான்கு பாகங்களினின்றும் ஒவ்வொரு பாகஞ் சேர்ந்திருக்கிறது ; அவை ஆகாயத்தின் முக்கிய பாகமாகச் சொல்லப்படா விடினும், சோகத்திற்கும் ஆகாயத்திற்கும் சமானத்தன்மை இருத்தலால், சோகம் ஆகாயத்தின் முக்கியபாகமாம்.

சிலவிடத்தில் உலோபமும் ஆசார்யத்தைப்போல பதார்த்தங்களின் பிராப்தியால் நிறைவில்லாததா யிருத்தலால், ஆகாயத்தின் முக்கியபாகமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது.

இப்படியே மற்றப் பூதங்களிலும் அறிந்துகொள்ளுக.

*கூ. பிதாவிற்குச் சமானமாகப் புத்திரன் இருத்தல்போலக் காமம் வாயுவிற்குச் சமானமா யிருக்கின்றது.

விருத்தி சஞ்சலமாம்; வாயுவும் சஞ்சலமாம், ஆகையால் இது வாயுவின் பாகமாம்.

(௩) குரோதம் :—ஆகாயத்தில் தேயுவின்பாகம்சேர்ந்திருக்கிறது, ஏனெனின், கோபம் வரும்போது சரீரம் கொதிப்புடையதாகின்றது; தேயுவும் கொதிப்புடையதாயிருக்கிறது. ஆகையால் இது தேயுவின் பாகமாம்,

(௪) மோகம் :—ஆகாயத்தில் ஜலத்தின்பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், மோகம் புத்திராதிகளிடத்தில் பரவுகின்றது; ஜலபிந்துவாகிய நீர்த்துளியும் பரவுகின்றது. ஆகையால் இது ஜலத்தின் பாகமாம்.

(௫) பயம் :—ஆகாயத்தில் பிருதிவியின் பாகஞ் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், பயம் உண்டாகும்போது சரீரம் ஜடமா(செயலற்றதா)கின்றது; பிருதிவியும் ஜடத்தன்மையாகிய சுபாவமுடையது. ஆகையால் இது பிருதிவியின் பாகமாம்.

சு-௧0. வாயுவின் ஐந்து தத்துவங்கள்:—(சு) விரிதல், (எ) ஓடுதல், (அ) இருத்தல், (கூ) நடத்தல், (௧0) சுருங்குதல் என்பனவாம். அவற்றுள்,

---

ஆகையால் அது வாயுவின்பாகமாம். இப்படியே மற்றத் தத்துவங்களிலும் அறிந்துகொள்க.

(௬) விரிதல் :—வாயுவில் ஆகாயத்தின் பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், விரிதலென்பது பரவுதற்காம்; ஆகாயமும் பரவியிருக்கிறது. ஆகையால் இது ஆகாயத்தின் பாகமாம்.

(எ) ஓடுதல் :—வாயுவின் முக்கியபாகமாம். ஏனெனின், ஒடுதலென்பது விரைவாய்ச் செல்லுதற்காம்; வாயுவும் விரைவாய்ச் செல்லுகின்றது. ஆகையால் இது வாயுவின் முக்கியபாகமாம்.

(அ) இருத்தல் :—வாயுவில் தேயுவின் பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், இருத்தலென்பது சரீரத்தின் நிமிர்ச்சிக்காம்; தேயுவின் பிரகாசமும் நிமிர்கின்றது. ஆகையால் இது தேயுவின் பாகமாம்.

(௯) நடத்தல் :—வாயுவில் ஜலத்தின் பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், நடத்தலென்பது போகுதற்காம்; ஜலமும் போகின்றது. ஆகையால் இது ஜலத்தின் பாகமாம்.

(௧௦) சுருங்குதல் :— வாயுவில் பிருதிவியின் பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், சுருங்குதலென்பது சங்கோசம் செய்தற்காம்; பிருதிவியும் சங்கோசத்தை (குவிதலை) அடைந்திருக்கிறது. ஆகையால் இது பிருதிவியின்பாகமாம்.

கக-கரு. தேயுவின் ஐந்து தத்துவங்கள்:-(கக) நித்திரை, (கஉ) தாகம், (கங) பசி, (கச) காந்தி, (கரு) சோம்பல் என்பனவாம். அவற்றுள்,

(கக) நித்திரை :—தேயுவில் ஆகாயத்தின் பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், நித்திரை வரும்போது சரீரம் சூநியமாகின்றது; ஆகாயமும் சூநியத்தன்மையுடையதா யிருக்கின்றது. ஆகையால் இது ஆகாயத்தின் பாகமாம்.

(கஉ) தாகம்:—தேயுவில் வாயுவின்பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், தாகம் கண்டத்தை உலர்த்துகின்றது. வாயுவும் ஈரவஸ்திர முதலியவற்றை உலர்த்துகின்றது. ஆகையால் இது வாயுவின் பாகமாம்.

(கங) பசி :— தேயுவின் முக்கியபாகமாம். ஏனெனின், பசி உண்டாகும்போது எதைச்சாப்பிடுகிறோமோ அது பஸ்மமாகிறது; அக்கினியிலும் எதைப் போடுகிறோமோ அதுபஸ்பமாகிறது. ஆகையால் இது தேயுவின் முக்கியபாகமாம்.

(கச) காந்தி :—தேயுவில் ஜலத்தின் பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின்,காந்தி வெயிலால் குறைகின்றது; ஜலமும் வெயிலால் குறைகின்றது. ஆகையால் இது ஜலத்தின் பாகமாம்.

(கரு) சோம்பல்:—தேயுவில் பிருதிவியின் பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், சோம்பல் வரும்போது சரீரம் ஜடமாய்ப் போகின்றது; பிருதிவியும் ஜடசுபாவமுடையது. ஆகையால் இது பிருதிவியின் பாகமாம்.

கசு-உ0. ஜலத்தின் ஐந்து தத்துவங்கள்:—(கசு) உமிழ்நீர், (கஎ) வியர்வை, (கஅ) மூத்திரம், (ககூ) சுக்கிலம், (உ0) சோணிதம் என்பனவாம். அவற்றுள்,

(கசு) உமிழ்நீர்:—ஜலத்தில் ஆகாயத்தின் பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், உமிழ்நீர் மேலுங்கீழுமா யிருக்கின்றது; ஆகாயமும் மேலுங்கீழுமா யிருக்கின்றது. ஆகையால் இது ஆகாயத்தின் பாகமாம்.

(கஎ) வியர்வை:—ஜலத்தில் வாயுவின்பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், வியர்வை உழைப்பதனுல் உண்டாகின்றது; வாயுவும் விசிறிமுதலியவற்ருல் உழைப்பதனுல் உண்டாகின்றது. ஆகையால் இது வாயுவின் பாகமாம்.

(கஅ) மூத்திரம்:—ஜலத்தில் தேயுவின்பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், மூத்திரம் சூடா யிருக்கிறது; தேயுவும் சூடா யிருக்கிறது. ஆகையால் இது தேயுவின் பாகமாம்.

(கசு) சுக்கிலம்:—ஜலத்தின் முக்கியபாகமாம். ஏனெனின், சுக்கிலம் (வீரியம்)வெண்ணிறமாயும் கருப்பத்திற்கு ஏதுவாயு மிருக்கின்றது; ஜலமும் வெண்ணிறமாயும் விருக்ஷத்திற்கு ஏதுவாயும் இருக்கிறது. ஆகையால் இது ஜலத்தின் முக்கியபாகமாம்.

(உ0) சோணிதம் :—ஜலத்தில் பிருதிவியின் பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், சோணிதம் (இரக்தம்) சிவப்புவர்ணமாம் ; பிருதிவியும் ஒவ்வோரிடத்துச் சிவப்பா யிருக்கிறது. ஆகையால் இது பிருதிவியின் பாகமாம்.

உக-உரு. பிருதிவியின் ஐந்து தத்துவங்கள்:—(உக) உரோமம், (உஉ)தோல், (உ௩)நாடி, (உச) மாமிசம், (உரு) எலும்பு என்பனவாம். அவற்றுள்,

(உக) *க0. உரோமம் :—பிருதிவியில் ஆகாயத்தின் பாகம் சேர்ந்திருக்கிறது. ஏனெனின், உரோமம் சூநியமாயிருக்கிறது. அதை வெட்டுவதால் துக்க முண்டாகிற தில்லை ; ஆகாயமும் சூநியமா யிருக்கிறது. ஆகையால் இது ஆகாயத்தின் பாகமாம்.

---

* க0. கேசம் (தலைமயிர்) உரோமத்தி(சரீரத்தின்மயிரி)லடங்கும்.

(உஉ) தோல் :—பிருதிவியில் வாயுவின் பாகம் சேர்ந்திருக்கிறது. எனெனின், தோலால் சீதம், உஷ்ணம், வன்மை, மென்மை, யெனும் பரிசங்கள் அறியப்படுகின்றன ; வாயுவும் பரிச குணமுடையதா யிருக்கின்றது. ஆகையால் இது வாயுவின் பாகமாம்.

(உ௩) நாடி :—பிருதிவியில் தேயுவின் பாகம் சேர்ந்திருக்கிறது. எனெனின், நாடியால் தாபத்தின் பரீட்சை உண்டாகின்றது; தேயுவும் தாபரூபமா யிருக்கின்றது. ஆகையால் இது தேயுவின் பாகமாம்.

(உச) மாமிசம் :—பிருதிவியில் ஜலத்தின் பாகம் சேர்ந்திருக்கிறது. எனெனின், மாமிசம் ஈரமா யிருக்கிறது ; ஜலமும் ஈரமா யிருக்கிறது. ஆகையால் இது ஜலத்தின் பாகமாம்.

(உரு) * கக. எலும்பு :—பிருதிவியின் முக்கியபாகமாம். எனெனின், எலும்பு கடினமாயும் மஞ்சள் நிறமாயு மிருக்கின்றது; பிருதிவியும் கடினமாயும் சிலவிடத்தில் மஞ்சள் நிறமாயு மிருக்கின்றது. ஆகையால் இது பிருதிவியின் முக்கியபாகமாம்.

* கக. நகமும் பல்லும் எலும்பி லடங்கும்.

இவ்வாறு ஸ்தூலதேகத்தில் இருபத்தைந்து தத்துவங்க ளிருக்கின்றன.

சஅ. வின:—இருபத்தைந்து தத்துவங்களை யும் அறிதற்குப் பிரயோசன மென்ன ?

விடை:—

க. இருபத்தைந்து தத்துவங்களும் நானல்ல;

உ. என்னுடையவு மல்ல;

ங. இவைபஞ்சீகிருதபஞ்சமகாபூதங்களுடை யனவாம்;

ச. இவற்றை யறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இவற்றினும் வேறாயி ருக்கிறேன்.

இவ்வாறு நிச்சயஞ்செய்தல் இருபத்தைந்து தத்துவங்களையும் அறிதற்குப் பிரயோசனமாம்.

சகூ. வின:—"இருபத்தைந்து தத்துவங்க ளும் நானல்ல; என்னுடையவு மல்ல" என்று அறிவ தெப்படி ?

விடை:—

க-ரு. ஆகாயத்தின் ஐந்து தத்துவங்களில்,

க. (க) சோகம் உண்டாகும்போதும் நான் அறிகிறேன்.

(உ) சோகம் உண்டாகாதபோது அதன்*கஉ. அபாவத்தையும் நான் அறிகிறேன்.

ஆகையால்,

(க) இந்தச் சோகம் நானல்ல;

(உ) என்னுடையது மல்ல;

(ங) இது ஆகாயத்தினுடையதாம்.

(ச) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயி ருக்கிறேன்.

இவ்வாறு சோகம் நானல்ல என்னுடையது மல்லவென் றறிக.

உ. (க) காமம் உண்டாகும்போதும் நான் அறிகிறேன்.

(உ) காமம் உண்டாகாதபோது அதன் அபா வத்தையும் நான் அறிகிறேன்.

ஆகையால்,

(க) இந்தக் காமம் நானல்ல;

(உ) என்னுடையது மல்ல;

---

*கஉ. அபாவம் இன்மை. இதனை நால்வகையாக நவீ னரும், ஐவகையாகப் பிராசீனரும் கொள்வர். இதன் இலக்கணம் இதன் பதினாறுவது கலையிற் காண்க.

(ங) இது ஆகாயத்தினுடையதாம்.

(ச) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறா யிருக்கிறேன்.

இவ்வாறு காமம் நானல்ல என்னுடையதும ல்ல வென்றறிக.

ங. (க) குரோதம் உண்டாகும்போதும் நான் அறிகிறேன்.

(உ) குரோதம் உண்டாகாதபோது அதன் இன்மையையும் நான் அறிகின்றேன்.

ஆகையால்,

(க) இந்தக் குரோதம் நானல்ல;

(உ) என்னுடையது மல்ல;

(ங) இது ஆகாயத்தினுடையதாம்.

(ச) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயி ருக்கிறேன்.

இவ்வாறு குரோதம் நானல்ல என்னுடைய து மல்லவென் றறிக.

ச. (க) மோகம் உண்டாகும்போதும் நான் அறிகிறேன்.

(உ) மோகம் உண்டாகாதகாலத்து அதன் அபாவத்தையும் நான் அறிகிறேன்.

ஆகையால்,

(க) இந்த மோகம் நானல்ல ;

(உ) என்னுடையதுமல்ல ;

(௩) இது ஆகாயத்தினுடையதாம்.

(ச) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு மோகம் நானல்ல என்னுடையதுமல்லவென் றறிக.

ரு. (க) பயம் உண்டாகும்போதும் நான் அறிகிறேன்.

(உ) பயம் உண்டாகாதகாலத்து அதன் இன்மையையும் நான் அறிகிறேன்.

ஆகையால்,

(க) இந்தப் பயம் நானல்ல ;

(உ) என்னுடையது மல்ல ;

(௩) இது ஆகாயத்தினுடையதாம்.

(ச) இதை அறியும்திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு பயம் நானல்ல என்னுடையதுமல்லவென்றறிக.

சு-கo. வாயுவின் ஐந்து தத்துவங்களில்,

சு. (க) விரிதல்:—சரீரம் விரியுங்காலத்தும் நான் அறிகிறேன்.

(உ) சரீரம் விரியாதகாலத்து அவ்விரிதலின் இன்மையையும் நான் அறிகிறேன்.

ஆகையால்,

(க) இவ்விரிதல் நானல்ல ;

(உ) என்னுடையது மல்ல ;

(ங) இது வாயுவினுடையதாம்.

(ச) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு விரிதல் நானல்ல என்னுடையது மல்லவென்றறிக.

எ. (க) ஓடுதல் :—சரீரம் ஓடும்போதும் நான் அறிகிறேன்.

(உ) ஓடாதகாலத்து அவ்வோடுதலின் இன்மையையும் நான் அறிகிறேன்.

ஆகையால்,

(௧) இவ்வோடுதல் நானல்ல;

(௨) என்னுடையது மல்ல;

(௩) இது வாயுவினுடையதாம்.

(௪) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு ஓடுதல் நானல்ல என்னுடையது மல்லவென்றறிக.

அ. (௧) இருத்தல்:—சரீரம் இருக்கும்போதும் நான் அறிகிறேன்.

(௨) அது இராதகாலத்து அவ்விருத்தலின் இன்மையையும் நான் அறிகிறேன்.

ஆகையால்,

(௧) இவ்விருத்தல் நானல்ல;

(௨) என்னுடையது மல்ல;

(௩) இது வாயுவினுடையதாம்.

(௪) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு இருத்தல் நானல்ல என்னுடையது மல்லவென் றறிக.

கூ. (க) நடத்தல்:—சரீரம் நடக்கும்போதும் நான் அறிகிறேன்.

(உ) சரீரம் நடவாதகாலத்து அந்த நடையின் இன்மையையும் நான் அறிகிறேன்.

ஆகையால்,

(க) இந்த நடை நானல்ல;

(உ) என்னுடையது மல்ல;

(ரு) இது வாயுவினுடையதாம்.

(ச) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு நடத்தல் நானல்ல என்னுடையது மல்லவென் றறிக.

கO. (க) சுருங்குதல்:— சரீரம் சுருக்கத்தை அடையும்போதும் நான் அறிகிறேன்.

(உ) சரீரம் சுருக்கத்தை அடையாதகாலத்து அதன் இன்மையையும் நான் அறிகிறேன்.

ஆகையால்,

(க) இச்சுருங்குதல் நானல்ல;

(உ) என்னுடையது மல்ல;

(௩) இது வாயுவினுடையதாம்.

(௪) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு சுருங்குதல் நானல்ல என்னுடையது மல்லவென் றறிக.

௧௧-௧௫. தேயுவின் ஐந்து தத்துவங்களில்:—

௧௧. (௧) நித்திரை உண்டானால் அதையும் நான் அறிகிறேன்.

(உ) நித்திரை உண்டாகாதகாலத்து அதன் இன்மையையும் நான் அறிகிறேன்.

ஆகையால்,

(௧) இந்த நித்திரை நானல்ல;

(உ) என்னுடையது மல்ல;

(௩) இது தேயுவினுடையதாம்.

(௪) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு நித்திரை நானல்ல என்னுடையது மல்ல வென் றறிக.

௧௨-(க) தாகம் உண்டானுல் அதையும் நான றிகிறேன்.

(உ) தாகம் உண்டாகாதகாலத்து அதன் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால்,

(க) இந்தத் தாகம் நானல்ல;

(உ) என்னுடையது மல்ல;

(ந) இது தேயுவினுடையதாம்.

(ச) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயி ருக்கிறேன்.

இவ்வாறு தாகம் நானல்ல என்னுடையதும ல்ல வென் றறிக.

௧௩-(க) பசி உண்டானுல் அதையும் நானறி கிறேன்.

(உ) பசி உண்டாகாதகாலத்து அதன் இன் மையையும் நானறிகிறேன்.

ஆகையால்,

(க) இந்தப் பசி நானல்ல;

(உ) என்னுடையது மல்ல;

(௩) இது தேயுவினுடையதாம்.

(௪) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு பசி நானல்ல என்னுடையதுமல்லவென் றறிக.

க௪-(க) காந்தி உண்டானால் அதையும் நானறிகிறேன்.

(உ) காந்தி உண்டாகாதகாலத்து அதன் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால்,

(க) இந்தக் காந்தி நானல்ல;

(உ) என்னுடையது மல்ல;

(௩) இது தேயுவினுடையதாம்.

(௪) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு காந்தி நானல்ல என்னுடையது மல்ல வென் றறிக.

கரு-(க) சோம்பல் உண்டானல் அதையும் நானறிகிறேன்.

(உ) சோம்பலுண்டாகாதகாலத்து அதன் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால்,

(க) இந்தச் சோம்பல் நானல்ல;

(உ) என்னுடையது மல்ல;

(ங) இது தேயுவினுடையதாம்.

(ச) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேருயிருக்கிறேன்.

இவ்வாறு சோம்பல் நானல்ல என்னுடையது மல்லவென் றறிக.

கசு-உ0. ஜலத்தின் ஐந்து தத்துவங்களில்:—

கசு-(க) உமிழ்நீர் ஒழுகினல் அதையும் நானறிகிறேன்.

(உ) உமிழ்நீர் ஒழுகாதகாலத்து அதன் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால்,

(க) இந்த உமிழ்நீர் நானல்ல;

(௨) என்னுடையது மல்ல;

(௩) இது ஜலத்தினுடையதாம்.

(௪) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு உமிழ்நீர் நானல்ல என்னுடையது மல்லவென் றறிக.

௧௭-(௧) வியர்வை உண்டானுல் அதையும் நானறிகிறேன்.

(௨) வியர்வை உண்டாகாதகாலத்து அதன் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால்,

(௧) இந்த வியர்வை நானல்ல;

(௨) என்னுடையது மல்ல;

(௩) இது ஜலத்தினுடையதாம்.

(௪) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு வியர்வை நானல்ல என்னுடையது மல்லவென் றறிக.

௧௮-(௧) மூத்திரம் வந்தால் அதையும் நானறிகிறேன்.

(௨) மூத்திரம் வராதகாலத்து அதன் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால்,

(௧) இந்த மூத்திரம் நானல்ல;

(௨) என்னுடையது மல்ல;

(௩) இது ஜலத்தினுடையதாம்.

(௪) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு மூத்திரம் நானல்ல என்னுடையது மல்லவென் றறிக.

௧௯-(௧) சுக்கிலம் சரீரத்தில் அதிகரித்தால் அதையும் நானறிகிறேன்.

(௨) சுக்கிலம் குறைந்தகாலத்து அதன் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால்,

(௧) இந்தச் சுக்கிலம் நானல்ல;

(௨) என்னுடையது மல்ல;

(௩) இது ஜலத்தினுடையதாம்.

(௪) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு வீரியம் நானல்ல என்னுடையதுமல்லவென் றறிக.

௨௦-(க) சோணிதம் சரீரத்தில் அதிகரித்தால் அதையும் நானறிகிறேன்.

(௨) சோணிதம் குறைந்தகாலத்து அதன் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால்,

(க) இந்தச்சோணிதம் நானல்ல;

(௨) என்னுடையது மல்ல;

(௩) இது ஜலத்தினுடையதாம்.

(௪) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு சோணிதம் நானல்ல என்னுடையது மல்லவென் றறிக.

௨௧-௨௫. பிருதிவியின் ஐந்து தத்துவங்களில்:—

௨௧-(க) உரோமம் அதிகமாயிருந்தால் அதையும் நானறிகிறேன்.

(உ) உரோமம் குறைந்தகாலத்து அதன் குறைவையும் நானறிகிறேன்.

ஆகையால்,

(க) இந்த உரோமம் நானல்ல;

(உ) என்னுடையது மல்ல;

(ங) இது பிருதிவியினுடையதாம்.

(ச) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு உரோமம் நானல்ல என்னுடையது மல்ல வென் றறிக.

உஉ.-(க) தோல் பரிசத்தைக் கிரகிக்குமாயின் அதையும் நானறிகிறேன்.

(உ) பரிசத்தைக் கிரகியாதகாலத்து அந்தக் கிரகணஞ்செய்தலின் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால்,

(க) இந்தத் தோல் நானல்ல;

(உ) என்னுடையது மல்ல;

(ங) இது பிருதிவியினுடையதாம்.

(ச) இதை அறியும்திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு தோல் நானல்ல என்னுடையதுமல்லவென் றறிக.

உரு-(க) நாடி நடக்குமாயின் அதையும் நானறிகிறேன்.

(உ) நடவாதகாலத்து அதன் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால்,

(க) இந்த நாடி நானல்ல;

(உ) என்னுடையதுமல்ல;

(ரு) இது பிருதிவியினுடையதாம்.

(ச) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு நாடி நானல்ல என்னுடையதுமல்லவென் றறிக.

உச.-(க) மாமிசம் அதிகரிக்குமாயின் அதையும் நானறிகிறேன்.

(உ) அது குறையுங்காலத்து அதன் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால்,

(க) இந்த மாமிசம் நானல்ல;

(உ) என்னுடையது மல்ல;

(ங) இது பிருதிவியினுடையதாம்.

(ச) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு மாமிசம் நானல்ல என்னுடையது மல்லவென் றறிக.

உடு-(க) எலும்பு ஒழுங்கா யிருக்குமாயின் அதையும் நானறிகிறேன்.

(உ) ஒழுங்கா யிராதகாலத்து அதன் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால்,

(க) இந்த எலும்பு நானல்ல;

(உ) என்னுடையது மல்ல;

(ங) இது பிருதிவியினுடையதாம்.

(ச) இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு எலும்பு நானல்ல என்னுடையது மல்லவென் றறிக.

இவ்வாறு இருபத்தைந்து தத்துவங்களும்நானல்ல; என்னுடையவு மல்லவென் றறிக.

சகூ. வினா:— "இருபத்தைந்து தத்துவங்களும் நானல்ல; என்னுடையவு மல்ல" என்று அறிதலால் என்ன நிச்சய முண்டாயிற்று?

விடை:— ஸ்தூலதேகமும், அதன் தர்மங்களாகிய க. பெயர் உ. ஜாதி ௩. ஆசிரமம் ச. வருணம் (நிறம்) ரு. சம்பந்தம் சு. பரிமாணம் (வடிவம்) எ. ஜனனமரணம் என்பவைகளும் நானல்ல; * கூ. என்னுடையவு மல்ல என்னும் நிச்சய முண்டாயிற்று.

ரு௦. வினா:— க. பெயர் நானல்ல; என்னுடையது மல்லவென் றறிவ தெப்படி?

---

* கூ. ஜாதி ஆசிரமமுதலிய ஸ்தூலதேகதர்மங்கள் ஆத்மாவிற் கில்லை யென்பதனை தேஜோபிந்தூபநிஷத்து, வராககோபநிஷத்தின் இரண்டாம் அத்தியாயமுதலியவற்றில் காண்க. அச்சுருதிகளிற்றானே சூக்ஷ்மகாரணதேகங்களின் தர்மங்களில்லை யென்பதனையும் காண்க.

விடை:—க. பிறப்பதற்கு முன் பெயரில்லை.

உ. பிறந்த பிறகு கற்பிக்கப்பட்டிருக்கிறது.

ந. அன்றியும் சரீரத்தின் வேறு வேறாகிய அவயவங்களிலும் விசாரிக்குமிடத்துப் பெயர் அகப்படுகிறதில்லை.

ஆகையால்,

க. இந்தப் பெயர் நானல்ல;

உ. என்னுடையது மல்ல;

ந. இது ஸ்தூலதேகத்தில் கற்பிக்கப்பட்டிருக்கிறது.

ச. இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

இப்படிப் பெயர் நானல்ல என்னுடையது மல்லவென் றறிக.

ருக. வினா:—உ. ஜாதி(வருணம்) நானல்ல; என்னுடையது மல்லவென் றறிவ தெப்படி?

விடை:—க. பிராஹ்மணன்முதலிய ஜாதிஸ் தூலதேகத்தின் தர்மமாம்; சூக்ஷ்மதேக ஆத்மாக்களின் தர்ம மாகாது. ஏனெனின், முன்தேகத்திலிருந்த லிங்கதேகமும் ஆத்மாவுமே இந்த

வர்த்தமானதேகத்திலும் இனிவரும் தேகத்திலு மிருக்கின்றன. ஜாதியோ முன்தேகத்திருந்தது இந்தத் தேகத்திலில்லை ; இந்தத் தேகத்திலிருப்பது இனிவரும் தேகத்திராது. ஆகையால் ஜாதி ஸ்தூலதேகத்தின் தர்மமா மன்றிச் சூக்ஷ்மதேகஆத்மாக்களின் தர்ம மாகாது.

உ. சரீரத்தின் அவயவங்களில் விசாரித்துப் பார்க்குமிடத்து *கச. ஜாதி யென்பது ஸ்தூல தேகத்திலும் அகப்படுகிறதில்லை.

ஆகையால்,

க. இந்த ஜாதி நானல்ல ;

உ. என்னுடையது மல்ல ;

ங. இது ஸ்தூலதேகத்தில் ஆரோபிதமாம்.

ச. இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கட திருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

---

* கச. பிராஹ்மணத்வாதிஜாதி ஸ்தூலதேக முதலியவற்றி லில்லை யென்னும் விசாரத்தினை வஜ்ரசூசிகோபநிஷத்திற் காண்க.

கலை.] தேகமூன்றற்கும் நான் திருஷ்டா. என

இப்படி* கரு. ஜாதி நானல்ல என்னுடையது மல்லவென் றறிக.

ருஉ. வினா:—ங. ஆசிரமம் நானல்ல; என்னுடையது மல்லவென் றறிவதெப்படி?

விடை:—க. பிரஹ்மசாரி, கிருகஸ்தன், வானப்பிரஸ்தன், சந்நியாசி என்னும் நான்கு ஆசிரமங்களையும் வேறுவேறு கர்மத்தைச்செய்விக்கும்பொருட் டாரோபித்து ஸ்தூல தேகத்தில் ஒப்பியிருக்கிறார்கள்.

உ. அவைகளும் மனிதர்மாத்திரத்தில் சம்பவிக்கிறதில்லை.

---

* கரு. "जातिगुणक्रियाहीनम् ।

ஜாதிகுணக்கிரியைகளின்றியது." என்பது வஜ்ரசூசிகோபநிஷத்து.

"तस्मादन्यगता वर्णा आश्रमा अपि नारद ।
आत्मन्यारोपिताः सर्वे भ्रान्त्या ते नात्मवेदिना ॥

ஆதலால் நாரதரே! வர்ணங்களும் ஆசிரமங்களும் பிறவற்றி லிருப்பனவாயினும், யாவும் பிராந்தியினால் ஆத்மாவி லாரோபிக்கப்பட்டனவாம். அவை ஆத்மஞானிகளுக்கில்லை." என்பது நாரதபரிவிராஜகோபநிஷத்து.

ஆகையால்,

க. இவ்வாசிரமங்கள் நானல்ல;

உ. என்னுடையவு மல்ல;

ந. இவை ஸ்தூலதேகத்தில்ஆரோபிதமாம்.

ச. இவற்றை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிஷ்டாவைப்போல இவற்றினும் வேறாயிருக்கிறேன்.

இப்படி ஆசிரமம் நானல்ல என்னுடையது மல்லவென் றறிக.

ருந. வினா:—ச. வருணம்(நிறம்) நானல்ல; என்னுடையது மல்லவென் றறிவ தெப்படி?

விடை:—க. வெண்மை, கருமை, செம்மை, பொன்மைமுதலிய நிறங்கள் ஸ்தூலதேகத்தில் பிரத்தியக்ஷமாகக் காணப்படுகின்றன.

உ. நான் ஸ்தூலதேக மல்லாமையால்,

க. இந்த நிறங்கள் நானல்ல;

உ. என்னுடையவு மல்ல;

ந. இவற்றை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இவற்றினும் வேறா யிருக்கிறேன்.

இப்படி வருணம் நானல்ல என்னுடையதுமல்ல வென்றறிக.

௫௪. வினா:—ரு.சம்பந்தம் நானல்ல ; என்னுடையதுமல்ல வென்றறிவதெப்படி ?

விடை:—

க. பிதா புத்திரன், குரு சிஷ்யன், ஸ்திரீ புருஷன், எஜமானன் சேவகன் என்னும் இவை முதலிய ஸ்தூலதேகத்தின் சம்பந்தத்தை ஒருவருக்கொருவர் பிரசித்தமாய் மித்தையாகக்கொண்டிருக்கிறார்கள்.

உ. அவற்றை விசாரித்துப் பார்க்குமிடத்து அகப்படுகிறதில்லை.

ந. நான் ஸ்தூலதேகத்திற்கு வேறாய் அசங்கனாயிருத்தலால்,

க. இச்சம்பந்தங்கள் நானல்ல ;

உ. என்னுடையவு மல்ல ;

ந. இவை ஸ்தூலதேகத்தில் ஆரோபிதமாம்.

ச. இவற்றை அறியும்திருஷ்டாவாகியநான் கடதிருஷ்டாவைப்போல இவற்றினும் வேறாயிருக்கிறேன்.

இவ்வாறு சம்பந்தம் நானல்ல என்னுடையது மல்லவென் றறிக.

ருரு. வினு :—சு. பரிமாணம்(வடிவம்) நான ல்ல; என்னுடையதுமல்லவென் றறிவதெப்படி?

விடை:— க. நெட்டை, குட்டை, பருமன்; மெலிவு, கோணல், ஒழுங்கு இவை முதலியவடி வங்களும் பிரசித்தமாக ஸ்தூலதேகத்தில் கா ணப்படுகின்றன.

உ. நான் ஸ்தூலதேகத்திற்கு வேருய் நிரா காரனு யிருத்தலால்,

க. இந்த ஆகார(வடிவ)ங்கள் நானல்ல;

உ. என்னுடையவு மல்ல;

ந. இவை ஸ்தூலதேகத்தினுடையவாம்.

ச. இவற்றை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இவற்றினும் வேருயி ருக்கிறேன்.

இப்படிப் பரிமாணம் நானல்ல என்னுடைய து மல்லவென் றறிக.

ருசு. வினு:—எ. நான் ஜனனமரணமுடைய வ னல்லன்; எனக்கு ஜனனமரண முண்டாகா தென் றறிவ தெப்படி?

விடை:—க. ஆத்மாவிற்கு ஜன்மம் ஒப்புவோமாயின், ஆத்மா அநித்தியமாகும். இந்த வார்த்தை மீமாம்ஸகன் முதலாயுள்ள பரலோகவாதிகளாகிய ஆஸ்திகர்களுக்கும் உடன்பாடல்ல; ஏனெனின், ஆத்மா உற்பத்தியுடைய தாகுமாயின் நாசமுடையது மாகும். அதனால்,

(க) பூர்வஜன்மத்திற் செய்யப்படாத கர்மத்தால் சுகதுக்கங்களின் அநுபவமும்,

(உ) இந்த ஜன்மத்திற் செய்யப்பட்ட கர்மம் அநுபவமின்றி நசித்தலுமாகிய,

இவ்விரண்டு தோஷங்களும் உண்டாகும்.

ஆகையால் கர்மவாதிகளின் மதப்படி ஆத்மாவைக் கர்த்தா போக்தாவென வொப்பினும் ஜனனமரணமில்லாததாகவே ஒப்பவேண்டியதாகும்.

உ. அன்றியும், ஆத்மாவின் ஜன்மத்திற்கு யாதொருகாரணமும் சம்பவிக்கவில்லை. ஏனெனின், ஆத்மாவிற்குக் காரண மிருக்குமாயின்; அது ஆத்மாவைவிட வேறாகவே யிருக்கவேண்டும்.

(க) ஆத்மாவிற்கு வேறாகவோ அநாத்மாவாகிய நாமரூபங்க ளிருக்கின்றன; அவைகள் ஆத்

மாவில் இரஜ்ஜு சர்ப்பம்போலக் கற்பிதமாயி ருத்தலால் காரணமாகா.

(உ) பிரஹ்மமோ கடாகாயத்தின் சொரூப மாகிய மகாகாயம்போல ஆத்மாவைவிட வேறு காமல் அதன் சொரூபமாகவே யிருத்தலால் கா ரண மாகாது.

அதனுல் ஆத்மாவிற்கு ஜன்ம மில்லை.

ந. ஜன்மமில்லாமையால் மரணமு மில்லை.

ச. ஆத்மாவினிடத்தில் ஜனனமரண மில்லா மையால், அது க. பிறப்பு, உ. இருப்பு, ந. வள ர்ச்சி, ச. விகாரம், ரு. குறைவு, சு. மரணம் என் னும் ஆறுவிகாரங்களும் இல்லாததாயிருக்கின் றது.

ஆகையால்,

க. நான் ஜனனமரண முடையவ னல்லன்.

உ. என்னிடத்து ஜனனமரண முண்டாகிற தில்லை.

ந. இவை ஸ்தூலதேகத்திற்குக் கர்மத்தினு லுண்டாகின்றன.

ச. இவற்றை யறியும் திருஷ்டாவாகியநான் கடதிருஷ்டாவைப்போல இவற்றினும் வேறாயி ருக்கிறேன்.

இப்படி நான் ஜனனமரணமுடையவ னல்லன்; எனக்கு ஜனனமரண முண்டாகா வென வறிக.

ருஎ. வினா:—பஞ்சமகாபூதங்களின் நிவிருத்தியில் திருஷ்டாந்தம் யாது?

விடை :—திருஷ்டாந்தம் :— ஒருவனுக்குப் பூதம் பிடித்திருக்குமாயின், அவன் பூசாரியை அழைத்து, உடுக்கடிப்பித்து, உப்புமுதலிய ஐந்து பதார்த்தங்களைச் சேர்த்து, அதற்குப் பலி கொடுத்துப் பூதத்தை நிவர்த்திக்கிறான்.

சித்தாந்தம் :— அதுபோல ஆகாயமுதலிய பஞ்சமகாபூதங்கள் சரீரரூபமாய் ஜீவனைப்பிடித்திருக்கின்றன. அவற்றின் நிவிருத்தியின்பொருட்டுப் பிரஹ்மநிஷ்டகுருவாகிய பூசாரியை * கச.

---

*கச. விவேகமுதலியநற்குணங்களோடு மோக்ஷஇச்சையுள்ளவனான அதிகாரி.

க. கையில் சந்திப்புக்குரிய பதார்த்தங்(பத்திரபுஷ்பபலாதி)களைக் கொண்டு குருவைச் சரணம்புகுந்து,

உ. சாஷ்டாங்கநமஸ்காரஞ்செய்து,

ங. "ஐயனே, எனக்குப் பிரஹ்மவித்தையை உபதேசஞ்செய்தருளுவீராக" என்று சொல்லி, "பந்தமென்பது யாது? மோக்ஷமென்பது யாது? அவித்தையென்பது யாது?" என்னு மிவைமுதலிய பிரசினைகளைச் செய்து,

விதியோடு சரணம்புகுந்து, வேதசாஸ்திரமாகிய உடுக்கடிப்பித்து, மேற்கூறப்பட்ட இருபத்தைந்து தத்துவங்களிலிருந்து ஐந்து ஐந்து தத்துவங்களாகிய பலியை ஒவ்வொரு பூதத்திற்கும் தன் தன் பாகத்தைக்கொடுத்து, நானிந்த இருபத்தைந்து தத்துவங்களுக்கும் திருஷ்டாவாயிருக்கிறேன் என்று இப்படி நிச்சயம் செய்வதால் இந்தப் பஞ்சமகா பூதங்களுக்கும் *கரு. அத்தியந்தநிவிருத்தி உண்டாகின்றது.

இவ்வாறு ஸ்தூலதேகத்திற்கு நான் திருஷ்டாவாயிருக்கிறேன்.

உ. சூக்ஷ்மதேகத்திற்கு நான் திருஷ்டா.

௫அ. வி:—சூக்ஷ்மதேகமென்பது யாது?

விடை:—சூக்ஷ்மதேகம் அபஞ்சிகிருதபஞ்சமகாபூதங்களின் பதினேழுதத்துவங்களினதாம்.

---

௪. குருவினது சந்தோஷத்தின்பொருட்டுச் சரீரம், மனம், தனம், வாக்கு என்பவைகளை அர்ப்பணஞ்செய்து சேவைசெய்யவேண்டும்.

இது பிரஹ்மவித்தையைக் கைக்கொள்ளும் விதியாம்.

* கரு. மறுபடியும் தொடராதிருத்தல் அத்தியந்தநிவிருத்தி.

கலை.] தேகமூன்றற்கும் நான் திருஷ்டா. அரு

ருகூ. வினா:—சூக்ஷமதேகத்தின் பதினேழு தத்துவங்களெவை?

விடை:— க-ரு. ஐந்து ஞானேந்திரியம், சூ-க0. ஐந்து கர்மேந்திரியம், கக-கரு. ஐந்து பிராணன், கசு. மனம், கஎ. புத்தி என்னுமிவை * கசு. பதினேழுதத்துவங்களாம்.

சூ0. வினா:— ஐந்து * கஎ. ஞானேந்திரியங்கள் எவை?

விடை:—க—ரு. சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, சிங்குவை, கிராணம் என்னுமிவ்வைந்தும் ஞானேந்திரியங்களாம்.

---

* கசு. "बुद्धिकर्मेन्द्रियप्राणपंचकैर्मनसा धिया ।
शरीरं सप्तदशभिस्सूक्ष्मं तल्लिंगमुच्यते ॥

ஞானேந்திரிய கர்மேந்திரிய பிராணபஞ்சகங்கள் மனது புத்தி என்னும் பதினேழினால் சூக்ஷ்மசரீரமாம். இது இலிங்கமெனப்படும்." என்பது யோகசிகோபநிஷத்து.

* கஎ ஞானத்திற்குச் சாதனமாகிய இந்திரியம் ஞானேந்திரியம்.

௬௧. வினா:—ஐந்து *கஅ. கர்மேந்திரியங்களெவை?

விடை:—௯-௧௦. வாக்கு, பாணி, பாதம், உபஸ்தம், குதம் என்னும் இவ்வைந்தும் கர்மேந்திரியங்களாம்.

௬௨. வினா:—ஐந்து பிராணன் (பஞ்சவாயு) எவை?

விடை:—௧௧-௧௫. பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன் என்னு மிவை பஞ்சவாயுக்களாம்.

௬௩. வினா:—மனமென்பதெது?

விடை:—௧௬. சங்கற்பவிகற்பமாகிய விருத்தி மனமெனப்படும்.

௬௪. வினா:—புத்தியென்பதெது?

விடை:— ௧௭. நிச்சயரூபமாகிய விருத்தி புத்தியெனப்படும்.

௬௫. வினா:—அபஞ்சீகிருதபஞ்சமகா பூதமென்பதெது?

விடை:—எந்தப் பூதங்களுக்கு முன் சொன்னபடி பஞ்சீகரண முண்டாக வில்லையோ,

---

* கஅ. கர்மத்திற்குச் சாதனமாகிய இந்திரியம் கர்மேந்திரியம்.

க. அந்தப் பூதங்கள் அபஞ்சீகிருதபஞ்சமகா பூதங்க ளெனப்படும்.

உ. அவற்றையே சூக்ஷ்மபூதங்க ளென்றும்,

ங. தன்மாத்திரைக ளென்றும் கூறுவர்.

ஙங. வினா:—அபஞ்சீகிருதபஞ்சமகாபூதங்க ளின் பதினேழுதத்துவங்களை அறிவ தெப்படி?

விடை:—

ஞானேந்திரியகர்மேந்திரியபஞ்சகங்களில்:—

க. ஆகாயத்தின் * கக. சத்துவகுணபாகம் சுரோத்திரம்.

உ. ஆகாயத்தின் இரஜோகுணபாகம் வாக் கிந்திரியம்.

(க) சுரோத்திரேந்திரியம் சப்தத்தைக்கேட் கின்றது.

(உ) வாக்கிந்திரியம் சப்திக்கின்றது.

(க) சுரோத்திரம் ஞானேந்திரியம்.

---

* கக. சர்வபதார்த்தங்களிலும் சாத்துவிகம், இராஜதம், தாமதமென மூன்றுகுணங்க ளிருக்கின்றன. கூறிய இக்குணவிவரங்களைப் பைங்கலசுருதியிற் காண்க. எம்மாற்செய்யப்பட்டுள்ள அஷ்டாங்கயோகசூத்திரத் தின் குறிப்புரையிலும் விரிவாய்க் காணலாம்.

(உ) வாக்கு கர்மேந்திரியம்.

இவ்விரண்டற்கும் சிநேக முண்டு.

ரு. வாயுவின் சத்துவகுணபாகம் துவக்கு.

௪. வாயுவின் இரஜோகுணபாகம் பாணி.

(க) துவக்கிந்திரியம் பரிசத்தைக் கிரகிக்கின்றது.

(உ) பாணீந்திரியம் அதை நிருவாகம் செய்கின்றது.

(க) துவக்கு ஞானேந்திரியம்;

(உ) பாணி கர்மேந்திரியம்;

இவ்விரண்டற்கும் சிநேக முண்டு.

௫. தேயுவின் சத்துவகுணபாகம் சக்ஷு.

௬. தேயுவின் இரஜோகுணபாகம் பாதம்.

(க) சக்ஷு இந்திரியம் உருவத்தைக் கிரகிக்கின்றது.

(உ) பாதேந்திரியம் நடக்கின்றது.

(க) சக்ஷு ஞானேந்திரியம்;

(உ) பாதம் கர்மேந்திரியம்;

இவ்விரண்டற்கும் சிநேக முண்டு.

௭. ஜலத்தின் சத்துவகுணபாகம் சிங்நுவை.

அ. ஜலத்தின் இராஜோகுணபாகம் உபஸ்தம்.

(க) சிஹ்வேந்திரியம் இரசத்தைக் கிரகிக்கின்றது.

(உ) உபஸ்தேந்திரியம் இரசத்தை விடுகின்றது.

(க) சிஹ்வை ஞானேந்திரியம்;

(உ) உபஸ்தம் கர்மேந்திரியம்;

இவ்விரண்டற்கும் சிநேக முண்டு.

கூ. பிருதிவியின்சத்துவகுணபாகம் கிராணம்.

கo. பிருதிவியின் இரஜோகுணபாகம் குதம் (பாயுரு).

(க) கிராணேந்திரியம் கந்தத்தைக் கிரகிக்கின்றது.

(உ) குதேந்திரியம் கந்தத்தை விடுகின்றது.

(க) கிராணம் ஞானேந்திரியம்;

(உ) குதம் கர்மேந்திரியம்;

இவ்விரண்டற்கும் சிநேக முண்டு.

பஞ்சப்பிராணமனோபுத்திகளில்:—

கக—கரு. இந்தப் பஞ்சமகாபூதங்களின்

* ௨௦. இரஜோகுணபாகங்கள் சேர்ந்து பஞ்சப்பிராண ஞயின.

கசு-கஎ. இந்தப் பஞ்சபூதங்களின் *௨க. சத்துவகுணபாகங்கள் சேர்ந்து அந்தக்கரணமாயின. இவ்வந்தக்கரணமே மனரூபமாயும் புத்திரூபமாயு மிருக்கின்றது.

இங்கே சித்தமும் அகங்காரமும் மனதிலும் புத்தியிலு மடங்கும்.

இப்படி அபஞ்சீகிருதபஞ்சமகாபூதங்களின் காரியமாகிய பதினேழுதத்துவங்களையுமறிக.

கூஎ. வினு—பதினேழுதத்துவங்களையும் அறிதற்குப் பிரயோஜன மென்ன ?

விடை :—இந்தப் பதினேழுதத்துவங்களும் நானல்ல; என்னுடையவு மல்ல; இவைகள் அபஞ்சீகிருதபஞ்சமகாபூதங்களுடையனவாம் என்பது இப்பதினேழுதத்துவங்களையும் அறிதற்குப் பிரயோஜனமாம்.

கூஅ. வினு :—இந்தப் பதினேழுதத்துவங்களும் நானல்ல; என்னுடையவு மல்லவென்றறிவ தெப்படி ?

* ௨௦. * ௨க. பைங்கலசுருதி.

விடை:-இந்தப் பதினேழுதத்துவங்களையும் நான் அறிகிறவனு யிருக்கிறேன். எவன் எதை அறிகிருனே, அவன் அதனினும் வேறுவன் என்பது நியம மாகையால், இந்தப் பதினேழுதத்துவங்களும் நானல்ல; என்னுடையவுமல்லவென் றறியவேண்டும்.

சுசு. வினு:—இதில் அறியத்தக்க திருஷ்டாந்தம் யாது?

விடை:—திருஷ்டாந்தம்:— (க) நாடகசாலையிலுள்ள (உ) தீபமானது, (ங) இராஜா, (ச) மந்திரி, (ரு) வேலைக்காரன், (சு) நாயகி, (எ) வாத்தியகாரர்கள், (அ) மற்றச் சபையிலுள்ள ஜனங்களென்னும், (கூ) இவர்கள் உட்கார்ந்திருந்தால் அப்போதும் பிரகாசிக்கிறது. (க0) எல்லோரும் எழுந்து போனகாலத்துச் சூநியமாகிய வீட்டையும் பிரகாசிக்கிறது

சித்தாந்தம் :—அதுபோல (க) ஸ்தூலதேகமாகிய நாடகசாலையில் (உ) சாக்ஷியாகிய நான் தீபமா யிருக்கிறேன்; (ங) அந்த நான், சிதாபாசனுகிய இராஜா, (ச) மனமாகிய மந்திரி, (ரு) பஞ்சப்பிராணனுகிய சேவகர்கள், (சு) புத்தியாகிய நாயகி(கூத்தாடிச்சி), (எ) தசேந்திரியங்களாகிய வாத்தியகாரர், (அ) சப்தமுதலிய பஞ்ச

விஷயமாகிய சபையின் ஜனங்களென்னு (கூ) மிவர்கள் ஜாக்கிரசொப்பனசமயங்களில் இருந்தால் அப்போது இவர்களை அறிகிறேன்; (கo) சுழுத்திசமயத்தில் இவர்களில்லாதபோது இவர்களில்லாமையையும் நான் அறிகிறேன்.

என்றிப்படி இதில் சொல்லப்பட்ட திருஷ்டாந்தத்தை அறிக.

எo. வினு:—அதை எப்படி அறியலாம்?

விடை:—க. ஜாக்கிராவஸ்தையில் இந்திரிய அந்தக்கரணங்களிரண்டினது உதவியால் நான் அறிகிறேன்;

உ. சொப்பனுவஸ்தையில் இந்திரியமின்றி அந்தக்கரணமாத்திரத்தின் சகாயத்தினுல் நான் அறிகிறேன்;

ரு. சுழுத்தியவஸ்தையில் இந்திரியம் அந்தக்கரணமென்னும் இரண்டினது சகாயமின்றி யான்மாத்திரமே அறிகிறேன்.

எக. வினு:—இதில் வேறு திருஷ்டாந்தம் யாது?

விடை:—திருஷ்டாந்தம்:—(க) ஐந்து துவாரமுள்ள குடத்திற்குள் பாத்திரம் திரிகளோடு தீபம் எரிகிறது.

(உ) அந்தத் தீபமானது பாத்திரம், எண்ணெய், திரி, குடத்தின் உள்ளவயவம், குடத்தின் துவாரங்க ளென்னும் இவற்றைப் பிரகாசிப்பதாய்க் குடத்திற்கு வெளியில் துவாரங்களுக்கு நேரே வைக்கப்பட்டுள்ள வீணை, புஷ்பக்கொத்து, இரத்தினம், இரசபாத்திரம், அத்தர்ப்புட்டி யென்னும் இவை எல்லாவற்றையும் துவாரத்தின்வழியாகப் பிரகாசிக்கிறது.

(ந) சூரியரூபமாகச் சகல பிரஹ்மாண்டத்தையும் பிரகாசிக்கிறது.

(ச) மகாதேஜோமயமாகிய சாமானியரூபத்தால் சருவவியாபியா யிருக்கிறது.

சித்தாந்தம்:—அதுபோல, (க) பஞ்சஞானேந்திரியமாகிய துவாரமுள்ள ஸ்தூலதேகமாகிய குடத்தினுள் இதயதாமரையாகிய பாத்திரத்தில் மனமாகிய எண்ணெயும் புத்தியாகிய திரியும் இருக்கின்றன. அதன்மேரில் ஆரூடமாயுள்ள ஆத்மாவாகிய தீபம் இருக்கிறது.

(உ) அது இதயமாகிய பாத்திரத்தையும், மனமாகிய எண்ணெயையும், புத்தியாகியதிரியையும், தேகத்தின் உள்ளவயவங்களையும், இந்திரியமாகிய துவாரங்களையும் அறிவதாய், இந்திரி

யங்களோடு சம்பந்தமுள்ள சத்தமுதலிய விஷயங்களையும் இந்திரியவாயிலாக அறிகிறது.

(௩) ஈசுவரரூபமாகப் பிரஹ்மாண்டமுதலிய சகல வெளிப்பிரபஞ்சத்தையும் அறிகிறது.

(௪) சாமானியசைதன்னியமாகிய பிரஹ்மரூபத்தால் சருவவியாபியா யிருக்கிறது.

இஃது இதில் வேறு * உஉ. திருஷ்டாந்தமாம்.

எஉ. வினா :—இப்படிச் சொல்லுவதால் என்ன நிச்சயமுண்டாயிற்று ?

விடை:—மேற் கூறப்பட்டுள்ள பதினேழுதத்துவங்களும் யானல்ல ; இவை என்னுடையவுமல்ல; இவை பஞ்சமகாபூதங்களி னுடையவாம். இவற்றை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இவற்றினும் வேறா யிருக்கிறேன் என்னும் நிச்சய முண்டாயிற்று.

எங. வினா:—பதினேழுதத்துவங்களும் நானல்ல என்னுடையவு மல்ல வென் றறிவதெப்படி ?

---

* உஉ. இங்கே வேறு யாகசாலையின் திருஷ்டாந்தம் உண்டு. அது மேல் ஏழாவது கலையில் உபதிருஷ்டாவென்னும் ஆத்மாவினது விசேஷணத்தின் பிரசங்கத்திற் செ: ல்லப்படும்.

விடை :—க-ரு. ஞானேந்திரியமைந்தில்,

க. சுரோத்திரம்

(க) சத்தத்தைக் கேட்குமாயின், அதையும் நானறிகிறேன் ;

(உ) கேளாதகாலத்து, அக்கேட்டலின் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால் இந்தச் சுரோத்திரம் நானல்ல ; என்னுடையது மல்ல; இது ஆகாயத்தினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

உ. துவக்கு

(க) பரிசத்தைக் கிரகிக்குமாயின், அதையும் நானறிகிறேன் ;

(உ) கிரகியாதகாலத்து, அந்தக் கிரகித்தலின் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால் இந்தத்துவக்கு நானல்ல ; என்னுடையது மல்ல; இது வாயுவினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

௩. சக்ஷு

(க) உருவத்தைப் பார்த்தால், அதையும் நானறிகிறேன் ;

(உ) பாராதகாலத்து, அப்பார்த்தலின் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால் இந்தச் சக்ஷு நானல்ல ; என்னுடையது மல்ல ; இது தேயுவினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போலஇதனினும் வேறாயிருக்கிறேன்.

௪. சிங்நுவை

(க) இரசத்தின் உருசியைக் கிரகித்தால், அதையும் நானறிகிறேன் ;

(உ) உருசியைக் கொள்ளாதகாலத்து, அந்த உருசியைக் கொள்ளுதலின் இன்மையையும்நானறிகிறேன்.

ஆகையால் இந்தச் சிங்நுவை நானல்ல ; என்னுடையது மல்ல ; இது அப்புவினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான்கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

ரு. கிராணம்

(க) கந்தத்தைக் கிரகிக்குமாயின், அதையும் நானறிகிறேன்;

(உ) கிரகியாதகாலத்து, அந்தக் கிரகணம்செய்தலின் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால் இந்தக் கிராணம் நானல்ல; இது என்னுடையதுமல்ல; இதுபிருதிவியினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறாயிருக்கிறேன்.

சா-கய. கர்மேந்திரியம் ஐந்தில்,

சா. வாக்கு

(க) வசனிக்குமாயின், அதையும் நானறிகிறேன்;

(உ) வசனியாதகாலத்து, அதனின்மையையும் நானறிகிறேன்.

ஆகையால் இந்தவாக்குநானல்ல; இது என்னுடையதுமல்ல; இது ஆகாயத்தினுடையதாம். இதை அறியும்திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும்வேறாயிருக்கிறேன்.

எ. பாணி (கை)

(க) கொடுக்கல் வாங்கல் செய்தால், அதையும் நானறிகிறேன்;

(உ) செய்யாதகாலத்து, அதன் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால் இந்தப் பாணி நானல்ல; இது என்னுடையதுமல்ல; இது வாயுவினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேருயிருக்கிறேன்.

அ. பாதம்

(க) நடந்தால், அதையும் நானறிகிறேன்;

(உ) நடவாதகாலத்து, அதனின்மையையும் நானறிகிறேன்.

ஆகையால் இந்தப் பாதம் நானல்ல; இது என்னுடையதுமல்ல; இது தேயுவினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேருயிருக்கிறேன்.

கூ. உபஸ்தம்

(க) இரசத்தை(மூத்திரவீரியங்களை) விடுமாயின், அதையும் நானறிகிறேன்;

(உ) விடாதகாலத்து, அதன் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால் இந்த உபஸ்தம் நானல்ல; இது என்னுடையது மல்ல; இது ஜலத்தினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போலஇதனினும்வேறு யிருக்கிறேன்.

௧0. குதம்

(௧) மலத்தை நீக்குமாயின், அதையும் நானறிகிறேன்;

(௨.) நீக்காதகாலத்து, அதன் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால் இந்தக் குதம் நானல்ல; இது என்னுடையது மல்ல; இது பிருதிவியினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போலஇதனினும்வேறு யிருக்கிறேன்.

௧௧-௧௭. பிராணஅந்தக்கரணங்களில்,

௧௧-௧௫. பஞ்சப்பிராணன்

(௧) கிரியையைச் செய்யுமாயின், அதையும் நானறிகிறேன்;

(௨) கிரியையைச்செய்யாதகாலத்து, அதன் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால் இந்தப் பிராணன் நானல்ல; இது

என்னுடையது மல்ல; இது சேர்ந்துள்ள பஞ்ச மகாபூதத்தினுடையதாம். இதை அறியும்திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறா யிருக்கிறேன்.

௧௬. மனம்

(௧) சங்கற்பவிகற்பஞ் செய்யுங்காலத்து, அதையும் நானறிகிறேன்;

(௨) சங்கற்பவிகற்பம் செய்யாதகாலத்து, அதன் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால் இந்த மனம் நானல்ல; இது என்னுடையது மல்ல; இது சேர்ந்துள்ள பஞ்சமகாபூதத்தினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனினும் வேறா யிருக்கிறேன்.

௧௭. புத்தி

(௧) நிச்சயஞ்செய்யுமாயின், அதையும் நானறிகிறேன்;

(௨) நிச்சயஞ்செய்யாதகாலத்து, அதன் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால் இந்தப் புத்தி நானல்ல; இது என்னுடையது மல்ல; இது சேர்ந்துள்ள பஞ்சமகாபூதத்தினுடையதாம். இதை அறியும் திருஷ்டா

வாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இதனி னும் வேறாயிருக்கிறேன். இவ்வாறு இந்தப்பதி னேழுதத்துவங்களும் நானல்ல; என்னுடைய வு மல்லவென் றறிக.

எச. வினா:—இப்படிச் சொல்லுவதனால் என்ன நிச்சயம் உண்டாயிற்று?

விடை:—க. இலிங்கதேகமும், அதன் தர்மமாகிய புண்ணியபாவங்களின் கர்த்திருத்துவமும், அவற்றின் பலமாகிப் சுகதுக்கங்களின் போக்திருத்துவமும்,

உ. இகலோகபரலோகங்களில் கமனாகமனமும் (போக்கு வரவும்),

ந. வைராக்கியசமதமாதி சாத்துவிகவிருத்திகளும்; இராகத்துவேஷஹர்ஷாதி இராசதவிருத்திகளும், நித்திரை சோம்பல் மறதிமுதலிய தாமதவிருத்திகளும்,

ச. அப்படியே பசி, தாகம், அந்தமந்தபடுத்துவ (குருட்டுத்தன்மை மந்தத்தன்மை தெளிவு) முதலியவைகளும்,

நானல்ல; என்னுடையவுமல்ல என்னும் நிச்சயம் உண்டாயிற்று.

எ௫. வினு:—புண்ணியபாவங்களின் கர்த்தாவும் அவற்றின் பலமாகிய சுகதுக்கங்களின் போக்தாவும் நானல்ல; அக்கருத்திருத்துவ போக்திருத்துவங்கள் என்னுடைய தர்மமுமல்லவென்றறிவதெப்படி?

விடை:—க. எந்த வஸ்து விகாரியோ அது கிரியையுடையதா யிருத்தலால் கர்த்தாவெனப்படும். நான் நிர்விகாரகூடஸ்தனு யிருத்தலால் கிரியைக்கு ஆசிரயனல்லன். அதனுல் புண்ணிய பாவமாகிய கிரியைக்குக் கர்த்தாவு மல்லன். எவன் கர்த்தா வல்லனோ, அவன் போக்தாவு மல்லன். ஆகையால் இவை அந்தக்கரணத்தின் தர்மமாம்; என்னுடைய வல்ல. இவற்றை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இவற்றினும் வேறு யிருக்கிறேன் என்றிப்படி அறிக.

எசு. வினு:—இகலோகபரலோகங்களில் கமனுகமனம் என்னுடைய தர்ம மல்ல வென்றறிவது எப்படி?

விடை:—உ. அந்தக்கரணம் (இலிங்கதேகம்) பரிச்சின்னமா யிருக்கிறது. அதற்குப்பிராரப்த கர்மத்தின் வலியால் கமனுகமனம் சம்பவிக்கிறது. நான் ஆகாயத்தைப்போல வியாபகமா யிரு

க்கிறேன். ஆகையால்கமனுகமனம் என்னுடைய தர்ம மல்ல என்றிப்படி யறிக.

எஎ. வினு :—சாத்துவீக இராசத தாமதவி ருத்திகள் நானல்ல ; என்னுடையவு மல்ல வெ ன் றறிவ தெப்படி ?

விடை:—ங. திருஷ்டாந்தம்:— (க) ஓர் அர ண்மனையில் உட்கார்ந்திருக்கும் (உ) இராஜாவி ன் விநோதத்தின் பொருட்டு (ங) ஓர் மாயாவி (ச) நீர்க்குழல் ஒன்று செய்து, (ரு) அதன் து வாரத்தைத் திறக்குங்கால் அதினின்றும் மூன் று நீர்த்தாரைகள் வெளிப்படுகின்றன. (சு) அந் த மூன்று தாரைகளினின்றும் பிரவாகரூபமாக அநேகம் தாரைகள் எழும்புகின்றன. (எ) அந் தத் துவாரத்தை அடைக்கும்போது அம்மூன் று தாரைகளும் தடைப்பட இராஜாமாத்திரம் தனித்து மிஞ்சுகிறான்.

சித்தாந்தம்:—(க) அதுபோல ஸ்தூலசரீரமா கிய அரண்மனையில் (உ) அதிஷ்டான கூடஸ்த சொரூபமாயுள்ள பரமாத்மாவாகிய இராஜா வி ருக்கின்றார். அவருடைய விநோதத்தின் பொ ருட்டு (ங) மாயையா(அஞ்ஞானமா)கிய மாயா வி, (ச) அந்தக்கரணமாகிய நீர்க்குழலைச்செய்து, (ரு) சாக்கிரசொப்பனங்களில் அதன் பிராசத்

துவமாகிய துவாரத்தைத்திறக்க, அதினின்று ம் மூன்றுகுணத்தின் பிரவாகமாகிய மூன்றுதாரைகள் வெளிப்படுகின்றன. (சு) அந்த மூன்று தாரைகளினின்றும் அளவில்லாத விருத்திகள் எழும்புகின்றன. (எ) சுழுத்தியில் பிராரத்துவ கர்மமாகிய துவாரங்கள் தடைப்படவே, அந்த விருத்திகளின் பாவாபாவங்(உண்மையின்மை)களை அறியும் ஆநந்தசொரூபகேவலபரமாத்மாவாகிய இராஜா மிஞ்சுகிறார். அவரே நானாகையால், இந்தச் சாத்துவிக இராசத தாமத விருத்திகள் நானல்ல; என்னுடையவு மல்ல ; இவை அந்தக்கரணத்தினுடையவாம். இவற்றை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப் போல இவற்றினும் வேறா யிருக்கிறேனென்றிப்படி அறிக.

எஅ. வினா:—அந்த மந்தபடுத்துவங்கள் நானல்ல; என்னுடையவுமல்லவென் றறிவதெப்படி?

விடை:—ச-(க) நேத்திரமுதலிய இந்திரியங்கள் தத்தம் விஷயங்களொன்றையும் (எதனையும்) கிரகியாதிருத்தல் அவற்றின் அந்தத்துவம். அதையும் நானறிகிறேன்.

(உ) விஷயங்களைச் சொற்பமாகக் கிரகித்தல் அவற்றின் மந்தத்துவம். அதையும் நானறிகிறேன்.

(ங) விஷயங்களைத் தெளிவாகக் கிரகித்தல் அவற்றின் படுத்துவம். அதையும் நானறிகிறேன்.

ஆகையால் இவை நானல்ல; என்னுடையவுமல்ல; இவை இந்திரியங்களின் தர்மமாம். இவற்றை அறியும் திருஷ்டாவாகிய நான் கடதிருஷ்டாவைப்போல இவற்றினும்வேறாயிருக்கிறேன்.

இப்படிச் சூக்ஷ்மதேகத்திற்கு நான் திருஷ்டாவா யிருக்கிறேன்.

௩. காரணதேகத்திற்கு நான் திருஷ்டா.

எகூ. வினா:—காரணதேக மென்பது யாது?

விடை:—க. புருஷன் சுழுத்தியினின்றும் எழுந்த காலத்து, "எனக்கு இன்றைக்கு ஒன்றும் தெரியவில்லை," என்று சொல்லுவதனால்,* உங. சுழுத்தியில் அஞ்ஞான மிருக்கிறதெனச்சித்திக்கிறது. அன்றியும்,

உ. ஜாக்கிரத்திலும் "நான் பிரஹ்மத்தை அறியேன்; என்னுடையது எனக்குத் தெரியவில்

*உங சுழுத்தியினின்றும் எழுந்த புருடனுக்கு "எனக்கு ஒன்றுந்தெரியவில்லை." என்னும் ஞானம் உண்டாகிறது. அந்த ஞானம் அநுபவரூப மன்று. ஆனல் அது சுழுத்திகாலத்து அநுபவிக்கப்பட்ட அஞ்ஞானத்தின் ஸ்மிருதியாம். அந்த ஸ்மிருதிக்கு விஷயம் சுழுத்திகாலத்தின் அஞ்ஞானமாம்.

லே; நான் இதை அறியேன்.'' என்னும் அநுபவ த்திற்கு விஷயம் அஞ்ஞானமாம்.

௩. அன்றியும் சொப்பனத்திற்குக் காரண மும் நித்திரையாகிய அஞ்ஞானமாம். இப்படிப் பட்ட அஞ்ஞானம் எதுவோ, அது *உ௪. காரணதேகமாம்.

௨௦. வினு:—காரணதேகம் நான் அல்ல; என்னுடையது மல்லவென் றறிவது எப்படி?

விடை:—''நான் அறிகிறேன்'' ''எனக்குத்தெரியவில்லை.'' என்றிப்படி உண்டாகும் அந்தக்கரணத்தின் விருத்திகளை ஞாத (அறியப்பட்ட) அஞ்ஞாத (அறியப்படாத) வஸ்துக்களாகிய விஷயங்களோடு நான் அறிகிறேன். ஆகையால்

---

* உ௪. க. அஞ்ஞானத்தை ஸ்தூலசூக்ஷ்மதேகங்களுக்குக் காரணமா யிருத்தலால் காரண மென்றும்,

உ. தத்துவஞானத்தால் தகிக்கப்படுவதால் தேகமென்றும் கூறுவர்.

இந்த அஞ்ஞானம் கருப்பக்கிரகத்தின் இருளைப்போலப் பிரஹ்மத்தின் ஆசிரிதமாய்ப் (பிரஹ்மத்தை இடமாகக்கொண்டு)பிரஹ்மத்தையே ஆவரணஞ்செய் (மறைக்)கிறது.

இதனையே சுவாசிரயசுவவிஷய மென்பர்.

இந்தக் காரணதேகம் நானல்ல; என்னுடையது மல்ல; இது * உடு. அஞ்ஞானத்தினுடையதாம். இதை அறியும் திருஷ்டாவாகிய நான் கட திருஷ்டாவைப்போல இதனினும் வேறு யிருக்கிறேன் என்றிப்படி அறிக.

இவ்வாறு காரணதேகத்திற்கு நான் திருஷ்டாவா யிருக்கிறேன்.

ஸ்ரீ விசாரசந்திரோதயம் மூன்றுங்கலை

தேகமூன்றற்கும் நான் திருஷ்டா வென்பது

முடிந்தது.



* உடு. காரணதேகமே அஞ்ஞானமா யிருக்க, அதை "அஞ்ஞானத்தினுடைய" தென்று கூறியது இராகுவையே இராகுவின் தலை யென்று கூறுவது போலாம்.



# ஸ்ரீ விசாரசந்திரோதயம்.

## நான்காங்கலை.



* க. நான் பஞ்சகோசாதீதன்.

கோச மைந்துங் கடந்தவன் யானே
† மயச்சொ ற்றொடர்ந்த வந்நம் பிராணன்
மநமே விஞ்ஞாந மாநந்த மெனப்படு.

---

* க. "आत्मा पञ्चकोशविवर्जितः ।

ஆத்மா பஞ்சகோசங்களுக்கு வேறானவன்." என்பது தேஜோபிந்தூபநிஷத்து மற்றும் தைத்திரீயம் கடோபநிஷத்துமுதலிய உபநிஷத்துக்களிலும் இவ்விஷயத்தினைக் காண்க.

† மயச்சொற்றொடர்ந்த அந்நம் ...... என்பவற்றை அந்நமயம் பிராணமயம் மநோமயம் விஞ்ஞானமயம் ஆநந்தமயம் என்று கூட்டிப் பொருள் கொள்க.

மைந்து கோசமு மான்மா வன்றித்
தூல வுடலே வந்ந மயமாம்
பிராணம் மநமே விஞ்ஞாந மெனமுக்
கோசமாக் கூறுவ ரிலிங்கந் தன்னைக்
காரண மாநந்த மயமா மிவைதாங்
காரியஞ் சடமே விகாரி விநாசி
வியபிசாரி யாகவி னநாத்மா வாகு
மவற்றை யறியு மாத்மா யானே
பிறப்பிலன் சித்த விகாரி நித்தியன்
வியபிசார மிலனு யிருத்தலி னானே.

அக. வி௫ :—பஞ்சகோசாதீதன் என்றால் என்ன ?

விடை :—பஞ்சகோசாதீதன் என்பது நான் பஞ்சகோசங்களுக்கும் அதீதமா (வேறா) யிருக்கிறேன் என்பதாம்.

அஉ. வி௫ :—கோச மென்பது யாது ?

விடை :—கோச மென்பது க. கத்தியினுறைக்கும், உ. திரவியப்பொக்கிஷத்திற்கும், ௩. கோசகார மென்னும் புழுவின் கூட்டிற்குமாம்.

*உ. அதுபோலப் பஞ்சகோசங்கள் ஆத்மாவை மறைத்திருக்கின்றன. ஆகையால் அந்நமயாதிகளும் கோசமெனப்படுகின்றன.

அந. வினா:—பஞ்சகோசங்களின் பெயர்களெவை?

விடை:—க. அந்நமயகோசம், உ. பிராணமயகோசம், ந. மனோமயகோசம், ச. விஞ்ஞானமயகோசம், ரு. ஆநந்தமயகோசம் என்னுமிவை பஞ்சகோசங்களின் பெயர்களாம்.

அச. வினா:—க. அந்நமயகோசம் என்பது யாது?

விடை:—க. *ந. மாதாபிதாக்கள் உண்ட அந்நத்தினால் உண்டாகிய சுரோணிதசுக்கிலங்களால் மாதாவின் உதரத்தில் உற்பத்தியாய்,

---

*உ. "कोशकारकृमिरिव स्वेच्छया याति बन्धनम्

ஆத்மா கோசகாரப்புழுவினைப் போலத் தனது இச்சையினால் பந்தனத்தை அடைகின்றது." என்பது மஹோபநிஷத்து

*ந. "अन्नरसेनैव भूत्वान्नरसेनाभिवृद्धिं प्राप्यान्नरसमयपृथिव्यां यद्विलीयते सोऽन्नमयकोशस्तदेव स्थूलशरीरम् ॥

அந்நரசத்தினாலேயே உண்டாய், அந்நரசத்தினால்

உ. ஜனித்தபிறகு பால்முதலிய அந்நத்தால் விருத்தியடைந்து,

ந. மரித்தபின் அந்நமயமாகிய பிருதிவியில் ஒடுங்கும் ஸ்தூலதேகம் அந்நமயகோசமாம்.

அரு. வினா:—அந்நமயகோசம் எப்படி இருக்கிறது?

விடை:—சுகதுக்கங்களின் அநுபவமாகிய போகத்திற்கு இடமா யிருக்கிறது.

அசு. வினா:—அந்நமயகோசத்திற்கு நான் வேறா யிருக்கிறேன் என் றறிவ தெப்படி?

விடை:—க. பிறத்தற்கு முன்னும் மரித்த பின்னும் அந்நமயகோசம் (ஸ்தூலசரீரம்) இல்லை. ஆகையால் இது உற்பத்திநாசமுடையதாயிருத்தலால் கடத்தைப் போற் காரியமாம்.

உ. நான் எப்போதும் உண்மைவடிவ(பாவரூப)மா யிருக்கிறேன். அதனால் உற்பத்தி நாச

---

அபி விருத்தியடைந்து, அந்நரசமயப்பிருதிவியில் எது ஒடுங்குகின்றதோ, அது அந்நமயகோசம். அதுவே ஸ்தூலசரீரம்.” என்று பைங்கலோபநிஷத்திலும், அவ்வாறே ஸர்வஸாரோபநிஷத்திலும் இவ்விலக்கணம் கூறப்பட்டிருத்தல் காண்க.

மில்லாதவனுயிருக்கும் நான் இதனினும் வேறு யிருக்கிறேன்.

ஆகையால் இந்த அன்னமயகோசம் நானல்ல; இது என்னுடையது மல்ல; இது ஸ்தூலவடிவமாம். இதை அறியும் ஆத்மாவாகிய நான் இதனினும் வேறுயிருக்கிறேன். இப்படி அன்னமயகோசத்திற்கு நான் வேறு யிருக்கிறேனென்றறிக.

அஎ. வினு:—உ. பிராணமயகோசமென்பது யாது?

விடை:—* ச. கர்மேந்திரியம் ஐந்துடன் கூடிய பஞ்சப்பிராணன் பிராணமயகோசமாம்.

அஅ. வினு:—கர்மேந்திரியம் ஐந்தும் பஞ்சப்பிராணனும் எவை?

விடை:—கர்மேந்திரியம் ஐந்தும் பஞ்சப்பிராணனும் முன் சூக்ஷ்மதேகத்தின் பிரக்கிரியையில் சொல்லப்பட்டிருக்கின்றன.

---

* ச. "कर्मेन्द्रियैस्सह प्राणादिपञ्चकं प्राणमयकोशः॥
கர்மேந்திரியங்களோடு கூடப் பிராணுதி ஐந்தும் பிராணமயகோசமாம்." என்று பைங்கலோபநிஷத்திலும், அவ்வாறே சர்வசாரோபநிஷத்திலும் கூறியிருத்தல் காண்க.

அ௬. வி௫:—பஞ்சப்பிராணனது ஸ்தானங்களும் கிரியைகளும் எவை?

விடை:—௧. பிராணவாயு

(௧) இருதயஸ்தானத்திலிருக்கின்றது;

(௨) பகலிரவாகியஒவ்வொருநாளும் ௨௧௬௦௦ உசுவாசநிசுவாசங்களைக் கொள்ளுதலாகிய கிரியையைச் செய்கின்றது.

௨. அபானவாயு

(௧) குதஸ்தானத்தி லிருக்கின்றது;

(௨) மலமூத்திரங்களை நீக்குவதாகிய கிரியையைச் செய்கின்றது.

௩. சமானவாயு

(௧) நாபிஸ்தானத்தி லிருக்கின்றது;

(௨) இறைத்தநீரைத் தோட்டத்திற் செலுத்தும் தோட்டக்காரனைப் போல, உண்ட அந்நரசத்தை எடுத்து நாடியின் வழியாய்ச் சரீரமுழுவதிலும் சேர்ப்பித்தலாகிய கிரியையைச் செய்கின்றது.

௪. உதானவாயு

(௧) கண்டஸ்தானத்தி லிருக்கின்றது;

(உ) உண்ணப்பட்டனவும் பருகப்பட்டனவுமாகிய அன்னஜலங்களின் விபாகத்தைச் செய்கின்றது. அப்படியே சொப்பனம் இழுப்பு விக்கல் முதலியவைகளைக் காட்டுதலாகிய கிரியையைச் செய்கின்றது.

ரு. வியானவாயு

(க) சருவாங்கமாகிய ஸ்தானத்தி லிருக்கின்றது;

(உ) சருவ அங்கங்களின் மூட்டுகளையும் திருப்புதலாகிய கிரியையைச் செய்கின்றது.

இப்படிப் பஞ்சப்பிராணனுக்கு முக்கியஸ்தானங்களும் கிரியைகளு மிருக்கின்றன.

கம. வினா:—பிராணாதிவாயுக்கள் சரீரத்திலென்ன செய்கின்றன?

விடை:—

க. பிராணாதிவாயுக்கள் சரீரத்தில் நிரம்பிச் சரீரத்திற்கு வல்லமையைத் தருகின்றன.

உ. அன்றியும், இந்திரியங்கள் தத்தம் காரியங்களில் பிரவிருத்[illegible]லாகிய கிரியைக்குச் சாதனமாயு மிருக்[illegible]ன.

கக. வினா:—[illegible]மயகோசத்திற்கு நான் வேறாயிருக்கிறே[illegible] [illegible]றதெப்படி?

விடை:—

க. புருஷன் தூங்குங்காலத்துப் பிராணன் விழிப்பாயிருந்தபோதிலும், அப்போது ஓர் சிநேகன் வருவானாயின், அவனுக்கு உபசாரம் செய்கிறது மில்லை;

உ. திருடன் நகைகளைக்கொண்டு போவானாயின், அவனைத் தடுக்கிறது மில்லை.

அதனால் இந்தப் பிராணவாயு கடத்தைப் போல ஜடமாம். சைதன்னியரூபமாகிய நான் இதனினும் வேறாயிருக்கிறேன். ஆகையால் இந்தப் பிராணமயகோசம் நானல்ல; என்னுடையது மல்ல; இது சூக்ஷ்மதேகவடிவமாம். இதை அறியும் ஆத்மாவாகிய நான் இதனினும் வேறாயிருக்கிறேன். இவ்வாறு பிராணமயகோசத்தினும் நான் வேறாயிருக்கிறேன் என்றறிக.

கூஉ. வினா:—ங. மனோமயகோச மென்பது யாது?

விடை:— * ஞ. ஞானேந்திரியம் ஐந்துடன் கூடிய மனது மனோமயகோசமாம்.

---

* ஞ. "ज्ञानेंद्रियैः सह मनो मनोमयकोशः ॥

ஞானேந்திரியங்களோடு கூட மனம் மனோமயகோசமாம்." என்று பைங்கலோபநிஷத்திலும், அவ்வாறே

கஈ. வினு :—ஞானேந்திரியம் ஐந்தும் மனமும் எவை?

விடை :—இவை முன் சூக்ஷ்மதேகத்தின் பிரக்கிரியையில் சொல்லப்பட்டிருக்கின்றன.

கச. வினு :—மனம் எப்படி இருக்கிறது?

விடை :—தேகத்தில் அகந்தையும் கிரகமுதலியவற்றில் மமதையுமாகிய அபிமானத்தைச் செய்துகொண்டு, இந்திரியவாயிலாக வெளியே செல்லுவதாய்க் கரணரூபமா யிருக்கின்றது.

கரு. வினு :—மனோமயகோசத்திற்கு நான் வேறு யிருக்கிறேன் என்றறிவதெப்படி?

விடை :—க. காமக்குரோதாதி விருத்திகளோடு கூடியிருத்தலால் மனம் நியமமில்லாத சுபாவமுடையதா யிருக்கிறது. அதனுல் விகாரியாம்.

நான் சகல விருத்திகளுக்கும் சாக்ஷியாகிய நிருவிகாரனு யிருக்கிறேன்.

ஆகையால் இந்த மனோமயகோசம் நானல்ல; என்னுடையதுமல்ல; இதுசூக்ஷ்மதேகரூபமாம்.

---

சர்வசாரோபநிஷத்திலும் இதன் இலக்கணம் கூறியிருத்தல் காண்க.

இதை அறியும் ஆத்மாவாகிய நான் இதனினும் வேறு யிருக்கிறேன். இப்படி மனோமயகோசத்தினும் நான் வேறு யிருக்கிறேனென் றறிக.

கசு. வினா:—ச. விஞ்ஞானமயகோச மென்பது யாது?

விடை:—* க. ஞானேந்திரியம் ஐந்துடன் கூடிய புத்தி விஞ்ஞானமயகோசமாம்.

கஎ. வினா:—ஞானேந்திரியமும் புத்தியும் எவை?

விடை:—இவை முன் இலிங்கதேகப்பிரக்கிரியையில் சொல்லப்பட்டிருக்கின்றன.

கஅ. வினா:—புத்தி எப்படி யிருக்கிறது?

விடை:—க. சுழுத்தியில் சிதாபாசனோடு புத்தி இலயமா (ஒடுங்கி) யிருக்கின்றது.

---

* க. "ज्ञानेंद्रियैः सह बुद्धिर्विज्ञानमयकोशः । एतत्कोशत्रयं लिंगशरीरम् ॥

ஞானேந்திரியங்களோடு கூடப் புத்தி விஞ்ஞானமய கோசமாம். இந்த (பிராணமயம் மனோமயம் விஞ்ஞான மயம் என்னும்) கோசமூன்றும் லிங்கசரீரமாம்." என்று பைங்கலத்திலும், அவ்வாறே சர்வசாரத்திலும் இதனிலக்கணம் கூறியிருத்தல் காண்க.

உ. ஜாக்கிரத்தில் நக நுனிமுதல் சிகைவரை யிலும் சரீரத்தில் வியாபித்திருப்பதாய்க் கர்த்தாரூபமா யிருக்கின்றது.

கக. வினா:— விஞ்ஞானமயகோசத்திற்கு நான் வேறா யிருக்கிறேன் என்றறிவதெப்படி?

விடை:—க. புத்தியானது குடமுதலியவற்றைப்போல இலயமுதலிய அவஸ்தைகளையுடையதா யிருத்தலால் விநாசியா(நாசமுடையதா)ம்.

உ. நான் இலயமுதலிய அவஸ்தை யில்லாதவனா யிருத்தலால், இந்தப் புத்திக்கு விலக்ஷணமாகிய அவிநாசியா யிருக்கிறேன்.

ஆகையால் இந்த விஞ்ஞானமயகோசம் நானல்ல; என்னுடையது மல்ல; இது சூக்ஷ்ம தேகரூபமாம். இதை அறியும் ஆத்மாவாகிய நான் இதனினும் வேறா யிருக்கிறேன். இப்படி * எ

* எ. க. தீபத்தின் பிரகாசமும் ஆகாசமும் அபின்னமாய்த் தோற்றினாலும் பின்னமாகவே யிருத்தல்போலும்,

உ. காய்ச்சிய இரும்பில் அக்கினியும் இரும்பும் அபின்னமாய்த் தோற்றினாலும் பின்னமாகவே யிருத்தல் போலும்,

ஆத்மாவும் அந்தக்கரணமும் அபின்னமாய்த் தோற்றியபோதிலும் பின்னமாகவே யிருக்கின்றன; என

விஞ்ஞானமயகோசத்திலும் நான் வேறாயிருக்கிறேனென்றறிக.

௧௦௦. வினா:—ரு. ஆநந்தமயகோசமென்பது யாது?

விடை:—க. புண்ணியகர்மபலத்தை அநுபவிக்குங்காலத்து, ஒருகால்புத்திவிருத்தி அந்தர்முகமாய், ஆத்மசொரூபமாகிய ஆநந்தத்தின் பிரதிபிம்பத்தை யடைகின்றது.

உ. பிரியமோதப் பிரமோதரூபமாகச் சொல்லப்படுகின்றது.

ஙு. அந்த விருத்தியே, புண்ணியகன்மபலபோகம் நிவிருத்தியாகும்போது நித்திரைவடிவமாக விலீனமா(ஒடுங்கு)கின்றது;

அந்த விருத்தி *அ. ஆநந்தமயகோசமாம்.

௧௦௧. வினா:—ஆநந்தமயகோசமெப்படி யிருக்கிறது?

---

ளின், சுழுத்தியில் அந்தக்கரணம் இலயமாயிருக்க, ஆத்மா அஞ்ஞானத்திற்குச் சாக்ஷியாகத் தோற்றுவதால்.

*அ "स्वरूपाज्ञानमानंदमयकोशः । तत्कारणशरीरम् ॥ சொரூபாஞ்ஞானம் ஆநந்தமயகோசமாம்.

விடை:—க. எதற்கு இஷ்டவஸ்துவின் தரிச னத்தால் உண்டாகிய பிரியவிருத்தி சிரசாயும்,

உ. இஷ்டவஸ்துவின் இலாபத்தா லுண்டாகி ய மோதவிருத்தி ஒரு (வலது) சிறகாயும்,

ஈ. இஷ்டவஸ்துவின் அநுபவத்தால் உண் டாகிய பிரமோதவிருத்தி இரண்டாவது (இட து) சிறகாயும்,

ச. புத்திவிருத்தியில் அல்லது அஞ்ஞானவி ருத்தியில் உள்ள ஆத்மசொரூபமாகிய ஆநந்தத் தின் பிரதிபிம்பம் சொரூபமா(உடலா)யும்,

ரு. ஆத்மாவின் சொரூபமாகிய பிம்பாநந்தம் * க புச்ச(ஆதார)மாயு மிருக்கிறதோ,

---

அது காரணசரீரம்". என்று பைங்கலத்திலும், அவ் வாறே சர்வசாரத்திலும் இதனிலக்கணம் கூறியிருத் தல் காண்க.

"जडत्वप्रियमोदत्वधर्माः कारणदेहगाः ॥

ஜடத்துவ பிரியமோதத்துவதர்மங்கள் காரணதேகத் தன்னவாம்." என்பது ஆத்மபோதோபநிஷத்து

* க பிரஹ்மமாகிய ஆநந்தம் ஆதாரமா யிருத்தலால் தைத்திரீயசுருதியின் ௫-வது அநுவாகத்தில் அது புச்ச சத்தத்தாற் சொல்லப்பட்டிருக்கிறது.

அப்படிப்பட்ட பக்ஷியாகிய போக்தாவாய் * கO. ஆநந்தமயகோச மிருக்கிறது.

கOஉ. வினா:—ஆநந்தமயகோசத்திற்கு நான் வேறாயிருக்கிறே னென்று அறிவ தெப்படி ?

விடை:—

க. ஆநந்தமயகோசம், மேகமுதலிய பதார்த்தங்களைப்போல ஒவ்வோர்காலத்தி லுண்டாவதாகையால், அது க்ஷணிகமாம்.

உ. நான் எப்போது மிருத்தலால் நித்யன். ஆகையால் இந்த ஆநந்தமயகோசம் நானல்ல; என்னுடையது மல்ல; இது காரணதேகரூபமாம். இதை அறியும் ஆத்மாவாகிய நான் இதனினும் வேறா யிருக்கிறேன்.

இப்படி ஆநந்தமயகோசத்திற்கு நான் வேறா யிருக்கிறே னென் றறிக.

---

* கO. இப்படியே மற்ற நான்கு கோசங்களின் பக்ஷி ரூபத்துவமும் தைத்திரீயஉபநிஷத்தின் உரை ஆநந்தவல்லி க—ரு அநுவாகங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. இச்சையுள்ளவர்கள் அங்கே பார்த்துக்கொள்ளுக. எம்மால் வெளிப்படுத்தப்பட்ட தமிழ் ஸ்ரீபாலபோதம் எ·வது உபதேசத்திலும் காணலாம்.

க0ரு. வினா :—இருப்பனவாகிய அன்னமயாதி கோசங்கள் ஆத்மா வல்லவெனின், அப்போது ஆத்மா வென்பது யாது?

விடை :—

க. புத்திமுதலியவற்றிற் பிரதிபிம்பரூபமா யுள்ளதும்,

உ. பிரியமுதலிய சொற்களால் சொல்லப்படு வதுமாகிய

ஆநந்தமயகோசத்திற்குப் பிம்பரூபகாரண மாயுள்ள ஆநந்தம், நித்தியமா யிருத்தலால் ஆத்மாவாம்.

க0ச. வினா :—பஞ்சகோசங்கள்தான் அநுபவத்தில் வருகின்றன. இவற்றிற்கு வேறாக ஓர் ஆத்மா அநுபவத்தில் வாராமையால், ஆத்மா பஞ்சகோசங்களுக்கு வேறாய் இருக்கிறதென்னும் நிச்சயம் எப்படி உண்டாம்?

விடை :—பஞ்சகோசங்கள்தான் அநுபவத்தில் வருகின்றன. இவற்றிற்கு வேறாய் ஓர் ஆத்மா அநுபவத்தில்வரவில்லை என்னும் வார்த்தை சத்தியம். ஆயினும், எந்த அநுபவத்தால் இந்தப் பஞ்சகோசங்களும் அறியப்படுகின்றனவோ, அந்த அநுபவத்தை நிவர்த்திக்கக்கூடியவன்

யாவன்? ஒருவனும் இல்லை. ஆகையால் * கக பஞ்சகோசங்களின் அநுபவரூபமாகிய சைதன்

---

* கக. "अस्थिमांसादिरूपोयं शरीरं भाति देहिनां ।
योयमन्नमयो ह्यात्मा भाति सर्वशरीरिणः ।
ततः प्राणमयो ह्यात्मा विभिन्नश्चांतरस्थितः ॥

ततो मनोमयो ह्यात्मा विभिन्नश्चांतरस्थितः ।
ततो विज्ञान आत्मा तु ततोन्यश्चांतरस्थितः ।
आनन्दमय आत्मा तु ततोन्यश्चांतरस्थितः ॥

योयमन्नमयस्सोयं पूर्णः प्राणमयेन तु ।
मनोमयेन प्राणोपि तथा पूर्णस्स्वभावतः ।
तथा मनोमयो ह्यात्मा पूर्णो ज्ञानमयेन तु ॥

आनन्देन सदा पूर्णस्सदा ज्ञानमयस्सुखं ।
तथानन्दमयश्चापि ब्रह्मणोन्येन साक्षिणा ।
सर्वांतरेण पूर्णश्च ब्रह्म नान्येन केनचित् ॥

यदिदं ब्रह्मपुच्छाख्यं सत्यज्ञानाद्वयात्मकम् ।
सारमेव रसं लब्ध्वा साक्षाद्देही सनातनम् ।
सुखी भवति सर्वत्र अन्यथा सुखता कुतः ॥

ளியம் யாதோ, அது பஞ்சகோசத்திற்கு வேறு
கிய ஆத்மாவாம்.

---

எலும்பு நரம்புமுதலியவடிவமாகிய இச்சரீரம் தேகி
களுக்குத் தோற்றுகின்றது. யாதொரு இவ்வர்ணமயமா
கிய ஆத்மா சர்வசரீரிகளுக்கும் தோற்றுகின்றதோ,
அதனினும் பிராணமய ஆத்மா வேறுபட்டதாயும் உள்
ளாயுமிருக்கின்றது. அதனினும் மனோமய ஆத்மா வே
றாயும் உள்ளாயுமிருக்கின்றது. அதனினும் விஞ்ஞா
னமய ஆத்மா வேறாயும் உள்ளாயுமிருக்கின்றது. ஆ
நந்தமய ஆத்மாவோ அதனினும் வேறாயும் உள்ளாயு
மிருக்கின்றது. யாதொரு இந்த அந்நமயமுண்டோ,
அது பிராணமயனால் பூர்ணமாயிருக்கின்றது. பிராண
மயனோ அப்படியே மனோமயனால் சுபாவமாகப் பூர்ண
மாயிருக்கின்றது. அப்படியே மனோமயஆத்மாவும் வி
ஞ்ஞானமயனால் பூர்ணமாயிருக்கின்றது. விஞ்ஞானம
யம் ஆநந்தமயனால் எப்போதும் சுகமே பூர்ணமாயிருக்கி
ன்றது. அப்படியே ஆநந்தமயமும் தனக்கு வேறான பி
ரஹ்மமாகிய சாக்ஷியினால் பூர்ணமாயிருக்கின்றது. எல்
லாவற்றினும் உள்ளாயிருத்தலால் பூர்ணமாயிருக்கும்
பிரஹ்மம் வேறொன்றினால் பூரணமாகிறதில்லை. யா
தொரு இந்தப் பிரஹ்மபுச்சமென்னும் பெயருடைய
தும், சத்தியஞானத்வயவடிவினதும் பழமையானது
மாகிய சாரமான இரஸத்தினையே சாக்ஷாத்தாக அடை
ந்து, தேகி எங்கும் சுகியாகின்றான்; வேறுவகையால்
சுகத்தன்மை ஏது? இல்லையென்றபடி." என்னும் ய
ஜுர்வேதத்தின் கடோபநிஷத்தின் வாக்கியத்தினால்

௧௦௫. வினா:—ஆத்மா எப்படியிருக்கிறது?

விடை:—சத்து சித்து ஆநந்தமுதலிய சொரூபமாயிருக்கிறது.

## ஸ்ரீ விசாரசந்திரோதயம் நான்காங்கலை

## நான் பஞ்சகோசாதீதன் என்பது

## முடிந்தது.



---

ஆத்மா பஞ்சகோசத்திற்கு வேறான அநுபவவடிவமாதல் காண்க. அவ்வாறே தைத்திரீயம் கூறுதலுங் காண்க.

# ஸ்ரீ விசாரசந்திரோதயம்.

## ஐந்தாங்கலை.

### * க. மூன்றவஸ்தைக்கும் நான் சாக்ஷி.

அவத்தை மூன்றற்கு மான்மா சாக்கி
யங்வய மிதுவா மவற்றின் வியபிசாரம்
வெதிரேக மெனப்படு மீரேழ் திரிபுடி
வியவகார மெதன்கண் விளக்கமா மதுவே
சாக்கிர மதுபொய் திருசிய மெனவோர். (க)
கண்ட கேட்ட வத்துவா தனையால்
வெளிப்படை யின்றி விளங்கு மெதனி
லதுசொப் பனமா மதனை யுலகினர்
பொய்யெனப் புகல்வர் காண மியாவு

---

* க. "जाग्रत्स्वप्नसुषुप्त्यादिप्रपञ्चं यत्प्रकाशते ।
तद्ब्रह्माहमिति ज्ञात्वा सर्वबन्धैः प्रमुच्यते ॥
त्रिषु धामसु यद्भोज्यं भोक्ता भोगश्च यद्भवेत् ।
तेभ्यो विलक्षणस्साक्षी चिन्मात्रोहं सदाशिवः ॥

மொடுங்கு மவத்தை சுழுத்தி யாருந்
துரியமே பிரத்தியக் கென்று துணிக. (௨)

---

"मय्येव सकलं जातं मयि सर्वं प्रतिष्ठितम् ।
मयि सर्वं लयं याति तद्ब्रह्माद्वयमस्म्यहम् ॥

ஜாக்கிரம் சொப்பனம் சுழுத்தி முதலிய பிரபஞ்சத்தினை எது பிரகாசிக்கின்றதோ, அந்தப் பிரஹ்மம் நான் என்று அறிந்து, சர்வபந்தங்களினின்றும் விடுபடுகிறுன். மூன்று அவஸ்தைகளிலும் எந்தப் போக்தா போக்கிய போகங்க ளுண்டோ, அவற்றினும் வேறான சாக்ஷியான சின்மாத்திரனாகிய யான் சதாசிவன். என்னிடத்திலேயே யாவும் உண்டாகின்றன; என்னிடத்திலேயே நிலைத்துள்ளன; என்னிடத்திலேயே இலயத்தையடைகின்றன. அத்தன்மைய பிரஹ்மாத்வயமா யிருக்கின்றேன் யான்." என்பது கைவல்யசுருதி.

"एक एवात्मा मन्तव्यो जाग्रत्स्वप्नसुषुप्तिषु ।
स्थानत्रयव्यतीतस्य पुनर्जन्म न विद्यते ॥

ஜாக்கிரசொப்பனசுழுத்திகளில் ஒரே ஆத்மா மதிக்கத்தக்கதாம். மூன்றவஸ்தைகளையும் கடந்தவனுக்கு மறுபடியும் பிறப்பில்லை." என்பது திரிபுராதாபிநியுபநிஷத்தும், பிரஹ்மபிந்தூபநிஷத்துமாம். இவ்வாறே சர்வசாரோபநிஷத்து முதலியவற்றிலும் கூறியிருத்தல் காண்க. 'சாக்ஷியதர்மங்கள் விலக்ஷணமான சாக்ஷியினைப் பற்று.' வென்பது முதலியவற்றைக் குண்டிகோபநிஷத்துக் கூறுதல் காண்க.

க0சா. வினு :—மூன்றவஸ்தைகள் எவை ?

விடை :—க. * உ. ஜாக்கிரம், உ. * ஙு. சொப்பனம், ஙு. * ச. சுழுத்தி என்னு மிவை மூன்றவஸ்தைகள்.

க. ஜாக்கிராவஸ்தைக்கு நான் சாக்ஷி.

க0எ. வினு :—ஜாக்கிராவஸ்தை என்பது யாது ?

விடை :—

க. பதினான்கு இந்திரியங்கள் * ரு. அத்தியாத்மமும்,

---

* உ. சொப்பனசுழுத்திகளுக்கு வேருய், இந்திரியஜந்நியஞானத்திற்கும் இந்திரியஜந்நியஞானசம்ஸ்காரத்திற்கும் ஆதாரகாலமா யிருப்பது ஜாக்கிராவஸ்தையெனப்படும்.

* ஙு. இந்திரியத்தினு லுண்டாகாத விஷயகோசர அந்தக்கரணத்தினது அபரோக்ஷவிருத்தியின் காலம் சொப்பனுவஸ்தை யெனப்படும்.

* ச. சுககோசரமு(சுகத்தை விஷயஞ்செய்வது)ம் அவித்தியாகோசரமுமாகிய அவித்தியாவிருத்தியின் காலம் சுழுத்தியவஸ்தை யெனப்படும்.

* ரு. ஆத்மாவை ஆசிரயித்திருக்கும் வர்த்தமான இந்திரியாதிகள் அத்தியாத்ம மெனப்படும்.

உ. அவற்றின் பதினான்கு தேவதைகள் * சு. அதிதெய்வமும்,

ங. அவற்றின் பதினான்கு விஷயங்கள் * எ. அதிபூதமுமாம்.

இந்த நாற்பத்திரண்டு தத்துவங்களால் எதில் வியவகார முண்டாகிறதோ, அது * அ. ஜாக்கிராவஸ்தை.

---

* சு. சுவசங்காதத்தி(தனது தேகமுதலியவற்றி)ற்கு வேறாய் நேத்திரேந்திரியத்திற்கு விஷயமாகாதது எதுவோ, அது அதிதெய்வ மெனப்படும்.

* எ. சுவசங்காதத்திற்கு வேறாய் நேத்திரமுதலிய இந்திரியங்களுக்கு விஷயமாவது எதுவோ, அது அதிபூத மெனப்படும்.

* அ. இது ஸ்தூலதிருஷ்டியுடைய புருஷர்கள் அறிதற்குரிய ஜாக்கிரலக்ஷணம்.

"मन आदिचतुर्दशकरणैः पुष्कलैरादित्याद्यनुगृहीतैः शब्दादीन्विषयान् स्थूलान् यदोपलभते तदात्मनो जागरणम् ॥

ஆதித்தியன் முதலிய அதிதெய்வங்களால் அநுக்கிரகிக்கப்பட்ட ஏராளமான மனமுதலிய பதினான்கு காணங்களால் ஸ்தூலமான சப்தாதிவிஷயங்களை எப்போ

கoஅ. வினு:—பதினுன்கு இந்திரியங்களை வை?

விடை:—

க-ரு. * கூ. ஞானேந்திரியம் ஐந்து:—

க. சுரோத்திரம், உ. துவக்கு, ங. சக்ஷு, ச. சிங்குவை, ரு. கிராணம் என்பனவாம்.

சு-கo. கன்மேந்திரியம் ஐந்து:—

---

து அறிகின்றதோ, அவ்வவஸ்தை ஆத்மாவுக்கு ஜாக்கிரமாம்." என்னும் சர்வசாரோபநிஷத்தும்,

"तत्तद्देवतानुग्रहान्वितैः श्रोत्रादिज्ञानेन्द्रियैः शब्दाद्यर्थविषयग्रहणज्ञानं जाग्रदवस्था भवति ॥

அந்த அந்த அதிதேவதையின் அநுக்கிரகத்தோடுகூடிய சுரோத்திராதி ஞானேந்திரியங்களால் சப்தமுதலிய அர்த்தமாகிய விஷயங்களைக் கவரும் உணர்ச்சி ஜாக்கிராவஸ்தை யாகின்றது." என்னும் பைங்கலோபநிஷத்தும் இதிற் பிரமாணமாதல் காண்க.

* கூ. இவ்வாறே ஞானேந்திரியகர்மேந்திரியஅந்தக்கரணங்களும், அவற்றின் விஷயங்களும், தேவதைகளும் பைங்கலசுருதியின் உ-வது அத்தியாயத்திலும், வராகோபநிஷத்தின் முதல் அத்தியாயத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றன.

சு. வாக்கு, எ. பாணி, அ. பாதம், கூ. உபஸ்தம், க0. குதம் என்பனவாம்.

கக-கச. அந்தக்கரணம் நான்கு :—

கக. மனம், கஉ. புத்தி, கங. சித்தம், கச. அகங்காரம் என்பனவாம்.

இப்பதினான்கு இந்திரியங்களும்
அத்தியாத்மிகமாம்.

க0கூ. வினா :—பதினான்கு இந்திரியங்களுக்கும் பதினான்கு தேவதைகளெவை?

விடை :—

க-ரு. ஞானேந்திரியமைந்தின் தேவதைகள் :-

க. சுரோத்திரேந்திரியத்திற்குத் தேவதை திக்கு (திக்குப்பாலகர்).

உ. துவக்கிந்திரியத்திற்குத் தேவதை வாயு.

ங. சக்ஷு இந்திரியத்திற்குத் தேவதை சூரியன்.

ச. சிஹ்வேந்திரியத்திற்குத் தேவதை வருணன்.

ரு. கிராணேந்திரியத்திற்குத் தேவதை அசுவினிகுமாரர்.

சு-கo. கர்மேந்திரியமைந்தின் தேவதைகள்:—

சு. வாக்கிந்திரியத்திற்குத் தேவதை அக்கினி.

எ. பாணீந்திரியத்திற்குத் தேவதை இந்திரன்.

அ. பாதேந்திரியத்திற்குத் தேவதை வாமனர்.

கூ. உபஸ்தேந்திரியத்திற்குத் தேவதை பிரஜாபதி.

கo. குதேந்திரியத்திற்குத் தேவதை இயமன்.

கக-கச. * கo. அந்தக்கரணம் நான்கின் தேவதைகள் :—

கக. மனவிந்திரியத்திற்குத் தேவதை சந்திரன்.

கஉ. புத்தியிந்திரியத்திற்குத் தேவதை பிரஹ்மன்.

கங. சித்தவிந்திரியத்திற்குத் தேவதை வாசுதேவன்.

கச. அகங்காரவிந்திரியத்திற்குத் தேவதை உருத்திரன்.

---

* கo. உள்ளிந்திரியம் அந்தக்கரணம்.

இப்பதினைந்து தேவதைகளும் அதிதெய்வ மெனப்படும்.

௧௧௦. வினா :—பதினைந்து இந்திரியங்களின் பதினைந்து விஷயங்க ளெவை ?

விடை :—

௧-ரு. ஞானேந்திரியபஞ்சகங்களின் விஷயங்கள் :—

௧. சத்தம், ௨. பரிசம், ௩. உருவம், ௪. இரசம், ரு. கந்தம் என்பனவாம்.

௬-௧௦. கர்மேந்திரிய பஞ்சகங்களின் விஷயங்கள் :—

௬. வசனம், எ. ஆதானம் (எற்றல்), அ. கமனம் (நடத்தல்), ௯. இரதிபோகம், ௧௦. மலநீக்கம் என்பனவாம்.

௧௧-௧௪. அந்தக்கரணம் நான்கின் விஷயங்கள் :—

௧௧. * ௧௧. சங்கற்பவிகற்பம், ௧௨. நிச்சயம், ௧௩. சிந்தித்தல், ௧௪. அகந்தை என்பனவாம்.

---

* ௧௧. மனதிற்கு சங்கற்பவிகற்பம் விஷய மன்று. ஆனால் எந்த வஸ்துவின் சங்கற்ப முண்டாகின்றதோ, அந்த வஸ்து விஷயமாம். இப்படியே புத்தி சித்த அகங்காரகர்மேந்திரியங்களிலும் அறிக.

இப்பதினான்கு விஷயங்களும் அதிபூதங்களாம்.

ககக. வினா:—அத்தியாத்மம், அதிதெய்வம், அதிபூதம் என்னும் மூன்றும் சேர்ந்து என்னவென்று சொல்லப்படுகின்றன?

விடை:—அத்தியாத்மமுதலிய மூன்றுபுட(ஆகார)ங்களும் சேர்ந்து திரிபுடி எனப்படுகின்றன.

ககஉ. வினா:—பதினான்கு திரிபுடிகளையும் அறிவதெப்படி?

விடை:—

க-ரு. ஞானேந்திரியங்களின் திரிபுடிகள்:—

| | அத்தியாத்மம். | அதிதெய்வம். | அதிபூதம். |
|---|---|---|---|
| | இந்திரியம். | தேவதை. | விஷயம். |
| க. | சுரோத்திரம். | திக்கு. | சத்தம். |
| உ. | துவக்கு. | வாயு. | பரிசம். |
| ங. | சக்ஷு. | சூரியன். | உருவம். |
| ச. | சிங்குவை. | வருணன். | இரசம். |
| ரு. | கிராணம். | அசுவினிகுமாரர். | கந்தம். |

சு-கo. கர்மேந்திரியங்களின் திரிபுடிகள் :—

| | | |
|---|---|---|
| சு. வாக்கு. | அக்கினி. | வசனம் (கிரியை). |
| எ. பாணி. | இந்திரன். | ஏற்றலிடுதல். |
| அ. பாதம். | வாமனர். | கமனம். |
| கூ. உபஸ்தம். | பிரஜாபதி. | இரதிபோகம். |
| கo. குதம். | இயமன். | மலநீக்கம். |

கக-கச. அந்தக்கரணநான்கின் திரிபுடிகள் :—

| | | |
|---|---|---|
| கக. மனம். | சந்திரன். | சங்கற்பவிகற்பம். |
| கஉ. புத்தி. | பிரஹ்மா. | நிச்சயம். |
| கங. சித்தம். | வாசுதேவன். | சிந்தித்தல். |
| கச. அகங்காரம். | உருத்திரன். | அகந்தை. |

இப்படிப் பதினான்கு திரிபுடிகளையும் அறிக.

ககங. வினா :—இந்தத் திரிபுடிகளின் சுபாவமென்ன?

விடை :—மும்மூன்று பதார்த்தங்களுள்ள திரிபுடிகளில் ஒன்றில்லையாயின், அதனதன் வியவகாரம் நடவாது.

க. இந்திரியமும் தேவதையு மிருந்து அதன் விஷயமில்லையாயின் வியவகாரம் நடவாது;

உ. விஷயமும் இந்திரியமு மிருந்து தேவதை யில்லாவிடினும் வியவகாரம் நடவாது.

இதனைச் சகலதிரிபுடிகளினும் அறிக.

௧௧௪. வினா:—என்னுடைய சுபாவம் யாதென் றறிவதெப்படி?

விடை:—

க. திரிபுடி பூரணமா யிருக்குமாயின், அதையும் நானறிகிறேன்.

உ. பூரணமா யிராதாயி னதையும் நானறிகிறேன்.

ந. அப்படியே திரிபுடியின் வியவகாரம் நடக்குமாயின், அதையும் நானறிகிறேன்.

ச. வியவகாரம் நடவாதாயின், அதையும் நானறிகிறேன்.

இப்படி என் சுபாவம் இருக்கிறதென் றறிக.

௧௧௫. வினா:—இதனால் என்ன சித்தித்தது?

விடை:—எதில் திரிபுடியினால் வியவகாரம் நடக்கிறதோ, அப்படிப்பட்டது ஜாக்கிராவஸ்தையெனச் சித்தித்தது.

ககசு. வினு :—ஜாக்கிராவஸ்தையில் ஜீவனது ஸ்தானமும், வாக்கும், போகமும், சக்தியும், குணமும், ஜாக்கிராபிமானத்தால் அந்த ஜீவனது பெயரும் எவை ?

விடை :—ஜாக்கிராவஸ்தையில் ஜீவனுக்கு

க. *கஉ. நேத்திரம் ஸ்தானம்.

உ. வைகரி வாக்கு.

ங. ஸ்தூலம் போகம்.

ச. கிரியை சக்தி.

ரு. இராசதம் குணம்.

சு. ஜாக்கிராபிமானத்தால் விசுவனென்பது பெயர்.

---

* கஉ. ஜாக்கிரத்தி லிந்தச் சிதாபாசனுகிய ஜீவனுக்கு நகமுதல் சிகைபரியந்தம் வியாப்தி (நிறைவு) இருந்த போதிலும், பிரதானமாக நேத்திரத்தி லிருத்தலால், அவனுக்கு நேத்திரம் ஸ்தான மெனப்படுகிறது. இதனை,

" तत्र भ्रूमध्यंगतो जीव आपादमस्तकं व्याप्य कृषिवाणिज्यश्रवणाद्यखिलक्रियाकर्ता भवति ॥

அந்த ஜாக்கிராவஸ்தையில் புருவநடுவிலிருப்பவனுய், ஜீவன் பாதமுதல் சிரசுபரியந்தம் வியாபித்து, கிருஷி வாணிஜ்யம் சிரவணமுதலிய சகலக்கிரியைகளையும் செய்பவனுகின்முன்." என்று பைங்கலசுருதி உ-வது அத்தியாயம் சு-றுதல் காண்க.

ககஎ. வினு :—ஜாக்கிராவஸ்தையைச் சொல்லுதலால் என்ன சித்தித்தது ?

விடை :—

க. ஜாக்கிராவஸ்தை உண்டாகுமாயின் அதையும் நானறிகிறேன்.

உ. சொப்பனசுழுத்திகளில் அதனின்மையையும் நானறிகிறேன்.

ஆகையால் *கங. ஜாக்கிராவஸ்தை நானல்ல; என்னுடையதுமல்ல; இது ஸ்தூலதேகத்தினுடையதாம். இதை அறியும் சாக்ஷியாகிய நான் கடசாக்ஷியைப்போல இதனினும் வேருயிருக்கிறேனென்பது ஜாக்கிரத்தைச் சொல்லுதலாற் சித்தித்தது.

இவ்வாறு ஜாக்கிராவஸ்தைக்கு நான் சாக்ஷியாய் இருக்கிறேன்.

---

* கங. "बुद्धेः पूर्णविकाशोयं जागरः परिकीर्त्यते विकारादिविहीनत्वाज्जागरो मे न विद्यते ॥

புத்தியின் பூர்ணவிகாசமாகிய இது ஜாக்கிரமெனப்படுகின்றது. விகாராதிகளின்றியதன்மையால் எனக்கு ஜாக்கிரமில்லை." என்பது வராகோபநிஷத்து உ-வது அத்தியாயம்.

உ. சொப்பனுவஸ்தைக்கு நான் சாக்ஷி.

கக௮. வினு:—சொப்பனுவஸ்தை என்பது யாது?

விடை:—ஜாக்கிராவஸ்தையில் எந்தப் பதார்த்தங்கள் பார்க்கப்பட்டும் கேட்கப்பட்டும் அநுபவிக்கப்பட்டும் இருக்கின்றனவோ, அவற்றின் சம்ஸ்காரமானது ரோமத்தின் ஆயிரத்திலோர் மடங்கு மெல்லிதாய்க் கண்டத்திலிருக்கும் ஹிதை யென்னும் நாடியி லிருக்கின்றது. அந்தச் சம்ஸ்காரத்தால் நித்திரைக்காலத்தில் பஞ்சவிஷயமுதலிய பதார்த்தங்களும் அவற்றின் ஞானமும் உண்டாகின்றன. அவற்ருல் எதில் வியவகாரம் உண்டாகின்றதோ, அது * கச. சொப்பனுவஸ்தை.

---

* கச. "करणोपरमे जाग्रत्संस्कारो प्रबोधवद्ग्राह्य-ग्राहकरूपस्फुरणं स्वप्नावस्था भवति ॥

காரணங்கள் ஒடுங்கியபோது ஜாக்கிரசம்ஸ்காரத்தால் அர்த்தஞானமுடையதான கிரகிப்பது கிரகிக்கப்படுவது என்னும் ஸ்புரணம் சொப்பனுவஸ்தை யாகின்றது." என்னும் பைங்கலோபநிஷத்தும்,

"तद्वासनासहितैश्चतुर्दशकरणैश्शब्दाद्यभावेपि वा"

ககசு. வினு :—சொப்பனுவஸ்தையில் ஜீவனுக்கு ஸ்தானமும், வாக்கும், போகமும், சத்தியும், குணமும், சொப்பனுபிமானத்தால் அந்த ஜீவனது பெயரும் எவை ?

விடை :—சொப்பனுவஸ்தையில் ஜீவனுக்கு

க. கண்டம் ஸ்தானம்.

உ. மத்திமை வாக்கு.

ங. சூக்ஷ்மம் (வாசனுமயம்) போகம்.

ச. ஞானம் சக்தி.

ரு. * கரு. சத்துவம் குணம்.

சா. சொப்பனுபிமானத்தால் தைஜஸ னென்பது பெயர்.

---

सनामयांश्शब्दादींस्तात्कालिकानप्रतिभासमानान्यदोप-लभते तदा स्वप्नम् ॥

அவ்வாசனையோடுகூடிய பதினான்கு காரணங்களால் சப்தாதிக ளில்லாதிருக்கினும், தோற்றுகின்ற தற்காலத்தனவாகிய வாசனுமயசப்தமுதலியவற்றை எப்போது அறிகின்றதோ, அப்போது சொப்பனமாம்.'' என்னும் சர்வசாரோபநிஷத்தும் இவ்விலக்கணமே கூறுதல் காண்க.

* கரு. சிலர் இராசதம் குண மென்றும் கூறுவர்.

கஉ௦. வி௵ :—சொப்பனுவஸ்தையைச் சொல்லுதலால் என்ன சித்தித்தது ?

விடை :—

க. சொப்பனுவஸ்தை உண்டாகுமாயின், அதையும் நானறிகிறேன்.

உ. ஜாக்கிரசுழுத்திகளில் அஃது இல்லாதபோது, அதன் இன்மையையும் நானறிகிறேன்.

ஆகையால்* கசு. இந்தச் சொப்பனுவஸ்தை நானல்ல; என்னுடையது மல்ல; இது சூக்ஷ்மதேகத்தினுடையதாம். இதை அறியும் சாக்ஷியாகிய நான் கடசாக்ஷியைப்போல இதனினும் வேறுயிருக்கிறேன் என்பது சொப்பனத்தைச் சொல்லுதலாற் சித்தித்தது.

இவ்வாறு சொப்பனுவஸ்தைக்கு நான் சாக்ஷியா யிருக்கிறேன்.

---

* கசு. "सूक्ष्मनाडिषु सञ्चारो बुद्धेः स्वप्नः प्रजायते । सञ्चारधर्मरहिते मयि स्वप्नो न विद्यते ॥

புத்தியானது சூக்ஷ்மநாடிகளில் சஞ்சரித்தல் சொப்பனமாகின்றது. சஞ்சாரதர்மமில்லாத என்னிடத்தில் சொப்பன மில்லை." என்பது வராகோபநிஷத்து இரண்டாவது அத்தியாயம்.

ரு. சுழுத்தியவஸ்தைக்கு நான் சாக்ஷி.

கஉக. வினு:—சுழுத்தியவஸ்தை என்பது யாது?

விடை:—புருஷன் நித்திரையினின்றும் விழித்தெழுந்தகாலத்து, சுழுத்தியில் அநுபவித்த சுகத்தையும் அஞ்ஞானத்தையும் நினைத்து "நான் இன்று ஒன்றுந் தெரியாமல் சுகமாய்த் தூங்கினேன்." என்று சொல்லுகிறான். இந்தச் சுக அஞ்ஞானங்களின் பிரகாச(ஞான)ம், சாக்ஷி சேதனமாகிய அநுபவத்தால் எதில் (எந்த அவஸ்தையில்) உண்டாகிறதோ, அப்படிப்பட்ட புத்தியின் விலயாவஸ்தை * கஎ. சுழுத்தியவஸ்தையாம். (விலயம்=ஒடுக்கம்.)

கஉஉ. வினு:—சுழுத்தியவஸ்தையில் ஜீவனுக்கு ஸ்தானமும், வாக்கும், போகமும், சக்தியும், குணமும், சுழுத்தியபிமானத்தால் அந்த ஜீவனது பெயரும் எவை?

---

* கஎ. "चित्तैककरणा सुषुप्त्यवस्था भवति।

சித்தவொடுக்கம் சுழுத்தியவஸ்தை யாகின்றது." என்னும் பைங்கலோபநிஷத்து இரண்டாம் அத்தியாயமும்,

விடை :—சுழுத்தியவஸ்தையில் ஜீவனுக்கு

க. இருதயம் ஸ்தானம்.

உ. பைசந்தி வாக்கு.

ங. ஆநந்தம் போகம்.

ச. திரவியம் சக்தி.

ரு. தாமதம் குணம்.

சா. சுழுத்தியபிமானத்தால் பிராஞ்ஞனென்பது பெயர்.

கஉங. வினு :—சுழுத்தியவஸ்தையில் திருஷ்டாந்தம் யாது ?

விடை :—முதல் திருஷ்டாந்தம் :—(க) கிணற்றில் விழுந்திருக்கும் ஓர் ஆபரணத்தை யெடுக்க, அக்கிணற்றில் மூழ்கிய புருடன், அவ்வாபரணம் அகப்பட்டதையும் அகப்படாததையு மறிகிறுன்.

---

“ चतुर्दशकरणोपरमाद्विशेषविज्ञानाभावाद्यदा शब्दादी(न्विषया)न्नोपलभते तदात्मनः सुषुप्तम् ॥

பதினன்குகரணங்களின் ஒடுக்கத்தால் விசேஷவிஞ்ஞான மின்மையால், எப்போது சப்தாதிவிஷயங்களை அறிகிறதில்லையோ, அப்போது ஆத்மாவிற்குச் சுழுத்தியவஸ்தையாம்.” என்னும் சர்வசாரோபநிஷத்தும் இவ்வாறே கூறுகின்றன.

கலை.] மூன்றவஸ்தைக்கும் நான் சாக்ஷி. ௧௪௫

(உ) ஆனால் அதைச் சொல்லுதற்குச் சாதனமாகிய வாக்கிந்திரியத்தின் தேவதையாகிய அக்கினிக்கு ஜலத்தோடு விரோதமிருத்தலால், அது திரோதானமாயி (மறைந்தி)ருக்கின்றது. ஆகையால் அவன் அங்கே அதைச் சொல்லுகிறதில்லை.

(ங) ஜலத்திற்கு வெளியே வந்தகாலத்துச் சொல்லுதற்குச் சாதனமாகிய தேவதையோடு வாக்கிந்திரியமிருத்தலால், நகை கிடைத்தது கிடைக்கவில்லை என்று சொல்லுகிறான்.

சித்தாந்தம்:—(க) அதுபோல, சுழுத்தியவஸ்தையில் சுக அஞ்ஞானங்களின் சாக்ஷிசேதனமாகிய சாமானிய ஞான மிருக்கின்றது.

(உ) ஆனால் விசேஷஞானத்தின் சாதனமாகிய இந்திரியமும் அந்தக்கரணமு மில்லாதிருத்தலால் சுக அஞ்ஞானங்களின் விசேஷஞானம் உண்டாகிறதில்லை.

(ங) புருஷன் விழித்தகாலத்து, விசேஷஞானத்திற்குச் சாதனமாகிய இந்திரியமும் அந்தக்கரணமும் இருத்தலால், சுழுத்தியில் அநுபவிக்கப்பட்ட சுக அஞ்ஞானங்களின் ஸ்மிருதியா (நினைவா)கிய விசேஷஞான முண்டாகிறது.

இரண்டாவது திருஷ்டாந்தம் :—

(க) வெய்யிலில் உருகிய நெய்யானது

(உ) நிழலிலிருக்குமாயின் கட்டியாகின்றது ;

(ந) மறுபடியும் வெய்யிலி விருக்குமாயின் உருகுகின்றது.

சித்தாந்தம் :—(க) அதுபோலச் சுழுத்தியி லுள்ள காரணசரீரமாகிய அஞ்ஞானம்

(உ) ஜாக்கிரசொப்பனங்களில் புத்திவடிவமாகின்றது.

(ந) மறுபடியும் சுழுத்தியில் அஞ்ஞானவடிவ மாகின்றது.

மூன்றாவது திருஷ்டாந்தம் :—

(க) ஒரு குழந்தை சிறுவர்களுடன் சேர்ந்து விளையாடப்போகிறான்.

(உ) அவன் சிரமம (இளைப்ப)டையுங்காலத்துத் தாயின் மடியில் தூங்கி வீட்டின் சுகத்தை அநுபவிக்கிறான்.

(ந) மறுபடியும் சிறுவர்கள் கூப்பிடுங்காலத்து வெளியே போய் விளையாடுகிறான்.

சித்தாந்தம்:—(க) அதுபோலக் காரணசரீரமாகிய அஞ்ஞானம் தாய், அதற்குப் புத்தியானது

குழந்தை. அக்குழந்தை கர்மமாகிய சிறுவர்களோடு ஜாக்கிரசொப்பனமாகிய வெளிப்பூமியில் வியவகாரமாகிய விளையாட்டைச் செய்து,

(உ) விக்ஷேபமாகிய சிரமத்தை அடையும்போது, சுழுத்தியவஸ்தையாகிய கிரகத்தில் அஞ்ஞானமாகிய தாயினிடத்து விலீனமாய் (ஒடுங்கி)ப் பிரஹ்மாநந்தத்தை அநுபவிக்கிறான்.

(ங) மறுபடியும் கர்மமாகிய சிறுவர்கள் அழைக்குங்காலத்து, ஜாக்கிரசொப்பனமாகியவெளிப்பூமியில் வியவகாரமாகிய விளையாட்டைச் செய்கிறான்.

நான்காவது திருஷ்டாந்தம்:—

(க) சமுத்திரஜலத்தால் நிரப்பிய ஓர் குடத்தைக்,

(உ) கழுத்திற் கயிறுகட்டிச் சமுத்திரத்தில் அமிழ்த்தினால்,

(ங) அப்போது குடத்திலுள்ள ஜலம் சமுத்திரஜலத்தோடு ஐக்கியத்தை அடைந்தபோதிலும்,

(ச) கடமாகிய உபாதியால் வேறுபோன்றிருக்கிறது.

(ரு) மறுபடியும் கயிற்றை இழுக்குங்காலத்துப் பேதத்தை அடைகிறது.

(சு) ஆனால் ஜலத்தோடுகூடிய குடத்திற்கும் சமுத்திரத்திற்கும் ஆதாரமாகிய ஆகாசம் வேறுகாமல்,

(எ) மூன்றுகாலத்தும் ஏகரசமா யிருக்கின்றது.

சித்தாந்தம் :—(க) அதுபோல அஞ்ஞானமாகிய சமுத்திரஜலத்தால் நிரம்பிய இலிங்கதேகமாகிய கடம்,

(உ) அதிருஷ்ட(புண்ணியபாவ)மாகிய கயிற்றாற் கட்டப்பட்டுச் சுழுத்திகாலத்திலும், அதன் அவாந்தரபேதமாகிய மரணம் மூர்ச்சை பிரளய மென்னும் காலங்களிலும், சமஷ்டியஞ்ஞானமாகிய ஈசுவரோபாதியான மாயையில் ஒடுங்குகின்றது.

(ங) அப்போது அந்த வியஷ்டியஞ்ஞானமாகிய ஜீவோபாதியான அவித்தை சமஷ்டியஞ்ஞானத்தோடு ஐக்கியத்தை அடைந்தபோதிலும்,

(ச) இலிங்கசரீரத்தின் சம்ஸ்காரமாகிய உபாதியினால் வேறுபோன் றிருக்கின்றது;

(௫) மறுபடியும் அதிருஷ்டமாகிய கயிற்றை அந்தரியாமி பிரேரிக்குங்கால் பேதத்தை யடைகின்றது.

(௬) ஆனல் வியஷ்டியஞ்ஞானமாகிய ஜலத்தோடுகூடிய இலிங்கதேகமென்னும் குடத்திற்கும், சமஷ்டியஞ்ஞானமாகிய சமுத்திரத்திற்கும் ஆதாரமாகிய சிதாகாசம் வேருகாமல்,

(௭) மூன்று காலத்திலும் ஏகரசமா யிருக்கின்றது.

௧௨௪. வினு:—சுழுத்தியைச் சொல்லுதலால் என்ன சித்தித்தது?

விடை:—(௧) சுழுத்தியவஸ்தை உண்டாகுமாயின், அதையும் நான் அறிகிறேன்.

(௨) ஜாக்கிரசொப்பனங்களில் அது இல்லாதபோது, அதன் இன்மையையும் நான் அறிகிறேன். ஆகையால் * ௧அ. இந்தச் சுழுத்தியவ

---

* ௧அ. "सुषुप्तिकाले सकले विलीने तमसावृते स्वरूपं महानन्दं भुङ्क्ते दृश्यविवर्जितः। अविशेषेण सर्वं तु यः पश्यति चिदन्वयात्। स एव साक्षाद्विज्ञानी स शिवः स हरिर्विधिः ॥

எல்லாம் ஒடுங்கித் தமசினல் சூழப்பட்டிருக்கும் சுழு

ஸ்தை நானல்ல; என்னுடையது மல்ல; இது காரண தேகத்தினுடையதாம். இதை அறியும் சாக்ஷியாகிய நான் கடசாக்ஷியைப்போல இதனினும் வேறு யிருக்கிறேன்.

இவ்வாறு சுழுத்தியவஸ்தைக்கு நான் சாக்ஷியா யிருக்கிறேன்.

---

த்திகாலத்தில் திருசியம் நீங்கியவனுய்த் தனது வடிவமான மகாநந்தத்தைப் புசிக்கின்றான். சிதந்வயத்தினுல் அதாவது சித்தினுண்மையால் எவன் எல்லாவற்றையும் பேதமின்றி அறிகின்றானே, அவனே விஞ்ஞானி; அவனே சிவன்; அவனே விஷ்ணு; பிரஹ்மா." என்பது வராகோபநிஷத்து இரண்டாவது அத்தியாயம்.

ஸ்ரீ விசாரசந்திரோதயம் ஐந்தாங்கலை

மூன்றவஸ்தைக்கும் நான் சாக்ஷி என்பது

முடிந்தது.





# ஸ்ரீ விசாரசந்திரோதயம்.

## ஆரங்கலே.

### பிரபஞ்சமித்தியாவர்ணநம்.

திருசிய மியாவுமத் தியாச மென்றொழித்
துலகா தாரத் தொன்றுவி சித்தம். (௧)
சாக்கிர மாதியாச் சாற்றுமூ வவத்தை
யெல்லா வுலகி னிவைவே றலவே. (௨)
இப்பியில் வெள்ளி யாதிப விருப்பபோ
விருப்ப பிரமத் தவத்தை மூன்றும். (௩)
வெள்ளி யாதியிற் றிருசியம் பொய்யாங்
கிளிஞ்சின் *முதலபோற் பிரம மெய்யாம். (௪)
வெள்ளி யாதிய வொன்றற் கொன்று
வியபி சரித்தலின் வெதிரேக மிவற்றிற்
குளது சுத்தி † சூத்திர மொத்தநு
கதமா யொன்று மதுபோற் பிரம
$ மநுவிருத்தி யுடைய தாகுஞ் சுத்தியின்

---

*முதலவென்பதனால் கயிறுமுதலியன கொள்ளப்படும்.
† மணிகளினுள் நூலைப்போல் நுழைந்திருப்பது.
$ அநுவிருத்தி=தொடர்ந்திருப்பது.

முக்கூ றெங்ஙன மங்ஙன முக்கூ
றஜடப் பிரமத் தாமவற் றுள்ளே
மெய்யென் றிரண்டு கூற்றை யுணர்ந்து
மூன்றாங் கூற்றை முற்றத் துறப்பின்
வீடு கரதல விளங்கனி யாமே. (௫)
பேதப் பிரம முதலா மைவகை
பவமு மூவித தாபத் தெரியு
வநமா மதனை ஐவகை யுத்திப்
பரசு கொடுநேல் விசார மென்னுஞ்
சேதஞ் செய்தே யச்சர் தவிர்ப்பாய். (௬)
எதன்கண் யாதிலைக் கால மூன்றி னு
மதனிடத் திப்பியில் வெள்ளியே போல
விடையிற் றோற்று மதுவேயத் தியாசம். (எ)
அது * பொரு † ளுணர்ச்சியென் றிருவகை
[யாகும். (அ)
அவ்விரு வகையுந் தனித்தனி யிரண்டாம். ()
அறுவகை யாகவு மறையப் படும்பொருள். ()
உலகினிற் காணு மொவ்வொரு மயக்கு
மிதனு ளடங்க வினிச்சி தான்மாவைப்
பிரமமென் றுணர்ந்தெலாப் பிரம மூலங்
கெடுத்துப் பரமா னந்தமே தானென்
றுணர்ந்து நீயு மொப்பில்வீ டடைவாய். (௧௧)

* பொருள் = அர்த்தாத்தியாசம்.
† உணர்ச்சி = ஞானாத்தியாசம்.

கஉகு. வினா:—ஆத்மாவின் மூன்று அவஸ்தைகள் எதைப்போலத் தோற்றுகின்றன?

விடை:—திருஷ்டாந்தம்:-க. இப்பி(கிளிஞ்சில்)ல் வெள்ளி அல்லது அப்பிரகம்(பூவிந்நாதம்) அல்லது காகிதம் என்னும் இம்மூன்றும் இப்பியினது அஞ்ஞானத்தால் கற்பிதமாகத் தோற்றுகின்றன.

க. அந்த மூன்று வஸ்துக்களுக்கும் ஒன்றற்கொன்றும் இப்பியினோடும் வேதிரேகமும்,

உ. இப்பிக்கு மூன்று வஸ்துக்களிலும் அந்வயமு முண்டு.

எப்படியெனின்:—

க. (க) இப்பியில் வெள்ளி தோற்றுங்காலத்து அப்பிரகமும் காகிதமும் தோற்றுகிறதில்லை;

(உ) அப்பிரகம் தோற்றுங்காலத்து வெள்ளியும் காகிதமும் தோற்றுகிறதில்லை;

(ங) காகிதம் தோற்றுங்காலத்து வெள்ளியும் அப்பிரகமும் தோற்றுகிறதில்லை. இது மூன்று வஸ்துக்களுக்கும் ஒன்றற்கொன்றுள்ள வெதிரேகம் (இன்மை).

இப்பியில் முதலிலும் நடுவிலும் ஈற்றிலும் இந்த மூன்று வஸ்துக்களுக்கும் வியாவகாரிக

மும் பாரமார்த்திகமுமாகிய அத்தியந்தாபாவ மிருக்கிறது. இஃது அந்த மூன்று வஸ்துக்களு க்கும் இப்பியிலுள்ள வெதிரேகம்.

உ. பிராந்திகாலத்தில்,

(க) "இது வெள்ளி"
(உ) "இது அப்பிரகம்"
(ங) "இது காகிதம்"

என்பதாக இப்பியின் இதுவென்னும் அமிச ம் அந்த மூன்று வஸ்துக்களிலும் அநுகூதமா (உள்ளீடா)ய் விளங்குகின்றது. இஃது அந்த மூ ன்றுவஸ்துக்களிலு முள்ள இப்பியின் அந்வயம்.

இங்கே இப்பியின் மூன்று அமிசங்கள் :—

க. சாமானிய அமிசம், உ. விசேஷ அமிசம், ங. கற்பிதவிசேஷ அமிசம் என்பனவாம்.

க. இதந்தை (இஃது எனுந்தன்மை) சாமானி ய அமிசம். ஏனெனின், எது அதிககாலத்தில் தோற்றுகிறதோ, அது சாமானிய அமிசம். இதந்தையானது

(க) பிராந்திகாலத்திலும்,

(உ) இது இப்பி என்று பிராந்தியில்லாத கா லத்திலும் தோற்றுவதால் சாமானிய அமிசமாம். இது ஆதாரமென்றும் சொல்லப்படுகிறது.

உ. நீலபிருஷ்ட(கருமையான பின்புற)த்தை யும் முக்கோணத்தையுமுடைய இப்பி, விசேஷ அமிசம். ஏனெனின், எது நியூன (அற்ப)காலத் தில் தோற்றுகிறதோ, அது விசேஷ அமிசம்.

(க) பிராந்திகாலத்தில் இந்த நீலபிருஷ்ட மு தலியவைகள் தோற்றுகிறதில்லை.

(உ) ஆனால் இவற்றின் தோற்றத்தால் பிராந் தி நீங்குகின்றது.

ஆகையால் இவை விசேஷ அமிசமாம். இது அதிஷ்டான மென்றும் சொல்லப்படும்.

ங. வெள்ளிமுதலியவைகள் கற்பிதவிசேஷ அமிசம். ஏனெனின், எது அதிஷ்டானத்தை அறியுங்காலத்துத் தோற்றுகிறதில்லையோ, அ து கற்பிதவிசேஷ அமிசம்.

(க) வெள்ளி முதலியவைகள் இப்பியின் அ ஞ்ஞானகாலத்தில் தோற்றுகின்றன;

(உ) இப்பியின் ஞானகாலத்தில் இவைகள் தோற்றுகிறதில்லை.

(ங) அதனால் இப்பியோடு வியபிசாரமு(மா றுதலு)டையனவா யிருக்கின்றன.

ஆகையால் இது கற்பிதவிசேஷ அமிசமாம். இது பிராந்தி என்றும் சொல்லப்படும்,

சித்தாந்தம் :—அதுபோல

அதிஷ்டானமாகிய ஆத்மாவில் ஜாக்கிரம், அல்லது சொப்பனம், அல்லது சுழுத்தி என்னும் இம்மூன்று பிராந்தியும் ஆத்மாவை அறியாததால் உண்டாகின்றன.

க. அவற்றிற்கு ஒன்றற்கொன்றும், அதிஷ்டானமாகிய ஆத்மாவோடும் * க. வெதிரேகமும்,

உ. ஆத்மாவிற்கு அவற்றில் * உ. அந்நுவயமுமுண்டு. எப்படியெனின் :—

க. (க) * ங. ஜாக்கிரம் தோற்றுங்காலத்துச் சொப்பனசுழுத்திகள் தோற்றுகிறதில்லை.

---

* க. அபாவம் (இன்மை) அல்லது வியாவிருத்தி (எதிர்மறை) வெதிரேகமாம்.

* உ. பாவம்(உண்மை) அல்லது அநுவிருத்தி(உடன்பாடு) அந்வயமாம்.

* ங. "स्वप्ने जागरितं नास्ति जागरे स्वप्नता न हि। द्वयमेव लये नास्ति त्रयमेव भवेन्मिथ्या गुणत्रयविनिर्मितम्। अस्य द्रष्टा गुणतीतो नित्यो ह्येष चिदात्मकः

(௨) சொப்பனம் தோற்றுங்காலத்து ஜாக்கிர சுழுத்திகள் தோற்றுகிறதில்லை.

(௩) சுழுத்தி தோற்றுங்காலத்து ஜாக்கிர சொப்பனங்கள் தோற்றுகிறதில்லை. இது மூன்றவஸ்தைகளுக்கும் ஒன்றற்கொன்றுள்ள வேதிரேகம்.

அதிஷ்டானத்தில் இந்த மூன்றவஸ்தைகளுக்கும் பாரமார்த்திக அத்தியந்தாபாவம் (நித்தியநிவிருத்தி) இருக்கிறது. இது மூன்றவஸ்தைக்கும் அதிஷ்டானத்திலுள்ள வேதிரேகம்.

---

यद्वन्मृदि घटभ्रांतिश्शुक्तौ हि रजतस्थितिः । तद्वद्ब्रह्मणि जीवत्वं वीक्ष्यमाणे विनश्यति ॥

ஜாக்கிரம் சொப்பனத்தி லில்லை; சொப்பனத்தன்மை ஜாக்கிரத்தி லில்லை; இரண்டுமே இலயமாகிய சுழுத்தியி லில்லை, மூன்றுமே முக்குணங்களாலாக்கப்பட்டனவாய் மித்தையாம். இதன் திருஷ்டாவாகிய இச்சித்சொரூபன் குணாதீதனாய் நித்தியனே யாவன். எப்படி மண்ணில் கடப்பிராந்தியும் சுத்தியில் இரஜதத்தின் ஸ்திதியும் தோற்றுகின்றதோ, அதுபோல இவ்வுலகம் நிலைத்திருத்தலின் பிரஹ்மத்தையறியுங்கால் ஜீவத்தன்மை நசிக்கின்றது.” என்பது யோகசிகோபநிஷத்து.

உ. ஆத்மா இந்த மூன்றவஸ்தைகளிலும் அநுசூதமாய்ப் பிரகாசிக்கின்றது. இது மூன்றவஸ்தைகளிலும் ஆத்மாவிற்குள்ள அந்வயம்.

இங்கே ஆத்மாவிற்கு அவித்தையாகிய உபாதியினால் ஆரோபிக்கப்பட்ட மூன்றமிசங்கள்.

க. சாமானிய அமிசம்,

உ. விசேஷ அமிசம்,

ந. கற்பித விசேஷ அமிசம் என்பனவாம்.

க. சத்ரூபம் (இருப்பு) சாமானிய அமிசம். ஏனெனின்,

(க) "ஜாக்கிரமிருக்கிறது." "சொப்பனமிருக்கிறது." "சுழுத்தி யிருக்கிறது." என்றிப்படி ஆத்மாவின் இருப்பானது பிராந்திகாலத்திலும் தோற்றுகிறது;

(உ) பிராந்தி நீங்கியகாலத்தும் "நான் சத்தாயிருக்கிறேன், நான் சித்தா யிருக்கிறேன், நான் ஆநந்தமா யிருக்கிறேன், நான் பரிபூரணனா யிருக்கிறேன், நான் அசங்கனா யிருக்கிறேன், நான் நித்தியமுக்தனா யிருக்கிறேன், நான் பிரஹ்மமா

யிருக்கிறேன்.'' என்றிப்படி ஆத்மாவின் இருப்பானது தோற்றுகின்றது.

ஆகையால் இந்தச் சத்துரூபம் சாமானிய அமிசமாம். இது ஆதார மென்றும் சொல்லப்படும்.

உ. சேதனத்துவம் ஆநந்தத்துவம் அசங்கத்துவம் அத்துவிதியத்துவமுதலிய ஆத்மாவின் விசேஷணங்கள் விசேஷ அமிசம்.

(க) ஏனெனின், பிராந்திகாலத்தில் இவைகள் தோற்றுகிறதில்லை.

(உ) ஆனல் இவற்றின் தோற்றத்தால் பிராந்தி நிவிருத்தி யாகின்றது.

ஆகையால் இவை விசேஷ அமிசமாம். இவை அதிஷ்டான மென்றும் சொல்லப்படும்.

ங. மூன்றவஸ்தையாகிய பிரபஞ்சம் கற்பித விசேஷ அமிசம். ஏனெனின்,

(க) பிரஹ்மாபின்னமாகிய ஆத்மாவை அறியாதகாலத்தில் தோற்றுகிறது;

(உ) ''நான் பிரஹ்மம்'' என்பதாக ஆத்மாவை அறியுங்காலத்து ஆத்மாவிற்கு வேருகச் சத்துத் தோற்றுகிறதில்லை.

ஆகையால் இந்த மூன்றவஸ்தையாகிய பிரபஞ்சம் கற்பிதவிசேஷ அமிசமாம். இது பிராந்தி என்றும் சொல்லப்படும். இவ்வாறு இந்த மூன்றவஸ்தைகளும் ஆத்மாவில் மித்தையாகத் தோற்றுகின்றன.

கஉசு. வினா:—ஆத்மாவினிடத்தில் மித்தையாகிய பிரபஞ்சம் தோற்றுவதில் இப்பியில் வெள்ளி திருஷ்டாந்தத்தினும் வேறான திருஷ்டாந்தங்களெவை?

விடை:—

க. கட்டையில் புருடனும்,

உ. சாக்ஷியில் சொப்பனமும்,

ங. மருபூமியில் ஜலமும்,

ச. ஆகாசத்தில் கருமையும்,

ரு. பழுதையில் பாம்பும்,

சு. ஜலத்தில் தலைகீழாகிய புருஷன் அல்லது விருக்ஷமும்,

எ. கண்ணாடியில் நகரமும் தோற்றுகின்றன. அவை மித்தையாம்.

*அதுபோல ஆத்மாவில் தனது அஞ்ஞானத்தால் பிரபஞ்சம் தோற்றுகிறது; * ௪. அது*

"*௪. यथा मृदि घटो नाम कनके कुण्डलाभिधा ।
शुक्तौ हि रजतख्यातिर्जीवशब्दस्तथा परे ॥
यथैव व्योम्नि नीलत्वं यथा नीरं मरुस्थले ।
पुरुषत्वं यथा स्थाणौ तद्वद्विश्वं चिदात्मनि॥
यथैव शून्ये वेतालो गंधर्वाणां पुरं यथा ।
यथाकाशे द्विचन्द्रत्वं तद्वत्सत्ये जगस्थितिः ॥
यथा तरंगकल्लोलैर्जलमेव स्फुरत्यलं ।
घटनाम्ना यथा पृथ्वी पठनाम्ना हि तंतवः ।
जगन्नाम्ना चिदाभाति सर्वं ब्रह्मैव केवलं ॥
यथा वंध्यासुतो नास्ति यथा नास्ति मरौ जलं ।
यथा नास्ति नभोवृक्षस्तथा नास्ति जगस्थितिः ।
गृह्यमाणे घटे यद्वन्मृत्तिका भाति वै बलात् ।
वीक्ष्यमाणे प्रपञ्चे तु ब्रह्मैवाभाति भासुरं ॥
सदैवात्मा विशुद्धोस्ति ह्यशुद्धो भाति वै सदा ।

यथैव द्विधा रज्जुर्ज्ञानिनोऽज्ञानिनोनिशं ।
यथैव मृण्मयः कुंभस्तद्वद्देहोपि चिन्मयः ।
आत्मानात्मविवेकोयं मुधैव क्रियते बुधैः ।
सर्पत्वेन यथा रज्जूर जतत्वेन शुक्तिता ।
विनिर्णीता विमूढेन देहत्वेन तथात्मता ।
घटत्वेन यथा पृथ्वी जलत्वेन मरीचिका ।
गृहत्वेन हि काष्टानि खड्गत्वेनैव लोहता ।
तद्वदात्मनि देहत्वं पश्यत्यज्ञानयोगतः ॥

மண்ணில் குட மென்னும் பெயரும், கநகத்தில் குண்டல மென்னும் பெயரும், சுத்தியில் இராஜத மென்னும் பெயரும் இருப்பதுபோலப் பரமாகிய ஆத்மாவில் ஜீவனென்னும் பெயரிருக்கின்றது. ஆகாயத்தில் கருமைபோலவும், மருபூமியில் ஜலம்போலவும், கட்டையில் புருஷத்தன்மைபோலவும், சிதாத்மாவில் உலகம் தோன்றுகின்றது. சூநியதேசத்தில் வேதாளமும், சந்தர்வநகரமும், ஆகாசத்தில் இரட்டைமதித்தன்மையும் தோற்றுவது போலச் சத்தியமாகிய ஆத்மாவில் ஜகத்தின் ஸ்திதி தோற்றுகின்றது. எப்படி அலைநுரையாதிகளாக ஜலமே ஸ்புரிக்கின்றதோ, எப்படிக் கடமென்னும் பெயரால் பிருதிவியும், பட மென்னும் பெயரால் தந்துக்களும் தோற்றுகின்றனவோ, அதுபோலச் சித்தே

ஜகத்து என்னும் பெயரால் தோற்றுகின்றது. ஆதலால் யாவும் பிரஹ்மமாத்திரமேயாம். எப்படி மலடிமைந்தன் இல்லையோ, எப்படி மருபூமியில் ஜல மில்லையோ, எப்படி ஆகாசவிருக்ஷ மில்லையோ, அவ்வாறு ஜகத்தின் ஸ்திதி இல்லை. கடத்தில் கிரகிக்குமிடத்து எப்படி மண்ணே வலிந்து விளங்குகின்றதோ, அதுபோலப் பிரபஞ்சத்தை நோக்குமிடத்து விளக்கமான பிரஹ்மமே விளங்குகின்றது. எப்படி இரஜ்ஜுவானது ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் இருவகையாய்த் தோன்றுகின்றதோ, அதுபோல எப்போதும் மிகச்சுத்தமாயிருந்தும் அஞ்ஞானிகளுக்கு எப்போதும் அசுத்தமாகத் தோன்றுகின்றது. கடம் மண்மயமாயிருப்பதுபோலத் தேகமும் சின்மயமாம். ஆத்மாநாத்ம விவேகமாகிய இஃது அறிஞர்களால் அடிக்கடி செய்யப்படுகின்றது. இரஜ்ஜு சர்ப்பத்தன்மையாகவும், சுத்தி இரஜதத்தன்மையாகவும் நிர்ணயிக்கப்படுவதுபோல, அறிவீனனால் ஆத்மத்தன்மையானது தேகத்தன்மையாக நிர்ணயிக்கப்படுகின்றது. பிருதிவி கடத்தன்மையாகவும், கானல் ஜலத்தன்மையாகவும், மரங்கள் வீட்டுத்தன்மையாகவும், இரும்புத்தன்மை கத்தித்தன்மையாகவும் பார்க்கப்படுவதுபோல, ஆத்மாவினிடத்துத் தேகத்தன்மையை அஞ்ஞானசம்பந்தத்தால் காண்கின்றான்." என்பது யோகசிகோபநிஷத்து சு-வது அத்யாயம்.

" सर्पादौ रज्जुसत्तेव ब्रह्मसत्तैव केवलं ।
प्रपञ्चाधाररूपेण वर्त्तते जगन्नहि ।

यथेक्षुरससंव्याप्ता शर्करावर्तते तथा ।
अद्वयब्रह्मरूपेण व्याप्तोहं वै जगत्त्रयं ।
ब्रह्मादिकीटपर्यंताः प्राणिनो मयि कल्पिताः ।
बुद्बुदादि विकारान्तास्तरंगास्सागरे यथा ॥

பாம்புமுதலியவற்றில் பழுதையின்சத்தையே யிருப்பது போலப் பிரபஞ்சாதாரவடிவமாகக் கேவலம் பிரஹ்மசத்தையே யிருக்கின்றது; ஜகத்தில்லை. எப்படிச் சர்க்கரை கரும்பின் ரஸத்தினால் வியாபிக்கப்பட்டதாகின்றதோ, அதுபோல யான் மூன்றுலகத்தையும் அத்வயப் பிரஹ்மவடிவமாக வியாபித்திருக்கின்றேன். குமிழிமுதல் விகாரபரியந்தமான அலைகள் சமுத்திரத்திற் கற்பிக்கப்படுவதுபோலப் பிரஹ்மாதி கீடபரியந்தமான பிராணிகள் என்னிடத்துக் கற்பிக்கப்பட்டனவாம்.'' என்பது ஆத்மபோதோபநிஷத்து.

"अनित्यं जगद्यज्जनितं स्वप्नजगदभ्रगजादितुल्यम् । तथा देहादि संघातं मोहगुणजालकलितं तद्रज्जुसर्पवत्कल्पितम् ॥

அநித்தியமான ஜகத்து யாது தோன்றியிருக்கிறதோ, அது சொப்பனஜகத்துக்கும் மேகத்திற்றோன்றும் யானைமுதலியவற்றிற்கும் சமானமாம். அவ்வாறேதேகாதி

சங்காதமும் மோககுணக்கூட்டங்களால் ஆக்கப்பட்ட தாம். அது இரஜ்ஜுசர்ப்பம்போல் கற்பிதமாம்." என்பது நிர்வாணோபநிஷத்து.

"अनेककोटिब्रह्माण्डं सर्वं मिथ्येति निश्चिनु ।

அநேக கோடி பிரஹ்மாண்டங்கள் யாவும் மித்தை யென்று நிச்சயஞ் செய்."

"दृश्यते जगति यद्यद्यज्जगति वीक्ष्यते ।
वर्तते जगति यद्यत्सर्वं मिथ्येति निश्चिनु ॥

ஜகத்தில் யாது யாது அறியப்படுகின்றதோ, ஜகத்தில் யாது யாது பார்க்கப்படுகின்றதோ, ஜகத்தில் யாது யாது இருக்கின்றதோ, அது முழுவதும் மித்தையென்று நிச்சயஞ்செய்." என்பன தேஜோபிந்தூபநிஷத்தினது ஐந்தாவது அத்தியாயத்தின் வாக்கியங்கள். அன்றியும் ஜகத்து மித்தை யென்பதன் கூச திருஷ்டாந்தங்களை அந்தத் தேஜோபிந்து உபநிஷத்தின் ஐந்தாவது அத்தியாயத்திற் காண்க. தமிழில் காண விரும்புவோர் ரிபுகீதை ௩௪-வது அத்யாயத்தில் காண்க.

"एकमेवाद्वयं ब्रह्म नेह नानास्ति किञ्चन ।
तस्माद्ब्रह्मव्यतिरिक्तं सर्वं बाधितम् ॥

ஒரே அத்வயப்பிரஹ்மம் உள்ளது. இங்கு நாநாவென்பது சிறிது மில்லை. ஆகையால் பிரஹ்மத்திற்கு வேறாகிய யாவும் பாதிக்கப்பட்டனவாம்."

" मिथ्याभूतान्स्वप्नतुल्यान्विषयभोगाननुभूय ।

சொப்பனசமானமாய் மித்தியாவடிவமான விஷயங் களை யநுபவித்து." என்பன மகாநாராயணோபநிஷத் வாக்கியங்கள்.

" यथा कटकशब्दार्थः पृथग्भावो न काञ्चनात् ।
न हेमकटकात्तद्वज्जगच्छब्दार्थता परे ।
तेनेयमिन्द्रजालक्रीडागतिः प्रवितन्यते ॥

எப்படிக் கடகசப்தத்தின் பொருள் பொன்னைவிட வேறன்றோ, பொன் கடகத்தின் வேறன்றோ, அது போல ஜகத்துசப்தத்தின்பொருள் பரத்தி லிருக்கின்றது. அதனால் இவ்விந்திரஜாலக்கிரீடாகதி (விளையாட்டு) விரிக்கப்படுகின்றது." என்பது மஹோபநிஷத்வாக்கியம்.

" यत्रैषा जगदाभासो दर्पणांतःपुरं यथा ।
तद्ब्रह्माहमिति ज्ञात्वा कृतकृत्यो भवानघ ॥

பாபமற்றவனே! எதில் இந்த ஜகத்தானது கண்ணாடியிற்புரம்போல ஆபாசமாகத் தோற்றுகின்றதோ, அந்தப் பிரஹ்மம் நான் என்று அறிந்து கிருதகிருத்தியனாவாய்." என்பது அத்யாத்மோபநிஷத்து.

மித்தையாம். இவ்வாறு பிரபஞ்சத்தின் மித்தியாத்துவத்தை நிச்சயம் செய்தலே பிரபஞ்சத்தின் *ரு. பாதமாம்.

கஉஎ. வினா:—பிராந்தியாகிய சமுசாரம் எத்தனை வகையாம்?

விடை :—

க. *சு. பேதப்பிராந்தி,

உ. *எ. கருத்திருத்துவபோக்திருத்துவப் பிராந்தி,

---

* ரு. மித்தியாத்துவநிச்சயத்திற்குப் பாத மென்று பெயராம். அது சாஸ்திரீயம் (சாஸ்திரசம்பந்தம்), யௌக்திகம்(யுக்திசம்பந்தம்), அபரோக்ஷ மென்னும் பேதத்தால் மூன்றுவகையாம்.

* சு. ஜீவேசுரர்களின் பேதம், ஜீவர்களின் பரஸ்பர பேதம், ஜடங்களின் பரஸ்பரபேதம், ஜீவஜடபேதம், ஈசஜடபேதம் என்னு மிவை ஐவகைப்பேதப்பிராந்தி.

* எ. அந்தக்கரணத்தின் தர்மமாகிய கருத்திருத்துவ போக்திருத்துவங்கள் ஆத்மாவினிடத்தில் தோற்றுதல் கருத்திருத்துவபோக்திருத்துவப்பிராந்தி.

ங. *அ. சங்கப்பிராந்தி,

ச. *கூ. விகாரப்பிராந்தி,

ரு. பிரஹ்மத்திற்கு பின்னமாகிய ஜகத்தின் சத்தியத்துவப்பிராந்தி என்று *கO. ஐந்துவிதமாம்.

---

* அ. ஆத்மாவிற்குத் தேகாதிகளில் அகந்தையும், கிரகாதிகளில் மமதையுமாகிய சம்பந்தமாவது அல்லது சஜாதீயவிஜாதீயசுவகதவஸ்துக்களோடுள்ள சம்பந்தமாவது தோற்றுதல் சங்கப்பிராந்தி.

* கூ. பாலின் விகாரம் தயிராதல்போலப் பிரஹ்மத்தின் விகாரம் ஜீவனும் அப்படியே ஜகத்துமாம் என்னும் தோற்றம் விகாரப்பிராந்தி.

"*கO. भ्रमः पञ्चविधो भाति तदेवेह समुच्यते ।
जीवेश्वरौ भिन्नरूपाविति प्राथमिको भ्रमः ।
आत्मनिष्ठं कर्तृगुणं वास्तवं वा द्वितीयकः ।
शरीरत्रयसंयुक्तजीवस्संगी तृतीयकः ।
जगत्कारणरूपस्य विकारित्वं चतुर्थकः ।
कारणाद्भिन्नजगतस्सत्यत्वं पञ्चमो भ्रमः ।

கஉஅ. வினா :—ஐவகைப்பிராந்தியும் எந்தத் திருஷ்டாந்தங்களால் நிவிருத்தியாகும் ?

விடை :—

---

पञ्चभ्रमानिवृत्तिश्च तदा स्फुरति चेतसि ।

बिंबप्रतिबिंबदर्शनेन भेदभ्रमो निवृत्तः ॥

स्फटिकलोहितदर्शनेन पारमार्थिककर्तृत्वभ्रमो निवृत्तः । घटमठाकाशदर्शनेन सङ्गीतिभ्रमो निवृत्तः ॥

रज्जुसर्पदर्शनेन विकारित्वभ्रमो निवृत्तः ॥

कनरुचकदर्शनेन कारणाद्भिन्नजगत्सत्यत्वभ्रमोनिवृत्तः ॥

तदा प्रभृति मच्चित्तं ब्रह्माकारमभूत्स्वयम् ॥

பிரமம் ஐந்துவிதமாகத் தோற்றுகின்றது. அதுவே இங்குச் செவ்வையாய்ச் சொல்லப்படுகின்றது :—க. ஜீவேசுவரர்கள் இருவரும் பின்னவடிவுடையோர் என்பது முதலாவது பிரமம். உ. ஆத்மாவினிடத்துள்ள கர்த்திருத்துவம் வாஸ்தவ மென்பது இரண்டாவது பிரமம். ங. சரீரமூன்றுடன் கூடிய ஜீவன் சங்க முடையவன் என்பது மூன்றாவது பிரமம். ச. ஜகத்தின் காரணவடிவம் விகாரி யென்பது நான்காவது பிரமம். ரு. காரணத்

க. *கக. பிம்பப்பிரதிபிம்பதிருஷ்டாந்தத்தால் பேதப்பிராந்தியும்,

உ. ஸ்படிகத்தில் சிவப்புவஸ்திரத்தின் செந்நிறம் தோற்றும் திருஷ்டாந்தத்தால் கருத்திருத்துவபோக்திருத்துவப்பிராந்தியும்,

---

திற்கு வேறான ஜகத்துசத்தியமென்பது ஐந்தாவது பிரமம். பஞ்சப்பிரமநிவிருத்தியும் அப்போது சித்தத்தில் ஸ்புரிக்கின்றது :— க. பிம்பப்பிரதிபிம்பதரிசனத்தால் பேதப்பிரமம் நீங்கியது, உ. ஸ்படிகத்தின் செம்மையைக் காணுதலால் பாரமார்த்திககர்த்திருத்துவப்பிரமம் நீங்கியது, ௩. கடமடாகாசதரிசனத்தால் சங்கி(யான் சங்கமுடையவன்) என்னும் பிரமம் நீங்கியது, ச. இரஜ்ஜுசர்ப்பதரிசனத்தால் விகாரித்தன்மைப்பிரமம் நீங்குகின்றது, ரு. கனககுண்டல தரிசனத்தால் ஜகத்தின் சத்தியத்தன்மைப்பிரமம் நீங்கியது. அக்காலந்தொட்டு என் சித்தம் சுவயம் பிரஹ்மாகாரமாயிற்று." என்பது அந்நபூர்ணோபநிஷத்து.

* கக. சூத்திரபாஷியத்திற்குப் பஞ்சபாதிகையென்னும் உரை பதுமபாதாசாரியரால் செய்யப்பட்டிருக்கிறது. அந்தப் பஞ்சப்பாதிகையின் வியாக்கியானமாகிய விவரணமென்னும் கிரந்தத்திற்குக் கர்த்தா, ஸ்ரீ பிரகாசாத்மசாரணரென்னும் ஆசாரியர். அவரது முறையை அநுசரித்துள்ளது மேலெழுதப்பட்டுள்ள இந்தப் பிம்பப்பிரதிபிம்பதிருஷ்டாந்தம்.

ரு. கடாகாசதிருஷ்டாந்தத்தால் சங்கப்பிராந்தியும்,

௬. இரஜ்ஜுவிற்கற்பிதமாகிய சர்ப்பதிருஷ்டாந்தத்தால் விகாரப்பிராந்தியும்,

௭. கனகத்திற் குண்டலம் தோற்றும் திருஷ்டாந்தத்தால் பிரஹ்மத்திற்குப் பின்னமாகிய ஜகத்தின் சத்தியத்துவப்பிராந்தியும் நிவிருத்தியாகும்.

கஉக. வினா :—க. பிம்பப்பிரதிபிம்பதிருஷ்டாந்தத்தால் பேதப்பிராந்தி எப்படி நிவிருத்தியாகும் ?

விடை :—திருஷ்டாந்தம் :—(க) * கஉ. கண்

---

* கஉ. "सत्येवाभाति चिच्छाया दर्पणे प्रतिबिम्बवत् ।
சிற்சாயையானது கண்ணாடியில் பிரதிபிம்பம்போலச் சத்தியமானதுபோல் தோற்றுகின்றது." என்பது சாஸ்வதிரஹஸ்யோபநிஷத்து.

"एक एव हि भूतात्मा भूते भूते व्यवस्थितः ।
एकधा बहुधा चैव दृश्यते जलचन्द्रवत् ॥

ஒரே பூதாத்மா பூதங்கள்தோறும் இருப்பவராய் ஜலசந்திரனைப் போல ஒருவகையாயும் பலவகையாயும் காணப்படுகின்றார்." என்பது திரிபுராதாபிநீயுபநிஷத்தும், பிரஹ்மபிந்தூபநிஷத்துமாம்.

ணுடியில் தோற்றும் முகத்தின் பிரதிபிம்பம் அக்கண்ணுடியி லில்லை. ஆனுல் கண்ணுடியைப்பார்க்கும்பொருட்டு வெளிப்பட்ட நேத்திரவிருத்தி அந்தக் கண்ணுடியைப் பரிசித்து(தீண்டி), மறுபடியும் திரும்பி, முகத்தையே பார்க்கின்றது. ஆகையால் பிம்பமாகிய முகத்தோடு பிரதிபிம்பம் அபின்னமாம். அதனுல் பிரதிபிம்பம் மித்தை யன்று ; சத்தியமாம்.

(உ) பிரதிபிம்பத்தின் தர்மமாகிய பிம்பத்தினும்வேருந்தன்மையும், கண்ணுடியிலிருக்குந்தன்மையும், பிம்பத்தினும் எதிர்முகமாந்தன்மையுமாகிய இந்த மூன்றும், அவற்றினது தோற்றமாகிய ஞானமும் பிராந்தியாம்.

(௩) ஆகையால் இந்தத்தர்மங்களின் மித்தியாத்துவநிச்சயமாகிய பாதத்தைச் செய்வதனுல் பிம்பப்பிரதிபிம்பங்களுக்கு என்றும் அபேதமாகிய நிச்சயம் உண்டாகின்றது.

சித்தாந்தம்:—(க) அதுபோலச் சுத்தப்பிரஹ்மம் பிம்பமாம். ஜீவனுகிய அதனது பிரதிபிம்பம் அஞ்ஞானமாகிய கண்ணுடியில் தோற்றுகின்றது. அவற்றுள் சொப்பனத்தைப்போல் ஒரு ஜீவன் முக்கியமாம். மற்றவை ஸ்தாவர ஜங்கம

மாகிய நாநாஜீவர்களாகத் தோற்றுகின்றன. அவை ஜீவாபாசங்களாம். அந்த ஜீவனாகிய பிரதிபிம்பம் ஈசுவரனாகிய பிம்பத்தோடு எப்போதும் அபின்னமாம்.

(உ) ஆனால் மாயையின் வலியாலாம் அந்த ஜீவனது தர்மமாகிய பிம்பமாம் ஈசுவரனினும் வேறுந்தன்மை, ஜீவத்துவம், அற்பஞ்ஞத்துவம், அற்பசக்தித்துவம், பரிச்சின்னத்துவம், நாநாத்துவமுதலியனவும், அவற்றின் தோற்றமாகிய ஞானமும் பிராந்தியாம்.

(ந) ஆகையால் அவற்றின் மித்தியாத்துவ நிச்சயமாகிய பாதத்தைச் செய்வதனால், ஜீவனாகிய பிரதிபிம்பத்திற்கும் ஈசுவரனாகிய பிம்பத்திற்கும் என்றும் அபேதமாகிய நிச்சய முண்டாகின்றது.

இவ்வாறு பிம்பப்பிரதிபிம்பதிருஷ்டாந்தத்தால் * கந. பேதப்பிராந்தி நிவர்த்தியாகின்றது.

---

* கந. முக்கியமாகிய ஜீவேசுவரபேதநிஷேதத்தால் அதனுளடங்கிய நான்கு பேதங்களின் நிஷேதமும் இயல்பாகவே சித்திக்கின்றது. சகலபேதமும் உபாதியினலாயிருக்கின்றன. உபாதிகள் யாவு மித்தையாகையால், அவற்றாலாகிய பேதங்களும் மித்தையாம். ஆகவே வாஸ்தவமாகிய அத்வைதப்பிரஹ்மமே மிஞ்சுகின்றது.

௧௩௦. வி௵ :—௨. படிகத்தில் சிவப்புவஸ்திரத்தின் செந்நிறம்தோற்றும் திருஷ்டாந்தத்தால் கருத்திருத்துவபோக்திருத்துவப்பிராந்தி எப்படி நீங்கும் ?

---

"यदा ह्येवैष एतस्मिन्नल्पमप्यन्तरं नरः ।
विजानाति तदा तस्य भयं स्यान्नात्र संशयः ॥

எப்போது இந்நரன் இதில் சிறிதேனும் பேதத்தையறிகின்றானோ, அப்போது அவனுக்குப் பய முண்டாகின்றது ; இதிற் சந்தேகமில்லை." என்பது கடோபநிஷத்தும் மகோபநிஷத்து ௬-வது அத்தியாயமுமாம்.

"अद्वितीये परे तत्त्वे निर्विशेषे भिदा कुतः ।
एकात्मके परे तत्त्वे भेदकं तत् कथं वसेत् ॥

நிர்விசேஷ அதாவது பேதமின்றிய அத்விதீயபரதத்துவத்தில்பேதமேது ? ஒருவடிவமான பரதத்துவத்தில் அப்பேதத்தைச்செய்வது எப்படி வசிக்கும் ? " என்பது அத்யாத்மோபநிஷத்து.

"यदा ह्येवैष एतस्मिन्नुदरमन्तरं कुरुते । अथ तस्य भयं भवति ॥

எப்போது இவன் இதன்கண் சிறிதேனும் பேதத்தினைச் செய்கின்றானோ, அதனால் அவனுக்குப் பயமுண்டாகின்றது." என்பது தைத்திரீயம் பிரஹ்மாநந்தவல்லி.

விடை:-(க) சிவப்புவஸ்திரத்தின்மேல் வைக்கப்பட்ட படிகமணியில் வஸ்திரத்தின் செந்நிறம் சையோகசம்பந்தத்தால் தோற்றுகிறது.

(உ) ஆனால் அது வஸ்திரத்தின் தர்மமாம்.

(ங) வஸ்திரமும் படிகமும் பிரிந்தகாலத்து, அது படிகத்தில் தோற்றுகிறதில்லை.

(ச) ஆனால் அது படிகத்தின் தர்ம மன்று.

(ரு) ஆனால் படிகத்தில் பிராந்தியினால் தோற்றுகிறது.

சித்தாந்தம்:—(க) அதுபோல அந்தக்கரண தர்மமாகிய கருத்திருத்துவபோக்திருத்துவங்கள் ஆத்மாவில் தாதாத்மியசம்பந்தத்தால் தோற்றுகின்றன.

(உ) ஆனால் அவை அந்தக்கரணத்தின் தர்மமாம்.

(ங) சுழுத்தியில் அந்தக்கரணமும் ஆத்மாவும் பிரிந்தகாலத்து அவை ஆத்மாவினிடத்திற் தோற்றுகிறதில்லை.

(ச) ஆகையால் ஆத்மாவின் தர்ம மன்று.

(ரு) ஆனால் ஆத்மாவினிடத்தில் பிராந்தியினால் தோற்றுகின்றன.

இவ்வாறு படிகத்திற் செந்நிறம்தோற்றும் திருஷ்டாந்தத்தால் கர்த்திருத்துவபோக்திருத்துவப்பிராந்தி நீங்குகின்றது.

கஙக. வினு:—ங. கடாகாயதிருஷ்டாந்தத்தால் சங்கப்பிராந்தி எப்படி நிவர்த்தியாகும்?

விடை:—(க) கடவுபாதியையுடைய ஆகாயம் கடாகாயமெனப்படும்.

(உ) அந்த ஆகாயம் கடத்தோடு தோற்றியபோதினும்,

(ங) கடத்தின் தர்மமாகிய உற்பத்திநாசம் கமனுகமனமுதலியவை ஆகாயத்தைப் பரிசிக்கிறதில்லை.

(ச) ஆகையால் ஆகாயம் அசங்கமாம்.

(ரு) ஆகாயத்திற்குக் கடத்தோடு சம்பந்தம் தோற்றுதல் பிராந்தியாம்.

சித்தாந்தம்:—(க) அதுபோலத் தேகமுதலிய சங்காதமாகிய உபாதியையுடைய ஆத்மா ஜீவனெனப்படும்.

(உ) அந்த ஆத்மா சங்காதத்தோடு கூடியதாகத் தோற்றியபோதிலும்,

(ங) சங்காதத்தின் தர்மமாகிய ஜனன மரணு திகள் ஆத்மாவைப் பரிசியா. ஏனெனின், சங்காதம் திருசியம் ; ஆத்மா திருஷ்டா.

(ச) அதனுல் ஆத்மா சங்காதத்தினும் வேருகிய அசங்கனும்.

(ரு) ஆத்மா சங்காதரூபமல்லாத தாகையால் ஆத்மாவிற்குச் சங்காதத்தோடு அகந்தையாகிய சம்பந்த மில்லை. ஆத்மா சங்காதமாகாமல், அந்தச் சங்காதமும் பஞ்சபூதத்தினதா யிருத்தலால், ஆத்மாவிற்கு மமதையாகிய சம்பந்தமு மில்லை.

ஆத்மா சங்காதத்திற்கு வேரு யிருத்தலால் ஆத்மாவிற்குச் சங்காதத்தின் சம்பந்திகளாகிய ஸ்திரீபுத்திரகிரகாதிகளோடு மமதையாகிய சம்பந்தமு மில்லை. இவ்வாற்ருல் ஆத்மா அசங்கன். இவ்வாத்மாவிற்கு சங்காதத்தோடுள்ள அகந்தை மமதையாகிய சம்பந்தம் பிராந்தியாம்.

இவ்வாறு கடாகாசதிருஷ்டாந்தத்தால் சங்கப்பிராந்தி நீங்குகின்றது.

---

கஙஉ. வினு :–ச. இரஜ்ஜுவில் கற்பிதமாகிய சர்ப்ப திருஷ்டாந்தத்தால் விகாரப்பிராந்தி எப்படி நீங்கும் ?

விடை :-(க) மந்தாந்தகாரத்தில் இரஜ்ஜுவானதிருக்க, அதைப் பார்க்கும்பொருட்டு நேத்திரத்துவாரத்தால் அந்தக்கரணவிருத்தி வெளிப்படுகின்றது. அந்த விருத்தி இருள் முதலிய தோஷத்தால் இரஜ்ஜுவின் ஆகாரத்தை அடைகிறதில்லை. ஆகையால் அந்த விருத்தியால் இரஜ்ஜுவின் ஆவரணம் பங்கமாகிறதில்லை. அப்போது இரஜ்ஜுவை உபாதியாகவுடைய சைதன்னியத்தை ஆசிரயித்திருந்த *கச. தூலாவித்தை க்ஷோப(கலக்க)த்தை அடைந்து, சர்ப்பரூப விகாரத்தை அடைகின்றது.

(உ) அந்தச்சர்ப்பம் பாலின் பரிணாமமாகிய தயிரைப்போல அவித்தையின் பரிணாமமும்,

(ங). இரஜ்ஜுவை உபாதியாகவுடைய சைதன்னியத்தின் விவர்த்தமுமாம்; பரிணாம(விகார)மன்று.

சித்தாந்தம் :-(க) அதுபோலப் பிரஹ்மசைதன்னியத்தின் ஆசிரிதமாயிருக்கும் *கரு. மூலா

---

*கச. கடமுதலிய உபாதிகளையுடைய சைதன்னியத்தை ஆவரணஞ்செய்யும் அவித்தை **தூலாவித்தை**.

*கரு. சுத்தப்பிரஹ்மத்தையும் ஆத்மாவையும் ஆவரணஞ் செய்யும் அவித்தை **மூலாவித்தை**.

வித்தை, பிராரப்தமுதலிய நிமித்தத்தால் *கசு. க்ஷோபத்தை அடைந்து, ஜடசேதன(சிதாபாச) ப்பிரபஞ்சமாகிய விகாரத்தை அடைகின்றது.

(உ) அந்தப் பிரபஞ்சம் அவித்தையின் *கஎ. பரிணாமமும்,

(ங) *கஅ. அதிஷ்டானப்பிரஹ்மசைதன்னி

*கசு. காரியமாதற்கு எதிர்ப்படுதலே(காரியாபிமுகாவஸ்தையை)க்ஷோப மென்பர்.

*கஎ. க. முன் உருவத்தை விட்டு வேற்றுருவத்தை அடைதல் பரிணாமம்.

உ. அல்லது உபாதானத்தின் சமானசத்தையுடைய வேற்றுருவம்(உபாதானத்தினும் வேறுவிதமாகிய வடிவம்)பரிணாமமாம் ; பாலின் பரிணாமமாகிய தயிர் போல. இதனையே விகார மென்றும் கூறுவர்.

*கஅ. எது தான் நிருவிகாரவடிவமா யிருந்துகொண்டு, அவித்தையினாலாகிய கற்பிதகாரியத்திற்கு ஆசிரய மாகின்றதோ, அது அதிஷ்டானமாம் ; கற்பிதசர்ப்பத்திற்கு அதிஷ்டானமாகிய இரச்சுபோல. இதனையே பரிணாமியுபாதானத்திற்கு விலக்ஷணமாகிய விவர்த்தஉபாதான மென்றும் கூறுவர்.

பிரஹ்மமே சகலத்திற்கும் அதிஷ்டானம், அந்தப் பிரஹ்மசைதன்னியத்தின் விவர்த்தமே இவ்வுலகு என்பதற்கு.

யத்தின் *கக. விவர்த்தமுமாம்; பரிணாமமன்று.

இவ்வாறு இரஜ்ஜுவில் கற்பிதமாகிய சர்ப்ப திருஷ்டாந்தத்தால் விகாரப்பிராந்தியின் நிவிருத்தியுண்டாகின்றது.

கஙங. வினா:—ரு. கனகத்தில் குண்டலந்தோற்

"सर्वाधिष्ठानमद्वंद्वं परं ब्रह्म सनातनम् ।
सच्चिदानंदरूपं तदवाङ्मानसगोचरम् ॥

சர்வத்திற்குமதிஷ்டானமும், துவந்துவமில்லாததும், பரப்பிரஹ்மமும், சநாதனமும், சச்சிதாநந்தமுமாகிய அது வாக்குமனதிற் கெட்டாததாம்." என்னும் **அந்நபூர்ணோபநிஷத்தும்,**

"चिद्विवर्तजगतोस्य कारणं तत्सदाहमिति मौनमाश्रय ।

சித்தின் விவர்த்தமான இச்சகத்திற்குக் காரணமான அந்தப் பிரஹ்மம் எப்போதும் யான் என்று மௌனத்தை ஆசிரயஞ்செய்." என்னும் **வராகோபநிஷத்**தும் பிரமாணமாதல் காண்க.

*கக. அதிஷ்டானத்தினும் விஷமசத்தை(அற்பமும் பின்னமுமாகிய சத்தை)யுடைய அந்நியதாரூபம் (வேறுவிதமாகிய வடிவம்)**விவர்த்த**மாம்; இரஜ்ஜுவின் விவர்த்தமாகிய சர்ப்பம்போல. இதனையே **கற்பிதகாரிய** மென்றும், **கற்பிதவிசேஷ** மென்றும் கூறுவர்.

றும் திருஷ்டாந்தத்தால் பிரஹ்மத்திற்கு வேறு கிய ஜகத்தினது சத்தியத்தன்மையின் பிராந்தி எப்படி நிவிருத்தியாகும் ?

விடை:-(க) கனகத்திற்கும் குண்டலத்திற்கும் காரியகாரணத்தன்மையால் தோற்றும் பேதம் கற்பிதமாம் ;

(உ) கனகத்திற்கு வேறாகக் குண்டலத்தின் சொரூபம் காணப்படாமையால்.

(ங) வாஸ்தவ அபேத மிருக்கிறது.

(ச) அதனால் கனகத்திற்கு வேறாகக் குண்டலத்திற்குச் சத்தை யில்லை.

சித்தாந்தம்:-(க) *உ0. அதுபோலப் பிரஹ்

*உ0. காரணத்தைவிடக்காரியம் வேறாகாமையால் காரணமாகிய பிரஹ்மத்திற்கு வேறாய்க் காரியவடிவ ஜகத்து சத்தியமா யில்லை. ஆதலால் ஜகத்து மித்தை என்பதனை பின்வரும் சுருதிகள் காட்டுமாறு காண்க.

" कारणाभिन्नरूपेण कार्यं कारणमेव हि ।
तद्रूपेण सदा सत्यं भेदेनोक्तिर्मृषा खलु ।
तच्च कारणमेकं हि न भिन्नं नोभयात्मकम् ।
भेदस्सर्वत्र मिथ्यैव धर्मादेरनिरूपणात् ।

மத்திற்கும் ஜகத்திற்கும் காரியகாரணத்தன்மை

---

अतश्च कारणं नित्यमेकमेवाद्वयं खलु ॥
अत्र कारणमद्वैतं शुद्धचैतन्यमेव हि ॥

காரணத்தினும் வேறுபட்ட வடிவமின்மையால் காரியம் காரணமேயா மென்பது பிரசித்தம்; அக்காரண வடிவத்தால் எப்போதும் சத்தியமா யிருக்கின்றது. பேதமாகக் கூறுதலோ நிச்சயமாகப் பொய்யாம். அக்காரணமும் ஒன்றே; பின்னமு மன்று; பின்னுபின்னமென்னும் இருவடிவமு மன்று. பேதம் எங்கும் மித்தையாம்; தர்மாதிகள் நிரூபிக்கப்படாமையால். ஆதலால் காரணமும் நிச்சயமாக நித்தியமான ஒரே அத்வயமாம். இங்குக் காரணமாகிய அத்வைதம் சுத்தசைதன்னியமேயா மென்பது பிரசித்தம்." இது பஞ்சப்பிரஹ்மோபநிஷத்து.

---

"येनाश्रुतँ श्रुतं भवत्यमतं मतमविज्ञातं विज्ञातमिति कथं नु भगवस्स आदेशो भवतीति ॥ यथा सोम्यैकेन मृत्पिण्डेन सर्वं मृण्मयं विज्ञातँ स्याद्वाचारंभणं विकारो नामधेयं मृत्तिकेत्येव सत्यम् ॥ यथा सोम्यैकेन लोहमणिना सर्वं लोहमयं विज्ञातं स्याद्वाचारंभणं विकारो नामधेयं लोहमित्येव सत्यम् ॥ यथा सोम्यैकेन नखनि-

யினாலும் விசேஷணத்தினாலும் தோற்றும்பேதம் கற்பிதமாம்.

---

कृन्तनेन सर्वं कार्ष्णायसं विज्ञातँ स्याद्वाचारंभणं विकारो नामधेयं कृष्णायसमित्येव सत्यमेवँ सोम्य स आदेशो भवति. ॥

எதனால் கேட்கப்படாதது கேட்கப்பட்டதாகின்றதோ, மனனஞ்செய்யப்படாதது மனனஞ்செய்யப்பட்டதாகின்றதோ, அறியப்படாததறியப்பட்டதாகின்றதோ, என்பதாம். பகவானே! அவ்வுபதேசம் எவ்வாறுமெனச் சௌமியனே! எப்படி ஒருமண்திரளால் எல்லாம் மண்வடிவமாய் அறியப்பட்டதாமோ, கடமுதலிய நாமதேயம் வாக்கின் செய்கையான விகாரமாமோ, மண்மாத்திரம் சத்தியமாமோ, எப்படிச் சௌமியனே! ஒரே உலோகமணியினால் யாவும் உலோகமயமாக அறியப்பட்டதாமோ, மணிமுதலிய நாமதேயம் வாக்கின்செய்கையான விகாரமாமோ, உலோகமே சத்தியமாமோ, எப்படி ஒரு நகம் வெட்டும் கத்தி(இரும்புமயமாய்) அறியப்பட்டதாயின், யாவும் இரும்புமயமாக அறியப்பட்டதாமோ, கத்திமுதலிய நாமதேயம் வாக்கின்செய்கையான விகாரமாமோ, இரும்பே சத்தியமாமோ, அது போலச் சௌமியனே! அவ்வுபதேசமாகின்றது அதாவது ஒரு நாமரூபவடிவ வஸ்து காரணமாகிய சத்துவடிவமென் றறிதலினால் சகல ஜகத்தும் சத்துவடிவாய் அறியப்பட்டதாம். ஜகத்து

(உ) விசாரித்துப்பார்க்குமிடத்து அஸ்தி பாதிப்பிரிய(சச்சிதாநந்த)த்திற்கு வேருக நாமரூப ஜகத்துச் சத்தியமாகச் சித்திக்கிறதில்லை. ஆனல் மித்தையாகச் சித்திக்கிறது. எந்தவஸ்து எதிற் கற்பிதமாமோ, அந்த வஸ்து அதனினும் வேருகச் சித்திக்கிறதில்லை.

---

நாமதேயமான வாக்கின் செய்கையாகிய விகாரமாம். சத்தாகிய பிரஹ்மமே சத்தியமாம்." என்பது **சாந்தோக்கியம் ஆறவது பிரபாடகத்தின் முதல் கண்டமாம்.**

" ब्रह्मव्यतिरिक्तं सर्वं नश्वरम् ॥

பிரஹ்மத்திற் கந்நியமான யாவும் அசத்தியம்." என்பது **நாரதபரிவிராஜகோபநிஷத்து.**

" यथा पश्यति चात्मानं केवलं परमार्थतः ।
मायामात्रं जगत्कृत्स्नं सदा भवति निर्वृतिः ॥

எப்போது பரமார்த்தமாக ஜகத்து முழுவதையும் மாயாமாத்திரமாகவும் ஆத்மாவைக் கேவலமாகவும் அறிகின்ருனே, அப்போது சுக முண்டாகின்றது." என்பது **தர்சனேபநிஷத்து** பத்தாவது கண்டம்.

(ங) ஆகையால் பிரஹ்மத்திற்கும் ஜகத்திற்கும் வாஸ்தவ அபேத முண்டு.

(ச) அதனுல் ஜகத்திற்குப் பிரஹ்மத்தினும் வேருகிய சத்தை யில்லை.

இவ்வாறு கனகத்தில் குண்டலந்தோற்றும் திருஷ்டாந்தத்தால் பிரஹ்மத்திற்குப் பின்னமாகிய ஜகத்தின் சத்தியத்துவப்பிராந்தி நிவர்த்தியாகின்றது.

கஙச. வின:-பிராந்தி யென்பது யாது?

விடை:-பிராந்தி யென்பது அத்தியாசமாம்.

கஙரு. வின:-அத்தியாச மென்பது யாது?

விடை:-பிராந்தி(மயக்க)ஞானத்திற்கு விஷயமாகிய மித்தியாவஸ்துவிற்கும், பிராந்திஞானத்திற்கும் அத்தியாச மென்று பெயராம்.

கஙசூ. வின:-அந்த அத்தியாசம் எத்தனை விதமாம்?

விடை:-ஞானுத்தியாசம் அர்த்தாத்தியாசமென்னும் பேதத்தால் அத்தியாசம் இரண்டுவிதமா

ம். அவற்றுள், அர்த்தாத்தியாசமானது *உக. கேவலசம்பந்தாத்தியாசம், *உஉ. சம்பந்தசகித சம்பந்தியத்தியாசம், *உங. கேவல தர்மாத்தியா

---

*உக. வெள்ளியில் சுத்தியினது தாதாத்மியசம்பந்தத்தின் அத்தியாச முண்டாவதுபோல் அநாத்மாவில் ஆத்மாவின் அத்தியாசம் உண்டாகின்றது. அநாத்மாவில் ஆத்மாவின் தாதாத்மியசம்பந்தம் அத்தியஸ்தமாகின்றது. ஆத்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாகிறதில்லை. ஆகையால் அநாத்மாவில் ஆத்மாவின் **கேவலசம்பந்தாத்தியாச** முண்டாகின்றது.

*உஉ. சுத்தியில் வெள்ளியின் சம்பந்தமும் அதன் சொரூபமுமாகிய இரண்டும் அத்தியஸ்தமாவதுபோல ஆத்மாவில் அநாத்மாவின் சம்பந்தமும் சொரூபமுமாகிய இரண்டும் அத்தியஸ்தமாகின்றன; ஆகையால் ஆத்மாவில் அநாத்மாவின் **சம்பந்தசகிதசம்பந்தியினத்தியாச** முண்டாகின்றது.

*உங. படிகத்தில் சிவப்பு கருப்பு முதலிய தர்மமாத்திரம் சிவப்புப்படிக முதலியனவாக அத்தியஸ்தமாவதுபோல யான் வெள்ளையன், குருடன், செவிடன் முதலியவடிவாக ஸ்தூலதேகத்தின் வெண்மைமுதலியனவும் இந்திரியங்களின் பார்வைமுதலியனவுமாகிய தர்மங்கள்மாத்திரம் ஆத்மாவில் அத்தியஸ்தமாகின்றன; அவற்றின் சொரூபம் அத்தியஸ்தமாகிறதில்லை. ஆகையால் ஆத்மாவில் தேகேந்திரியங்களது **கேவலதர்மத்தினத்தியாச** முண்டாகின்றது.

சம், *உச. தர்மசகிததர்மியத்தியாசம், *உரு. அந்நியோந்நியாத்தியாசம், *உசா. அந்நியதராத்தியாசம் என்னும் பேதத்தால் ஆறுவிதமாம். அல்லது *உஎ. சொரூபாத்தியாசம், *உஅ. சம்சர்க்கா

---

*உச. சுத்தியில் வெள்ளித்தன்மைத்தருமமும் அவ்வெள்ளியின் சொரூபமும் இரண்டும் அத்தியஸ்தமாவதுபோல, அந்தக்கரணத்தின் கருத்திருத்துவாதி தர்மங்களும் அவ்வந்தக்கரணத்தின் சொரூபமுமாகிய இரண்டும் ஆத்மாவில் அத்தியஸ்தமாகின்றன. ஆகையால் ஆத்மாவில் அந்தக்கரணத்தின் **தர்மசகிததர்மியின் அத்தியாச** முண்டாகின்றது.

*உரு. இரும்பும் அக்கினியும்போல, ஆத்மாவில் அநாத்மாவின் அத்தியாசமும் அநாத்மாவில் ஆத்மாவின் அத்தியாசமும் இருத்தல் **அந்நியோந்நியாத்தியாசமாம்.**

*உசா. அநாத்மாவில் ஆத்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாகாது. ஆனால் ஆத்மாவில் அநாத்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாம். இதுவே **அந்நியதராத்தியாசமாம்.** இரண்டில் ஒன்றன் அத்தியாசம் **அந்நியதராத்தியாச** மெனப்படும்.

*உஎ. ஞானத்தினால் பாதமாகத்தக்க வஸ்து அதிஷ்டானத்தில் சொரூபமாக அத்தியஸ்தமாகின்றது. தேகாதி அநாத்மாவிற்கு அதிஷ்டானஞானத்தால் பாதமுண்டாகின்றமையால் ஆத்மாவில் அதன் **சொருபாத்தியாச** முண்டாகின்றது.

*உஅ. பாதிக்கத்தகாத வஸ்துவின் சொரூபம் அத்

த்தியாசம் என்னும் பேதத்தால் அர்த்தாத்தியாச
ம் இரண்டுவகைப்படும்.

க. முன்சொல்லப்பட்ட ஆறுபேதங்களும் இ
தில் *உக. அடங்கும்.

---

தியஸ்தமாகாது. ஆனால் அதன் சம்பந்தம் அத்தியஸ்
தமாகும். ஆகையால் அநாத்மாவில் ஆத்மாவின் **சம்
சர்க்காத்தியாச** முண்டாகின்றது. இதனையே **சம்பந்
தாத்தியாச** மென்றும் கூறுவர்.

*உக. கேவலதர்மாத்தியாசம், தர்மசகிததர்மியி
னத்தியாசம், அந்நியதராத்தியாசம் என்னு மிம்மூன்
றும் சொரூபாத்தியாசத்தி லடங்கும். கேவலசம்பந்
தாத்தியாசம், சம்சர்க்காத்தியாசமேயாகும். சம்பந்த
சகிதசம்பந்தியினத்தியாசம், சம்சர்க்காத்தியாசசகித
சொரூபாத்தியாசமாம். அந்நியோந்நியாத்தியாசத்தி
ல் சம்சர்க்காத்தியாசம் சொரூபாத்தியாச மென்னு
மிரண்டு முண்டு. ஏனெனின், ஆத்மாவின் சொரூபம்
சத்திய மாகையால் அஃது அத்தியஸ்தமாகாது. ஆ
னால் அதன் சம்சர்க்க மெனப்படும் தாதாத்மியசம்பந்
தம் அநாத்மாவில் அத்தியஸ்தமாம். ஆகையால் அத
ன் **சம்சர்க்காத்தியாச** முண்டாகின்றது. அநாத்மா
வின் சொரூபமே ஆத்மாவில் அத்தியஸ்தமாகின்ற
மையால், அதன் **சொரூபாத்தியாச** முண்டாகின்றது.

அதனால் அந்நியோந்நியாத்தியாசம் இவ்விரண்டி
லுமடங்கும்.

உ. மேலெழுதப்பட்டுள்ள பேதப்பிராந்திமுதலிய ஐவகைப்பிராந்தியும் இதனுள் *ஙூo. அடங்கும்.

ங. இனி அடுத்துச்சொல்லப்படும் ஆத்மாநாத்மாக்களினது விசேஷணங்களின் அந்நியோந்நியாத்தியாசமும் இதிற்றனே அடங்கும். அஃது அதன் டிப்பணத்தில்(விளக்கவுரையில்)காட்டப்படும்.

கஙஎ. வினு:-அகங்காராதி அநாத்மாக்களேயும், ஆத்மாவையும் அறிவதில் விசேஷ உபயோகமுள்ள அத்தியாச மெது?

விடை :-அந்நியோந்நியாத்தியாசமாம்.

கஙஅ. வினு :-அந்நியோந்நியாத்தியாசமென்பது யாது?

விடை--பரஸ்பரத்தில் பரஸ்பரத்தின்(ஒன்றி

---

*ஙூo. முன்னெழுதப்பட்டுள்ள பேதப்பிராந்தி முதலிய ஐவகைப்பிராந்திகளில் சங்கப்பிராந்திநீங்கிய மற்ற நால்வகைப்பிராந்தியும் சொரூபாத்தியாசத்திலடங்கும். ஐந்தாவது சங்கப்பிராந்தி சம்சர்க்காத்தியாசத்தி லடங்கும்.

ல் ஒன்றன்) அத்தியாசத்திற்கு *நக. அந்நியோந்நியாத்தியாச மென்று பெயர்.

கந௬கூ. வி௵:—ஆத்மாநாத்மாக்களுக்குப் பரஸ்பரம் (ஒன்றற்கொன்று) எப்படி அத்தியாசமுண்டாகிறது?

*நக. இங்கே சகல அத்தியாசங்களினது சொருபத்தையும் உதாரணத்தையும் விரியுமென் றஞ்சி விசேஷமாய் எழுதாமல் சம்க்ஷேப (சுருக்க) மாய் எழுதியிருக்கிறோம். அவற்றை விசேஷமாய் அறிய விரும்புவோர் விருத்திப்பிரபாகரகிரந்தத்திற் காண்க. ஆனல் அந்நியோந்நியாத்தியாசத்தின் சொருபம், விசேஷ உபயோகமுள்ளதென் றறிந்து ஸ்பஷ்டமா(தெளிவா)ய்க் காட்டப்பட்டிருக்கின்றது. அதில் (க) அநாத்மாவின் தர்மமாகிய துக்கமும் துவைதசகிதத்துவமும், ஆத்மாவின் ஆநந்தத்திலும் அத்வைதத்தன்மையிலும் சொருபமாக அத்தியஸ்தமாய், அவற்றை மறைக்கின்றன.

(உ) ஆத்மாவின் தர்மமாகிய சத்தும் சித்தும் அநாத்மாவின் அசத்துவத்திலும் ஜடத்துவத்திலும் சம்சர்க்க (சம்பந்த) வாயிலாக அத்தியஸ்தமாய், அவற்றை மறைக்கின்றன.

காரியசகித அஞ்ஞானத்தால் மறைக்கப்படுவது அதிஷ்டான மெனப்படும்.

இவ்வாறு ஆத்மாநாத்மாக்களின் அந்நியோந்நியாத்தியாசமாகிய இதுவும் சம்சர்க்காத்தியாச சொருபாத்தியாசங்களி லடங்கும்.

விடை :—க-ச. சத்து சித்து ஆநந்தம் அத்வைத தத்துவம் என்னு மிந்நான்கு விசேஷணங்களும் ஆத்மாவினுடையனவாம். க-ச. அசத்து ஜடம் துக்கம் துவைதசகிதத்துவம்(துவைதத்தோடுகூடிய தன்மை) என்னு மிந்நான்கு விசேஷணங்களும் அநாத்மாவினுடையனவாம். அவற்றுள்,

க-உ. துக்கம் துவைதசகிதத்துவம் என்னும் இவ்விரண்டு அநாத்மவிசேஷணங்களும் ஆத்மாவின் ஆநந்தத்தையும் அத்வைதத்துவத்தையும் மறைக்கின்றன. அதனால் ஆத்மாவில்,

(க) "நான் ஆநந்தரூபனும் அத்வைதரூபனுயு மிருக்கிறேன்." என்னும் ஞான முண்டாகாமல்,

(உ) "நான் துக்கியாயும் ஈசுவராதிகளினும் வேறாயு மிருக்கிறேன்." என்னும் ஞானம் உண்டாகிறது.

ரூ-ச. ஆத்மாவின் சத்து சித்து என்னும் இரண்டு விசேஷணங்களும் அநாத்மாவின் அசத்துவத்தையும் ஜடத்துவத்தையும் மறைக்கின்றன. அதனால் *ரூ-உ. அநாத்மாவாகிய அகங்காராதிகளில்,

---

*ரூஉ. "अनात्मा तु सजीवो वियदादिप्रपञ्चः ॥ அநாத்மாவோ ஜீவனோடு ஆகாயமுதலிய பிரபஞ்சமாம்." என்பது சர்வசாரோபநிஷத்து.

(க) "அசத்தாயும் ஜடரூபமாயு மிருக்கிறது." என்னும் ஞான முண்டாகாமல்,

(உ) " இருக்கிறது, விளங்குகிறது." என்னும் ஞான முண்டாகிறது.

இவ்வாறு ஆத்மாநாத்மாக்களுக்குப் *ஙங. பரஸ்பர அத்தியாச மிருக்கின்றது.

ஸ்ரீ விசாரசந்திரோதயம் ஆறுங்கலை
பிரபஞ்சமித்தியாவர்ணநம் என்பது
முடிந்தது.

---

*ஙங. பிரஹ்மஈசுவரர்களுக்கும் கூடஸ்தஜீவர்களுக்கும் உள்ள பரஸ்பர அத்தியாசம் மேல் பதினேழுவது கலையிற் சொல்லப்படும்.



# ஸ்ரீ விசாரசந்திரோதயம்.

## ஏழாங்கலை.

### ஆத்மாவின் விசேஷணம்.

ஆன்ம விசேடண மாமிரு வகையே
விதேய நிஷேத்திய மென்றவை யாவுங்
குரவ னூல்வழிக் குறைவற வுணரிற்
றனது நிஜவுரு தானே யாகுவன். (க)

சத்துச் சித்தா நந்தம் பிரமஞ்
சுவயம் பிரகாசங் கூடத்தன் சாக்கி
திருஷ்டா வுபதிருஷ்டா வொன்றென லாதிய
விதேய விசேஷண மெனவிவை கொள்ளே.()

அநந்த மகண்ட மசங்க மத்வய
வஜன்ம மவிகாரி யாகார மில்ல
தவ்வியக்த மப்பிர மேய மவ்யய
மக்கர மாதிய நிஷேத்திய மென்றோர். (௩)

கசo. வி௵ :-ஆத்மாவின் விசேஷணம் எத்தனை வகையாம்?

விடை:–*க. ஆத்மாவின் விசேஷணம் *உ. விதேயம்(சாக்ஷாத்போதகம்) *ங. நிஷேத்தியம்(பிரபஞ்சத்தின் நிஷேதவாயிலாக அறிவிப்பது) என்னும் பேதத்தால் இரண்டுவகையாம்.

---

*க. "अथ कस्मादुच्यते आत्मेति । यस्मात्सर्वमाप्नोति सर्वमादत्ते सर्वमत्ति च तस्मादुच्यते आत्मेति ॥

இனி எதனுல் ஆத்மா என்று சொல்லப்படுகின்றது? எதனுல் எல்லாவற்றையும் அடைகின்றதோ, எல்லாவற்றையும் கொள்ளுகின்றதோ, எல்லாவற்றையும் விழுங்குகின்றதோ, அதனுல் ஆத்மா வென்று சொல்லப்படுகின்றது." என்னும் சாண்டில்யோபநிஷந்து மூன்ருவது அத்யாயவாக்கியமும்,

"परमात्मेति च । देहादेः परतरत्वाद्ब्रह्मैव परमात्मा ॥

பரமாத்மா வென்றுமாம். ஆத்மா வெனப்படும்தேகாதிகளுக்கு மேலானதா யிருத்தலால் பிரஹ்மமே பரமாத்மா." என்னும் நிராலம்போபநிஷத்தும் பிரஹ்மத்தினையே ஆத்மா வென்று கூறுதல் காண்க.

*உ. சுமங்கிலி என்னும்சொல் அமங்கிலியாகிய ஸ்திரீயை நிஷேதித்து, சுவாசினி(நல்வாசமுள்ள)ஸ்திரீயை நேரே அறிவிப்பதா யிருத்தல்போல, "சத்து" முதலிய விதேயவிசேஷணங்கள் "அசத்து" முத

கசக. வி௵:-ஆத்மாவின் விதேயவிசேஷ்ணங்கள் எவை ?

விடை:-க. சத்து, உ. சித்து, ௩. ஆநந்தம், ச. பிரஹ்மம், ரு. சுயம்பிரகாசம், சு. கூடஸ்தர், எ. சாக்ஷி, அ. திருஷ்டா, கூ. உபதிருஷ்டா, கo. ஏகம் என்னு மிவைமுதலியன.

கசஉ. வி௵ :-ஆத்மா எப்படிச் சத்தாம் ?

---

லிய பிரபஞ்சத்தின் விசேஷணங்களை நிஷேதித்து, சத்துமுதலியவடிவினதாகிய பிரஹ்மத்தைநேரே அறிவிப்பனவா யிருக்கின்றன. ஆகையால் " **விதேய** " மெனப்படுகின்றன.

*௬. அவிதவை என்னும் சொல் விதவையாகிய ஸ்திரீயை நிஷேதித்து, அர்த்தத்தினுல் அவளுக்கு விலக்ஷணமாகிய சுவாசினி ஸ்திரீயை அறிவிப்பதா யிருத்தல்போல, அநந்தமுதலிய நிஷேத்தியவிசேஷணங்கள் அந்தமுதலிய பிரபஞ்சத்தின் தர்மங்களை நிஷேதித்து, அர்த்தத்தினுல் அவற்றிற்குவிலக்ஷணமாகிய பிரஹ்மத்தை அறிவிப்பனவா யிருக்கின்றன ஆகையால் "**நிஷேத்திய**" மெனப்படுகின்றன.

விடை :-க. *ச. ஞானத்தினாலேனும் மற்றொன்றினாலேனும் எதனது நிவிருத்தி யுண்டாகிறதில்லையோ, அது சத்து.

---

*ச. "सदितिश्रौतप्रीतिलक्ष्यं सत्यं । असदित्यवाच्यं सत्यं । त्रिकालाबाध्यं सत्यं । त्रिकालानुस्यूतं सत्यं । यदास्ति तत्सत्यं । एकमेवाद्वितीयं सत्यं । सजातिविजातिभेदरहितं सत्यं । सर्वकल्पनाधिष्ठानं सत्यम् ॥

சத்து அதாவது இருப்பது என்று கேட்கப்படும் உணர்ச்சிக்குலக்ஷியமாயுள்ளது சத்தியமாம். அல்லது அசத்து என்றுசொல்லக்கூடாததுசத்தியமாம். அல்லது மூன்றுகாலத்திலும் பாதிக்கப்படாதது அதாவது பொய் என்று நிச்சயிக்கப்படாதது சத்தியமாம். அல்லது மூன்றுகாலத்தும் கலந்திருப்பது அதாவது வியாபித்திருப்பது சத்தியமாம். அல்லது எது இருக்கிறதோ அது சத்தியமாம். அல்லது ஒரே அத்விதீயமாயுள்ளது சத்தியமாம். அல்லது சஜாதிவிஜாதி பேதமின்றியது சத்தியமாம். அல்லது சகல கற்பனைக்கும் அதிஷ்டானம் சத்தியமாம்." என்பதும்,

"सदेव तत्र ब्रह्म ॥

சத்தே அங்குப் பிரஹ்மமாம்." என்பதும்,

"ब्रह्मैवात्मा ज्ञेयः

ஆத்மா ஞானத்தினுலும் மற்றெதனுலும் நிவிருத்தியாகாமையால் சத்தாம்.

கசரு. வினு :-ஆத்மா எப்படிச் சித்தாம்?

விடை :-உ. *ரு. குன்ருத பிரகாசம் சித்து.

---

பிரஹ்மமே ஆத்மா வென்று அறியத்தக்கதாம்." என்பதுமாகிய சர்வசாரோபநிஷத்தும்,

" कालत्रयाबाधितं ब्रह्म सर्वकालाबाधितं ब्रह्म ॥

மூன்றுகாலத்திலும் பாதிக்கப்படாதது பிரஹ்மம். எக்காலத்திலும் பாதிக்கப்படாதது பிரஹ்மம்." என்னும் மகாநாராயணேபநிஷத்தும் சத்தின் இலக்கணத்தினையும் பிரஹ்மமாகிய ஆத்மாவே சத்து என்பதனையும் கூறுகின்றன.

*ரு. " तच्छुभ्रं ज्योतिषां ज्योतिः ॥

அது சுத்தமும் ஜோதிக்கெல்லாம் ஜோதியாயுமுள்ளது." என்னும் முண்டகசுருதியும்,

" स्वप्रकाशं ज्ञानं । सर्वप्रकाशकं ज्ञानं । निरावरणचिन्मात्रं ज्ञानं । अनाद्यनन्तं निरंतरमवृत्तिवृत्ति साक्षिचैतन्यमेव ज्ञानम् ॥

சுவப்பிரகாசம் ஞானமாம். எல்லாவற்றையும் பிரகாசிப்பது ஞானமாம். ஆவரணமின்றிய சின்மாத்தி

ஆத்மா குன்றுத பிரகாசவடிவமா யிருத்தலா ல் சித்தாம்.

கசசு. வினு:-ங. ஆத்மா எப்படி ஆநந்தமாம் ?

விடை:-*சு. பரம(எல்லாவற்றினுமதிக)ப் பி ரீதிக்கு எது விஷயமோ, அஃது ஆநந்தம். ஆத் மாவினிடத்தில் எல்லோருக்கும் பரமப்பிரீதி யி ருத்தலால், அஃது ஆநந்தமாம்.

---

ரம் ஞானமாம். அநாதி அநந்தமாய் நிரந்தரம் விரு த்தி யின்றியவிடத்திருக்கும் சாக்ஷிசைதன்னியமே ஞானமாம்.'' என்னும் சர்வசாரோபநிஷத்தும் ஆத் மாவின் சித்துவடிவத்திற்கு இலக்கணம் கூறுதல் கா ண்க.

*சு. "अहमेव सुखं नान्यदन्यच्चेन्नैव तत्सुखं। अमदर्थं न हि प्रेयो मदर्थं न स्वतः प्रियं। परप्रेमास्पदतया मानभूवमहँ सदा। भूयासमिति यो दृष्टस्सोहं विष्णुर्मुनीश्वर ॥

யானே ஆநந்தம்; பிறிதல்லன்; பிறிதாயின், அது சுகமே யன்று. பிரியம் என்பொருட்டாகாத தன்று; என்பொருட்டு மன்று; தானே பிரியமாம். முநீசுவர ரே! மேலான பிரியத்திற்கு விஷயமாந்தன்மையால் 'நான் இல்லாதிருக்கலாகாது, எப்போது மிருக்கவே ண்டும்' என்று எதுகாணப்படுகின்றதோ அந்த நான்

கசரு. வினு:—ஆத்மா எப்படிப் பிரஹ்மரூபமாம்?

விடை:—ச. (க) *எ. ஆத்மா சச்சிதாநந்த வடிவமென்பது சுருதியுக்திஅநுபவங்களால் சித்திக்கின்றது.

---

விஷ்ணு." என்னும் வராகோபநிஷத்து ஆநந்தத்தினிலக்கணத்தையும் ஆநந்தமே ஆத்மா வென்பதனையும் காட்டியது.

" अंभसामर्णव इव सुखचेतनानामधिष्ठाननित्यशु-द्धाखण्डाद्वैतचिदानन्दैकरसमानन्दम् ॥

நீர்களுக்குச் சமுத்திரம்போலச் சுகசேதனங்களுக்கு அதிஷ்டானமான நித்தியசுத்தஅகண்டாத்வைதசிதாநந்தைகரஸம் ஆநந்தமாம்." என்பது சர்வசாரோபநிஷத்து.

*எ. " आत्मसंज्ञश्शिवश्शुद्ध एक एवाद्वयस्सदा ।
ब्रह्मरूपतया ब्रह्म केवलं प्रतिभासते ॥

ஆத்மா வென்னும் பெயருள்ள ஒரே அத்வயமான சுத்தசிவம் எப்போதும் பிரஹ்மவடிவத்தன்மையால் கேவலம் பிரஹ்மமாகத் தோற்றுகின்றது." என்னும் ஆத்மோபநிஷத்து ஆத்மாபிரஹ்மவடிவ மென்று கூறுகின்றது.

(உ) பிரஹ்மமும் சாஸ்திரங்(உபநிஷத்துக்)களில் சச்சிதாநந்தவடிவமெனச் சொல்லப்பட்டிருக்கின்றது.

---

" महदहंकारपृथिव्यप्तेजोवायुराकाशात्मकत्वेन बृहद्रूपेणांडकोशेन कर्मज्ञानार्थरूपतया भासमानमद्वितीयमखिलोपाधिविनिर्मुक्तं तत्सकलशक्त्युपबृंहितमनाद्यन्तं नित्यंशुद्धं शिवं शान्तं निर्गुणमित्यादिवाच्यमनिर्वाच्यं चैतन्यं ब्रह्म ॥

மகத்து அகங்காரம் பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயவடிவத்தன்மையாகிய பெருத்தவடிவமான அண்டகோசமாகக் கர்மஞானார்த்தரூபத்தன்மையால் விளங்கும் அத்விதீயமும், சகலவுபாதிகளினின்று விடுபட்டதும், அவ்வெல்லா சக்திகளோடு கூடியதும், ஆதியந்தமில்லாததும், நித்தியம் சுத்தம் சிவம் சாந்தம் நிர்க்குணம் என்னும் இவைமுதலிய வாசகப்பொருளும் வாசகப்பொருளல்லாததுமான சைதன்னியம் பிரஹ்மமாம்." என்னும் நிராலம்போபநிஷத்தும்,

" सर्वोपाधिविनिर्मुक्तं निर्विशेषचिन्मात्रं सदद्वैतमानन्दममायं ब्रह्म ॥

அதனால் ஆத்மா பிரஹ்மவடிவமாம்.

---

சகலோபாதிகளினின்று விடுபட்டதும், நிர்விசேஷமும், சின்மாத்திரமும் சத்தும் அத்வைதமும் ஆநந்தமும் மாயையில்லாததுமாயுள்ளது பிரஹ்மம்."

"ब्रह्मैवात्मा ज्ञेयः ॥

பிரஹ்மமே ஆத்மா வென்றறியத்தக்கதாம்." என்னும் சர்வசாரோபநிஷத்தும்,

"यस्माच्च बृहति बृंहयति च सर्वं तस्मादुच्यते परं ब्रह्मेति ॥

எதனால் பெரிதாகின்றதோ எல்லாவற்றையும் பெரிதாக்குகின்றதோ அதனால் மேலான பிரஹ்ம மென்று சொல்லப்படுகின்றது." என்னும் சாண்டில்யோபநிஷத்தும்,

"सच्चिदानन्दस्वप्रकाशं ब्रह्म । देशतः कालतो वस्तुतः परिच्छेदरहितं ब्रह्म । सर्वपरिपूर्णं ब्रह्म ॥

"சச்சிதாநந்தசொப்பிரகாசம் பிரஹ்மம்." "தேசத்தினாலும் காலத்தினாலும் வஸ்துவினாலும் பரிச்சேதமில்லாதது பிரஹ்மம்." "சர்வபரிபூர்ணம் பிரஹ்மம்." என்னும் மகாநாராயணோபநிஷத்தும் பிரஹ்மத்தினிலக்கணம் கூறுகின்றன.

அல்லது பிரஹ்ம மென்பது வியாபகத்திற்காம். எதற்குத் தேசத்தினுல் அந்த மில்லையோ, அது வியாபக மெனப்படும்.

(க) ஆத்மா பிரஹ்மத்தினும் வேறு யிருக்குமாயின், தேசத்தினுல் அந்தமுடையதாகும்.

(உ) எதற்குத் தேசத்தினு லந்தம் உண்டாகிறதோ, அதற்குக் காலத்தினுலும் அந்தமுண்டாகு மென்பது நியமம்.

எதற்குத் தேசகாலங்களினுல் அந்த முண்டாகிறதோ, அஃது அநித்திய மெனப்படும். அதனுல் ஆத்மா அநித்தியமாகும். ஆகையால் ஆத்மா பிரஹ்மத்தினும் வேறன்று.

(க) அன்றியும் பிரஹ்மம் ஆத்மாவினும் வேறு யிருக்குமாயின் அஃது அநாத்மாவாகும்.

(உ) அநாத்மாவாகிய கடமுதலியவைகள் ஜடமாகையால், ஆத்மாவினும் வேருகிய பிரஹ்மம் ஜடமாகும்.

இவ்வார்த்தை சுருதிக்கு விரோதமாம்.

ஆகையால் ஆத்மாவிற்கு வேருகப் பிரஹ்மமில்லை. அதனுல் ஆத்மா பிரஹ்மவடிவமாம்.

௧௪௬. வினா:—ஆத்மா எப்படிச் சுயம்பிரகாசமாம்?

விடை:—ரு. (௧) எது தீபத்தைப்போலத் தனது பிரகாசத்தில் ஒன்றையும் அபேக்ஷியாது,

(௨) தான் எல்லாவற்றையும் பிரகாசிக்கிறதாயிருக்கிறதோ, அது சுயம்பிரகாச மெனப்படும்.

இப்படி யிருப்பது ஆத்மாதான். ஆகையால் *அ. ஆத்மா சுயம்பிரகாசமாம்.

அல்லது,

(௧) எது எப்போதும் அபரோக்ஷவடிவமாய்,

(௨) எந்த ஞானத்திற்கும் விஷயமாகாதிருக்கின்றதோ,

---

*அ. ஆத்மா சுவயம்பிரகாச மென்பதனை

"स्वयंप्रकाशमात्मानं नैव मां स्प्रष्टुमर्हति ।

சுவயம்பிரகாச ஆத்மாவாகிய என்னை ஸ்பரிசித்தற் குரிய தன்று." என்று வராகோபநிஷத்தும்,

"स्वयंप्रभस्सर्वगतोऽहमव्ययः ॥

சுவயம்பிரபையும் எல்லாவற்றின்கண்ணுள்ளதுமான நான் அவ்வியயன்." என்று முக்திகோபநிஷத்தும், மற்றுமுள்ள சர்வசார பிருகதாரணியக கடவல்யாதி சுருதிகளும் கூறுகின்றன.

அது சுயம்பிரகாசமெனப்படும். ஆத்மா எப்போதும் அபரோக்ஷவடிவமாயும் பிரகாசவடிவமாயு மிருத்தலால், எந்த ஞானத்திற்கும் விஷயமாகாததா யிருக்கின்றது. ஆகையால் அது சுயம் பிரகாசமாம்.

கசஎ. வி௵:—ஆத்மா எப்படிக் கூடஸ்தராம்?

விடை :—கூ. கூட மென்பது கொல்லனது சம்மட்டிக்காம். அதைப்போல நிருவிகாரவடிவமாயிருப்பது கூடஸ்த ரெனப்படும்.

கொல்லன் அநேக அடிகளை அடித்தபோதிலும், சம்மட்டி எப்படியோ அப்படியே(நிருவிகாரமா)யிருத்தல்போல, மனமாகிய கொல்லன் வியவகாரமாகிய அநேக அடிகளை அடித்தபோதிலும், ஆத்மா எப்படியோ அப்படியே(நிருவிகாரமா)யிருக்கிறது. ஆகையால் *கூ. ஆத்மா கூடஸ்தராம்.

---

*கூ. "नित्यस्सर्वगतो ह्यात्मा कूटस्थो दोषवर्जितः
நித்தியமும் எல்லாவற்றினிருப்பதுமான ஆத்மா தோஷமின்றிய கூடஸ்தனும்." என்னும் அந்நபூர்ணோபநிஷத்தும்,

"ब्रह्मादिपिपीलिकान्तसर्वप्राणिबुद्धिष्वविशिष्टतयोपलभ्यमानस्सर्वप्राणिबुद्धिसाक्ष्यधिष्ठानात्मास्ति भासते च स कूटस्थः ॥

கூடஸ்தரென்று சொல்லுதலால் அசலம் அக்கிரியம்(செயலற்றது)என்பதும் அர்த்தத்தினல் சித்தித்தது.

கச௮. வினு :—ஆத்மா எப்படிச் சாக்ஷியாம்?

விடை :— எ. (க) உலகவியவகாரத்தில் [க] உதாசீனமா(இராகத்துவேஷமில்லாததா)ய்ச் [உ] சமீபத்திலிருக்கும் [௩] சேதனன் சாக்ஷி யெனப்படுவன்.

ஆத்மா, [க] தேகாதிகளோடு உதாசீனமாய்ச் [உ] சமீபத்திலிருக்கும் [௩] சேதன(அஜடப்பிரகாச)மா யிருத்தலால் சாக்ஷியாம்.

(உ) அல்லது அந்தக்கரணமாகிய உபாதியை யுடைய சேதனம் சாக்ஷி யெனப்படும்.

(௩) அல்லது அந்தக்கரணத்திலும் அந்தக்கரணவிருத்தியிலு மிருக்கும் சேதனமாத்திரம்(சே

---

பிரஹ்மாமுதல் எறும்புகடையான சகலப்பிராணிகளது புத்தியிலும் விசிஷ்டமின்றியதன்மையாய் அறியப்படுகின்ற சர்வப்பிராணிகளது புத்திக்கும் சாக்ஷியான அதிஷ்டானுத்மா இருக்கின்றது; விளங்குகின்றது. அது கூடஸ்தனும்." என்னும் சர்வசாரோபநிஷத்தும் ஆத்மா கூடஸ்த னென்று அறிவிக்கின்றன.

வலசேதனம்)சாக்ஷி யெனப்படும். ஆத்மா இப்ப டி யிருக்கின்றது. ஆகையால் அது *க0. சாக்ஷி யாம்.

கசசு. வி௵:-ஆத்மா திருஷ்டா வென்பது எ ப்படி?

விடை:-அ. பார்க்கிறவன் எவனோ அவன் தி ருஷ்டா வெனப்படுவன். ஆத்மா சகல திருசியங் களையும் பார்க்கிறதா யிருத்தலால் *கக. திருஷ் டாவாம்.

கரு0. வி௵ :-ஆத்மா எப்படி உபதிருஷ்டா வாம்?

விடை :-கூ. (க) யாகசாலையில் யாககாரியங்க ளைச் செய்யும் இருத்துவிக்குகள் பதினைந்து பெ யர்.

---

*க0. "ज्ञातृज्ञानज्ञेयादावाविर्भावतिरोभावज्ञाता स्वयं तदाविर्भावतिरोभावरहितः स्वयंज्योतिश्चेतनस्साक्षी ॥ அறிபவன் அறிவு அறியப்படுபொருள் முதலியவ ற்றின் உற்பத்திநாசங்களை அறிவதாய்த் தான் அவ்வு ற்பத்திநாசங்களின்றியதாய்ச் சுயஞ்சோதியாயுள்ள சேதனம் எதுவோ அது சாக்ஷியாம்." என்னும் **சர்வ சாரோபநிஷத்து** ஆத்மா சாக்ஷியாதலை அறிவிக்கின் றது.

*கக. திருஷ்டா = அறிபவன்.

(உ) பதினாறாவது எஜமானன்.

(௩) பதினேழாவது எஜமானனுடைய மனேவி.

(௪) பதினெட்டாவது உபதிருஷ்டா (சமீபத்தில் உட்கார்ந்துகொண்டு பார்க்கிறவன்); அவன் ஒரு காரியமும் செய்கிறதில்லை.

அதுபோல,

(க) *கஉ. ஸ்தூலதேகமாகிய யஞ்ஞசாலையில் ஞானேந்திரியம் ஐந்து, கர்மேந்திரியம் ஐந்து, பிராணன் ஐந்து என்னு மிப்பதினைந்தும் இருத்துவிக்குகள்.

(உ) பதினாறாவது மனம் எஜமானன்.

(௩) பதினேழாவது புத்தி அவன் மனைவி.

(௪) இவையெல்லாம் தத்தம் விஷயங்களைக் கிரகித்தலாகிய போகாகார யாககாரியங்களைச் செய்கின்றன. இவை எல்லாவற்றையும் சமீபத்திலிருந்து பார்த்துக்கொண்டிருக்கும் ஆத்மா பதினெட்டாவது உபதிருஷ்டாவாம்.

---

*கஉ. சரீரமுதலியவற்றை யாகசாலைமுதலியனவாகக் கர்ப்போபநிஷத்தும் பிராணாக்கினிஹோத்திரவுபநிஷத்தும் கூறுகின்றன.

கருக. வினு :-ஆத்மா எப்படி ஏகமாம் ?

விடை :-க०. ஆத்மாவிற்குச் சஜாதீயமாகிய(இனமுள்ள)வேறு ஆத்மா இல்லாமையால் *கங. ஏகமாம்.

இவை முதலியன ஆத்மாவின் விதேயவிசேஷணங்கள்.

கருஉ. வினு :-ஆத்மாவின் நிஷேத்தியவிசேஷணங்கள் எவை ?

---

*கங. "एकं ब्रह्माहमस्मीति कृतकृत्यो भवेन्मुनिः ॥
ஒன்றுகிய பிரஹ்மம் நானென்று கிருதகிருத்தியனுகின்றுன் முனி."

"एकस्सन्भिद्यते भ्रांत्या मायया न स्वरूपतः ॥
ஆத்மா ஒன்றுயிருந்தும் பிராந்தியினுல் பேதப்படுகின்றது. அது மாயையினுலாம்; சொருபமாகப் பேதப்படுகிறதில்லை." என்னும் அந்நபூர்ணேபநிஷத் சுருதிகளும்,

"एकमेवाद्वितीयं ब्रह्म नेह नानास्ति किञ्चन ।
ஒரே அத்விதீயப்பிரஹ்ம முளது. இங்கு நானா வென்பது சிறிது மில்லை." என்னும் பிருகதாரணியகமுதலிய அநேகசுருதிகளும் ஆத்மா ஏக மென்பதில் பிரமாணமாம். அவற்றை விரிவஞ்சி விடுத்தனம்.

விடை:-க. அநந்தம், உ. அகண்டம், ௩. அசங்கம், ச. அத்துவிதீயம், ரு. அஜன்மம், சா. நிருவிகாரம், எ. நிராகாரம், அ. அவ்வியக்தம், கூ. அவ்வியயம், க௦. அக்ஷரம் என்னு மிவைமுதலியனவாம்.

கருௌ. வினு:-ஆத்மா எப்படி அநந்தமாம்?

விடை:-க. (க) ஆத்மா வியாபகமாயிருத்தலால் அதற்குத் தேசத்தினுலும் அந்த மில்லை.

(உ) நித்தியமா யிருத்தலால் காலத்தினுலும் அந்த மில்லை.

(௩) ஆத்மா அதிஷ்டானமா யிருத்தலால் எல்லாவற்றினது சொரூபமாம். அதனுல் அதற்கு வஸ்துவினுலும் அந்த மில்லை.

ஆத்மாவிற்குத் தேசகாலவஸ்துக்களால் அந்த (பரிச்சேத) மில்லாமையால் அஃது *கச. அநந்தமாம்.

---

*கச. "उत्पत्तिनाशरहितमनन्तं। षड्भावविकाररहितमनन्तं। सर्वोपाधिविनिर्मुक्तमनन्तं। मृद्विकारेषु मृदिव स्वर्णविकारेषु स्वर्णमिव तंतुविकारेषु तन्तुरिव अव्यक्ता-

கநிச. வினா :—ஆத்மா எப்படி அகண்டமாம்?

விடை :—உ. (க) ஆத்மா ஜீவேசுவரர்களின் பேதம், ஜீவர்களின் பரஸ்பரபேதம், ஜீவஜடங்களின் பேதம், ஜடஜடபேதம், ஜடஈசுவரர்களின் பேதம் என்னும் ஐந்து பேதங்களு மில்லாததா யிருக்கின்றது.

(உ) அல்லது சஜாதீய விஜாதீய சுவகதமென்னும் பேதங்களில்லாததா யிருக்கின்றது.

ஆகையால் அஃது(ஆத்மா)அகண்டமாம்.

---

दिसृष्टिप्रपञ्चेषु व्याप्य पूर्णमविनाशि चैतन्यमनन्तम् ॥

உற்பத்திநாசமின்றியது அநந்தமாம். ஷட்பாவவிகாரமின்றியது அநந்தமாம். சர்வோபாதிகளினீங்கியது அநந்தமாம். மண்ணின் விகார (காரிய) ங்களில் மண்ணைப்போலவும், பொன்னின் விகாரங்களில் பொன்னைப்போலவும், நூலின் விகாரங்களில் நூலினைப் போலவும் அவ்வியக்தமுதலான சிருஷ்டிப்பிரபஞ்சங்களில் வியாபித்துப் பூர்ணமாய் அவிநாசியாயுள்ள சைதந்நியம் அநந்தமாம்." என்பது **சர்வசாரோபநிஷத்து.** இவ்வாறே ஆத்மா அகண்டம் அத்துவிதீயமுதலியனவாமென்பதனைப் **பிருகதாரணியகம், முக்திகை, மகாநாராயணம், முத்கலம், வராக**முதலிய சுருதிகளில் காண்க.

கநு. வினு:—ஆத்மா எப்படி அசங்கமாம்?

விடை:—௩. சங்கமென்பது சம்பந்தத்திற்காம். அச்சம்பந்தம் (க) சஜாதீயம், (உ) விஜாதீயம், (௩) சுவகதமென மூன்றுவகையாம்.

(க) தன் ஜாதியுடையதோடுள்ள சம்பந்தம் சஜாதீயம்; பிராஹ்மணனுக்கு அந்நியப்பிராஹ்மணனேடுள்ளதுபோல.

(உ) அந்நியஜாதியுடையதோடுள்ள சம்பந்தம் விஜாதீயம்; பிராஹ்மணனுக்குச் சூத்திரனேடுள்ளதுபோல.

(௩) தன் அவயவ(அங்க)ங்களோடுள்ள சம்பந்தம் சுவகதம்; பிராஹ்மணனுக்குத் தனது அங்கமாகிய கைகால் முதலியவற்றேடுள்ளதுபோல.

(க) [க] ஆத்மா(சேதனம்)ஒன்றுயிருத்தலால் அதற்கு ஜாதி யில்லை. [உ] ஜீவன், ஈசுவரன், பிரஹ்மா, விஷ்ணு, சிவன், நான், நீ யென்னும் இவை முதலிய பேதங்கள் உபாதியினுலானவைகளா யிருத்தலால் மித்தையாம்.

ஆகையால் ஆத்மாவிற்கு எதனேடும் சஜாதீய சம்பந்தம் பொருந்தாது.

அதுபோல,

(உ) ஆத்மா அத்வைதமாயும் சத்தாயு மிருக்கின்றது. அதனினும் வேறாய்த் தோன்றும் மாயையு(அஞ்ஞானமு)ம் அதன் காரியமாகிய ஸ்தூலசூக்ஷ்மப்பிரபஞ்சமும் அசத்தாம். அசத்தென்பது ஓர் பதார்த்த மன்று. ஆகையால் ஆத்மாவிற்கு எதனோடும் விஜாதீயசம்பந்தம் பொருந்தாது.

(ரு) ஆத்மா நிரவயவமாம். சச்சிதாநந்த முதலியன ஆத்மாவின் அவயவங்க ளன்று. ஆனால் ஒரு வடிவமா யிருத்தலால் ஆத்மாவின் சொரூபமாம். அதனால் ஆத்மாவிற்குச் சுவகதசம்பந்தம் பொருந்தாது.

இவ்வாறு *கரு. ஆத்மா சகல சம்பந்தமு மில்லாததால் அசங்கமாம்.

---

*கரு. "असंगोऽहं पुरुषः ।

இப்புருஷன் அசங்கன்." என்பது பிருகதாரணியகோபநிஷத்து

"असंगो ह्ययमात्मा ।

இவ்வாத்மா அசங்கன்." என்பது நிருஸிம்ஹ உத்தரதாபினியுபநிஷத்து. இதில் மற்றும் அநேகசுருதிகள் பிரமாணமா யிருக்கின்றன.

கரு௬. வினா:—ஆத்மா எப்படி அத்வைதமாம்?

விடை :—௪. துவைதமாகிய பிரபஞ்சம் சொப்பனம் போலக் கற்பிதமா யிருத்தலால் வாஸ்தவமன்று. ஆகையால் ஆத்மா துவைதமில்லாததாயிருத்தலால் அத்வைதமாம்.

கருஎ. வினா :—ஆத்மா எப்படி அஜன்மமா(பிறப்பில்லாததா)ம் ?

விடை :—ரு. ஸ்தூலதேகத்தின் தர்மம் ஜன்மமாம். ஜன்மம் சூக்ஷ்மதேகத்தின் தர்மமே அல்லவென்றால் அஃது எப்படி ஆத்மாவின் தர்மமாகும்.

அன்றியும் ஆத்மாவிற்கு ஜன்மம் ஒப்புவோமாயின் மரணமும் ஒப்பவேண்டிவரும். அதனால் ஆத்மா அநித்திய மென்பது சித்திக்கும். அது பரலோகவாதிகளாகிய ஆஸ்திகர்களுக்கு அநிஷ்டமா(பிரியமில்லாததா)ம். ஏனெனின்,

(க) ஜனனமரணமுடைய வஸ்துவிற்கு ஆதியிலும் அந்தத்திலும் அபாவ முண்டு. அதனால் பூர்வஜன்மத்தில் ஆத்மா வில்லை; அதனது கர்மமும் இல்லை. அப்போது இந்த ஜன்மத்தில் ஆத்மாவிற்குக் கர்மமின்றிப் போக முண்டாகிறது மன்றி,

(உ) மரணத்திற்குப் பிறகு ஆத்மாவில்லாமை யால் ,இந்த ஜன்மத்திற் செய்யப்பட்ட கர்மத்திற்கு அநுபவமின்றி நாசமு முண்டாகும். அதனுல் வேதோக்ததர்மங்கள் வியர்த்தமாகும். ஆகையால் ஜன்மம் ஆத்மாவின் தர்மமன்று. அதனுல் ஆத்மா அஜன்மமாம். அஜன்மமென்றதனுல் அஜரம் அமர மென்பதும் அர்த்தத்தினுல் சித்தித்தது.

கருஅ. வினு:-ஆத்மா எப்படி நிருவிகாரமாம்?

விடை :-சு. குடத்திற்குப்(க) பிறப்பு,(உ) இருப்பு, (ங) வளர்ச்சி, (ச) பரிணுமம், (ரு) க்ஷயம், (சு) நாசம் என்னும் ஆறு தர்மங்க ளிருக்கின்றன. அவை குடத்திலிருக்கும் குடத்தின் வேருகிய ஆகாயத்தின் தர்மமன்று.

அதுபோல,

(க) "தேகம் பிறக்கிறது" என்பது பிறப்பு.

(உ) "தேகம் பிறந்திருக்கிறது" என்பது இருப்பு(முன்னில்லை; இப்போதிருக்கிறதுஎனல்).

(ங) "தேகம் பாலக னுயிற்று" என்பது வளர்ச்சி.

(ச) "தேகம் யௌவன மாயிற்று" என்பது பரிணுமம்.

(ரு) "தேகம் விருத்தமாயிற்று" என்பது க்ஷயம்.

(சு) "தேகம் மரண மடைந்தது" என்பது நாசம்.

இந்த ஆறு விகாரங்களும் தேகத்தின் தர்மங்களாம்; தேகத்தை அறிவதாய்த் தேகத்திற்கு வேறாயிருக்கும் ஆத்மாவின் தர்மமன்று. இப்படி ஆறுவிகாரங்களு மில்லாததாகிய ஆத்மா நிருவிகாரமாம்.

கருகூ. வினா :-ஆத்மா எப்படி நிராகாரமாம்.

விடை :-எ. (க) ஸ்தூலம், (உ) சூக்ஷ்மம், (ந) நீளம், (ச) குறுகல் என நான்குவிதமான வடிவங்கள் ஜகத்தி லுண்டு.

(க) ஆத்மா இந்திரியத்திற்கும் மனதிற்கும் விஷயமாகாததா யிருத்தலால் சூக்ஷ்மமாம்; அதனால் ஸ்தூல மன்று.

(உ) ஆத்மா வியாபகமா யிருத்தலால் சூக்ஷ்மம (அணுவ)ன்று.

(ந-ச) ஆத்மா எங்கும் ஓதப்புரோதமா(குறுக்கு நெடுக்கா)யிருத்தலால், நீளமும் குறுகலு மன்று.

ஆகையால் ஆத்மா நிராகாரமாம்.

கசுo. வி௫:-ஆத்மா எப்படி அவ்வியக்தமாகும் ?

விடை:-அ. ஆத்மா, மன இந்திரியாதிகளுக்கு அகோசரமா யிருத்தலால் அஸ்பஷ்டமா (வெளிப்படையில்லாததா)ம். ஆகையால் அஃது அவ்வியக்தமாம்.

கசுக. வி௫:-ஆத்மா எப்படி அவ்வியயமாம்?

விடை:-கூ. களஞ்சியத்தில் தானியத்தை எடுத்தலாலும் போடுதலாலும் தானியத்திற்கு வியயம் (குறைவு நிறைவு) உண்டாகின்றது. ஆத்மாவிற்கு அப்படி வியய முண்டாகாமையால் அவ்வியயமாம்.

கசுஉ. வி௫:-ஆத்மா எப்படி அக்ஷரமாம் ?

விடை:-கo. ஆத்மா க்ஷர (நாச) மில்லாததா யிருத்தலால் அக்ஷரமாம். இதையே அக்ஷய மென்றும், அமிருத மென்றும், அவிநாசி என்றும் கூறுவர். இவை முதலியன ஆத்மாவின் நிஷேத்திய விசேஷணங்கள்.

கசுரு. வி௫ :-இவ்வாத்மாவின் விசேஷணங்கள் எப்படிப் பரஸ்பரம் அபின்னமாம் ?

விடை:-சச்சிதாநந்தமுதலியன ஆத்மாவிற்குக் குணமா யிருக்குமாயின் பரஸ்பரம் பின்னமாம்.

இவை ஆத்மாவின் குணமாகாமல் சொரூபமா யிருக்கின்றன. ஆகையால் பரஸ்பரம் பின்னமாகா மல் அபின்னமாம்.

(க) ஒரே ஆத்மா நாசரகிதமா யிருத்தலால் சத் தென்றும்,

(உ) ஜடவிலக்ஷணமாகிய பிரகாசவடிவமா யி ருத்தலால் சித் தென்றும்,

(ந) துக்கத்திற்கு விலக்ஷணமாகிய முக்கியப் பிரியத்திற்கு விஷயமா யிருத்தலால் ஆநந்த மென் றும் சொல்லப்படுகின்றது.

இவ்வாறு சகல விசேஷணங்களிலு மறிக.

திருஷ்டாந்தம் :—ஒரே புருஷன் (க) பிதாவின் திருஷ்டியால் புத்திர னென்றும்,

(உ) பாட்டனது திருஷ்டியால் பேர னென்று ம்,

(ந) பிதாவின் சகோதரனது திருஷ்டியால் ச கோதரனது புத்திர னென்றும்,

(ச) மாமனது திருஷ்டியால் மருமக னென்று ம் சொல்லப்படுகிறான்.

ஒரே சன்னியாசி,

(க) பசு ஸ்திரீ கிருகஸ்தன் தண்டமில்லாதவன் என்னு மிவர்களது திருஷ்டியால் மனிதன் புருஷன் துறவி தண்டி என்னும் **விதேயவிசேஷணங்களாலும்,**

(உ) கடம் பாஷாணம் (கல்) விருக்ஷமுதலியவற்றின் திருஷ்டியால் அகடம் அபாஷாணம் அவிருக்ஷமுதலிய **நிஷேத்தியவிசேஷணங்களாலும்** சொல்லப்படுகிறுன்.

சித்தாந்தம்:—அதுபோல ஒரே ஆத்மா, பிரபஞ்சத்தின் விசேஷணமாகிய அசத்து ஜடம் துக்கம் அந்தம் கண்டம் சங்கமுதலியவற்றின் திருஷ்டியால் சத்து சித்து ஆநந்தம் அநந்தம் அகண்டம் அசங்கமுதலியனவாகச் சொல்லப்படுகின்றது.

இவ்வாறு ஆத்மாவின் விசேஷணங்கள் ஒன்றற்கொன்று பின்னமாகாமல் அபின்னமாகின்றன.

ஸ்ரீ விசாரசந்திரோதயம் ஏழாங்கலை
ஆத்மாவின் விசேஷணவர்ணநம் என்பது
முடிந்தது.

---



# ஸ்ரீ விசாரசந்திரோதயம்.

## எட்டாங்கலை.

### சச்சிதாநந்தவிசேஷவர்ணநம்.

சச்சிதா நந்த சொரூபமே யானெனச்
சற்குரு முகத்தான் சதுரா யுணர்க. (க)

ஜாக்கிரஞ் சொப்பநஞ் சுழுத்தி யாதியா
மும்மைக் காலத்து முள்ளவன் யானே. (உ)

மும்மைக் காலத்து மிருத்தலின் யானே
சத்து வடிவன் சகலமு மென்னு
லறியப் படுதலி னறிவு வடிவன்யான். (ங)

உடல்சுதன் றூர மொண்பொரு ளாதியிற்
பிரியன் யானே யென்பொருட் டியாவும்
பிரியமா மென்பொருட் டியானே பிரிய
னிதனுற் பிரிய தமனியா னதனுற்
பரமா நந்தன் றுக்கமாம் பிறவே. (ச)

உடற் றசையாதி யொழிந்தவவ் வான்மா
பூரணப் பிரம மென்றே போற்றுக. (ரு)

கசுச. வி௵ :-சத் தென்பது யாது ?

விடை :-க. மூன்று காலத்திலும் பாதிக்கப்ப டாதது சத்து.

கசுரு. வி௵ :-சித் தென்பது யாது ?

விடை :-உ. மூன்றுகாலத்திலும் எல்லாவற் றையும் அறிவது சித்து.

கசுசு. வி௵ :-ஆநந்த மென்பது யாது ?

விடை :-௩. மூன்றுகாலத்தினும் பரமப்பிரே மைக்கு விஷயமாவது ஆநந்தம்.

கசுஎ. வி௵ :-" நான் சத் " தென்றறிவ தெப் படி ?

விடை:-மூன்றுகாலத்திலு மிருத்தலால் நான் சத்தென் றறிக.

கசுஅ. வி௵:-மூன்றுகாலத்திலு மிருத்தலால் நான் சத்தென் றறிவ தெப்படி ?

விடை:-க. (க) ஜாக்கிரத்திலும், (உ) சொப்ப னத்திலும், (௩) சுழுத்தியிலும் நானிருக்கிறேன். அதுபோல,

உ. (க) காலையிலும், (உ) மத்தியானத்திலும், (௩) சாயங்காலத்திலும் நானிருக்கிறேன்.

அதுபோல,

௩. (க) பகலிலும், (உ) இரவிலும், (௩) பக்ஷத்திலும் நானிருக்கிறேன். அதுபோல,

௪. (க) மாசத்திலும், (உ) இருதுவிலும், (௩) வருஷத்திலும் நானிருக்கிறேன். அதுபோல,

௫. (க) பாலியாவஸ்தையிலும், (உ) யௌவனவஸ்தையிலும், (௩) விருத்தாவஸ்தையிலும் நானிருக்கிறேன். அதுபோல,

௬. (க) *க. பூர்வதேகத்திலும், (உ) இந்தத்தேகத்திலும், (௩) வருந்தேகத்திலும் நானிருக்கிறேன். அதுபோல,

௭. (க) யுகத்திலும், (உ) மநுவிலும், (௩) கற்பத்திலும் நானிருக்கிறேன். அதுபோல,

---

*க. இந்தப் பிரகரணத்தில் "இருந்தேன், இருப்பே" னென்று உச்சரிக்கத்தக்க இறந்தகால எதிர்காலங்களும் "இருக்கிறேன்" என்று நிகழ்காலத்தைப்போல உச்சரிக்கப்பட்டிருக்கின்றன. அது பூதமுதலியகாலங்களின் கற்பனையை(மித்தையாத்துவத்தை)ச் சூசிப்பிக்கும்பொருட்டாம். ஆத்மாவிற்குச் சத்துமுதலிய வடிவம் உண்டென்பதில் சுருதிமுதலிய அநேகப்பிரமாணங்க ளுண்டு. எந்தக்காலத்திலும் அஃது அசத்துமுதலியனவா மென்பதில் பிரமாணமில்லை. ஆகையால் எந்தக் காலத்திலும் ஆத்மா சச்சிதாநந்த வடிவமெனச் சித்திக்கிற தென் றறிக.

அ. (க) இறந்தகாலத்திலும்,(உ) நிகழ்காலத்தி லும், (௩) வருங்காலத்திலும் நானிருக்கிறேன்.

இவ்வாறு மூன்றுகாலத்திலு மிருத்தலால் நான் சத்தென் றறிக.

கசுசு. வினா:-எனக்கு வேறாகிய நாமரூபவஸ்துக்களோடுகூடிய மூன்றுகாலத்தையும் என்னவென் றறிதல்?

விடை:-எனக்கு வேறாகிய நாமரூப வஸ்துக்களோடுகூடிய மூன்றுகாலமும் அசத்தென் றறிக.

கஎ௦. வினா:-சத்தசத்துக்களின் நிச்சயம் எதனா லுண்டாகும்?

விடை:-சத்தசத்துக்களின் நிச்சயம் அந்நுவய வெதிரேகயுக்திகளால் உண்டாகும்.

கஎக. வினா:-சத்தசத்துக்களின் நிச்சயத்தில் அந்நுவயவெதிரேகயுக்திகளை அறிவதெப்படி?

விடை:-க. (அந்) ஜாக்கிரத்திலிருக்கிற நானே சொப்பனத்திலு மிருத்தலால் நான் சத்து.

(வெதி) ஜாக்கிரம் என்னிடத்தி லில்லாமையால் இஃது அசத்தாம்.

(அந்) சொப்பனத்திலிருக்கிற நானே சுழுத்தி யிலு மிருத்தலால் நான் சத்தா யிருக்கிறேன்.

(வெதி) சொப்பனம் என்னிடத்தி லில்லை. ஆ கையா லிஃது அசத்தாம்.

(அந்) சுழுத்தியி லிருக்கிற நானே காலையிலு மிருக்கிறேன். ஆகையால் நான் சத்தா யிருக்கிறே ன்.

(வெதி) சுழுத்தி என்னிடத்தி லில்லை. ஆகையா லிஃது அசத்தாம்.

உ. (அந்) காலையிலிருக்கிற நானே மத்தியான த்திலு மிருக்கிறேன். ஆகையால் நான் சத்தா யிரு க்கிறேன்.

(வெதி) காலை என்னிடத்தி லில்லை. ஆகையா லிஃது அசத்தாம்.

(அந்) மத்தியானத்திலிருக்கிற நானே சாயங் காலத்திலு மிருக்கிறேன். ஆகையால் நான் சத்தா யிருக்கிறேன்.

(வெதி) மத்தியானம் என்னிடத்தி லில்லை. ஆ கையா லிஃது அசத்தாம்.

(அந்) சாயங்காலத்திலிருக்கிற நானே பகலிலு மிருக்கிறேன். ஆகையால் நான் சத்தா யிருக்கிறே ன்.

(வெதி) சாயங்காலம் என்னிடத்தி லில்லை. ஆ கையா லிஃது அசத்தாம்.

ங. (அங்) பகலிலிருக்கிற நானே இரவிலு மி ருக்கிறேன். ஆகையால் நான் சத்தா யிருக்கிறே ன்.

(வெதி) பகல் என்னிடத்தி லில்லை. ஆகையா லிஃது அசத்தாம்.

(அங்) இரவிலிருக்கிற நானே பக்ஷத்திலு மி ருக்கிறேன். ஆகையால் நான் சத்தா யிருக்கிறே ன்.

(வெதி) இரவு என்னிடத்தி லில்லை. ஆகையா லிஃது அசத்தாம்.

(அங்) பக்ஷத்திலிருக்கிற நானே மாசத்திலு மிருக்கிறேன். ஆகையால் நான் சத்தா யிருக்கி றேன்.

(வெதி) பக்ஷம் என்னிடத்தி லில்லை. ஆகை யா லிஃது அசத்தாம்.

ச. (அங்) மாசத்திலிருக்கிற நானே இருதுவி லு மிருக்கிறேன். ஆகையால் நான் சத்தா யிருக் கிறேன்.

(வெதி) மாசம் என்னிடத்தி லில்லை. ஆகையா லிஃது அசத்தாம்.

(அந்) இருதுவி லிருக்கிற நானே வருஷத்தி லு மிருக்கிறேன். ஆகையால் நான் சத்தா யிருக்கிறேன்.

(வெதி) இருது என்னிடத்தி லில்லை. ஆகையா லிஃது அசத்தாம்.

(அந்) வருஷத்திலிருக்கிற நானே பாலியாவஸ்தையிலு மிருக்கிறேன். ஆகையால் நான் சத்தா யிருக்கிறேன்.

(வெதி) வருஷம் என்னிடத்தி லில்லை. ஆகையா லிஃது அசத்தாம்.

௫. (அந்) பாலியாவஸ்தையி லிருக்கிற நானே யௌவனாவஸ்தையிலு மிருக்கிறேன். ஆகையால் நான் சத்தா யிருக்கிறேன்.

(வெதி) பாலியாவஸ்தை என்னிடத்திலில்லை. ஆகையா லிஃது அசத்தாம்.

(அந்) யௌவனாவஸ்தையி லிருக்கிற நானே விருத்தாவஸ்தையிலு மிருக்கிறேன். ஆகையால் நான் சத்தா யிருக்கிறேன்.

(வெதி) யௌவனாவஸ்தைஎன்னிடத்திலில்லை. ஆகையா லிஃது அசத்தாம்.

(அங்) விருத்தாவஸ்தையி லிருக்கிற நானே பூர்வதேகத்திலு மிருக்கிறேன். ஆகையால் நான் சத்தா யிருக்கிறேன்.

(வெதி) விருத்தாவஸ்தை என்னிடத்திலில்லை. ஆகையா லிஃது அசத்தாம்.

௬. (அங்) பூர்வதேகத்திலிருக்கிற நானே இந் தத் தேகத்திலு மிருக்கிறேன். ஆகையால் நான் சத்தா யிருக்கிறேன்.

(வெதி) பூர்வதேகம் என்னிடத்தி லில்லை. ஆ கையா லிஃது அசத்தாம்.

(அங்) இந்தத் தேகத்திலிருக்கிற நானே வருந் தேகத்திலு மிருக்கிறேன். ஆகையால் நான் சத் தா யிருக்கிறேன்.

(வெதி) இந்தத் தேகம் என்னிடத்தி லில்லை. ஆகையா லிஃது அசத்தாம்.

(அங்) இனிவரும் தேகத்திலிருக்கிற நானே யுகத்திலு மிருக்கிறேன். ஆகையால் நான் சத்தா யிருக்கிறேன்.

(வெதி) வருந்தேகம் என்னிடத்தி லில்லை. ஆ கையா லிஃது அசத்தாம்.

எ. (அந்) யுகத்திலிருக்கிற நானே மநுவிலு மிருக்கிறேன். ஆகையால் நான் **சத்தா** யிருக்கிறேன்.

(வெதி) யுகம் என்னிடத்தி லில்லை. ஆகையா லிஃது **அசத்தாம்.**

(அந்) மநுவிலிருக்கிற நானே கற்பத்திலு மிருக்கிறேன். ஆகையால் நான் **சத்தா** யிருக்கிறேன்.

(வெதி) மநு என்னிடத்தி லில்லை. ஆகையா லிஃது **அசத்தாம்.**

(அந்) கற்பத்திலிருக்கிற நானே பூதகாலத்திலு மிருக்கிறேன். ஆகையால் நான் **சத்தா** யிருக்கிறேன்.

(வெதி) கற்பம் என்னிடத்தி லில்லை. ஆகையா லிஃது **அசத்தாம்.**

அ. (அந்) பூதகாலத்திலிருக்கிற நானே வருங்காலத்திலு மிருக்கிறேன். ஆகையால் நான் சத்தா யிருக்கிறேன்.

(வெதி) இறந்தகாலம் என்னிடத்தி லில்லை. ஆகையா லிஃது அசத்தாம்.

(அந்) வருங்காலத்திலிருக்கிற நானே நிகழ்காலத்திலு மிருக்கிறேன். ஆகையால் நான் **சத்தா** யிருக்கிறேன்.

(வெதி) வருங்காலம் என்னிடத்தி லில்லை. ஆகையா லிஃது அசத்தாம்.

(அந்) நிகழ்காலத்திலிருக்கிற நானே எல்லாக் காலங்களிலு மிருக்கிறேன். ஆகையால் நான் சத்தா யிருக்கிறேன்.

(வெதி) வர்த்தமானகாலம் என்னிடத்தி லில்லை. ஆகையா லிஃது அசத்தாம்.

இவ்வாறு சத்தசத்துக்களின் நிச்சயத்தில் அந்நுவய வெதிரேகயுக்திகளை அறிக.

கஎஉ. வினா :—நான் எப்படிச் சித்தா யிருக்கிறேன்?

விடை :—க. மூன்றுகாலத்திலும் நானறிந்துகொண்டிருக்கிறேன். ஆகையால் நான் சித்தா யிருக்கிறேன்.

கஎங. வினா:—மூன்றுகாலத்திலும் நானறிந்துகொண்டிருத்தலால் சித்தா யிருக்கிறேனென்றறிவதெப்படி?

விடை :—க.

(க) ஜாக்கிரத்தையும்,

(உ) சொப்பனத்தையும்,

(ங) சுழுத்தியையும் நானறிகிறேன்.

௨. அதுபோல,

(௧) காலையையும்,

(௨) மத்தியானத்தையும்,

(௩) சாயங்காலத்தையும் நானறிகிறேன்.

௩. அதுபோல,

(௧) பகலையும்,

(௨) இரவையும்,

(௩) பக்ஷத்தையும் நானறிகிறேன்.

௪. அதுபோல,

(௧) மாசத்தையும்,

(௨) இருதுவையும்,

(௩) வருஷத்தையும் நானறிகிறேன்.

௫. அதுபோல,

(௧) பாலியாவஸ்தையையும்,

(௨) யௌவனுவஸ்தையையும்,

(௩) விருத்தாவஸ்தையையும் நானறிகிறேன்.

௬. அதுபோல,

(௧) பூர்வதேசத்தையும்,

(உ) இத்தேகத்தையும்,

(௩) வருந்தேகத்தையும் நானறிகிறேன்.

எ. அதுபோல,

(க) யுகத்தையும்,

(உ) மநுவையும்,

(௩) கற்பத்தையும் நானறிகிறேன்.

அ. அதுபோல,

(க) இறந்தகாலத்தையும்,

(உ) வருங்காலத்தையும்,

(௩) நிகழ்காலத்தையும் நானறிகிறேன்.

இவ்வாறு எல்லாக்காலத்திலும் நானறிந்து கொண்டிருத்தலால், நான் சித்தா யிருக்கிறே னென்றறிக.

கஎச. வினா:—எனக்கு வேறாகிய நாமரூபவஸ் துக்களோடுகூடிய மூன்றுகாலத்தையும் என்ன வென்றறிதல்?

விடை:—எனக்கு வேறாகிய நாமரூபவஸ்துக்க ளோடுகூடிய மூன்றுகாலமும் ஜடமென்றறிக.

கஎ௫. வினா:—சித்துஜடங்களின் நிச்சயம் எத னு லுண்டாகும்?

விடை :—சித்துஜடங்களின் நிச்சயம் அந்வய வெதிரேகயுக்திகளா லுண்டாகும்.

௱௭௬. வினு :—சித்துஜடங்களின் நிச்சயத்தில் அந்வயவெதிரேகயுக்திகளை அறிவ தெப்படி ?

விடை :—(அந்) ஜாக்கிரத்தை அறிந்துகொண் டிருக்கிற நானே சொப்பனத்தையும் அறிந்து கொண்டிருக்கிறேன். ஆகையால் நான் சித்தா யி ருக்கிறேன்.

(வெதி) ஜாக்கிரம் என்னை அறியாது. ஆகை யா லிது ஜடமாம்.

(அந்) சொப்பனத்தை அறிந்துகொண்டிருக் கும் நானே சுழுத்தியையும் அறிந்துகொண்டிரு க்கிறேன். ஆகையால் நான் சித்தா யிருக்கிறேன்.

(வெதி) சொப்பனம் என்னை அறியாது. ஆ கையா லிது ஜடமாம்.

இவைமுதலிய மற்றெல்லாக் காலங்களையும் மு ன்போல அறிக. இவ்வாறு சித்துஜடங்களின் நிர் ணயத்தில் அந்வயவெதிரேகயுக்திகளை அறிக.

௱௭௭. வினு :—நான் ஆநந்தசொரூபனு யிருக் கிறே னென்பது எப்படி ?

விடை:—மூன்றுகாலத்திலும் பரமப்பிரியனுயி ருத்தலால் நான் ஆநந்தசொரூபனுயிருக்கிறேன்.

௧௭அ. வி௵:-மூன்றுகாலத்திலும் பிரியனு யிருத்தலால் நான் ஆநந்தசொரூபனு யிருக்கிறேனென் றறிவ தெப்படி?

விடை:-௧.

(௧) ஜாக்கிரத்திலும்,

(உ) சொப்பனத்திலும்,

(௩) சுழுத்தியிலும் நான் பிரியனு யிருக்கிறேன.

உ. அதுபோல,

(௧) காலையிலும்,

(உ) மத்தியானத்திலும்,

(௩) சாயங்காலத்திலும் நான் பிரியனு யிருக்கிறேன்.

௩. அதுபோல,

(௧) பகலிலும்,

(உ) இரவிலும்,

(௩) பக்ஷத்திலும் நான் பிரியனு யிருக்கிறேன்.

௪. அதுபோல,

(௧) மாசத்திலும்,

(உ) இருதுவிலும்,

(ங) வருஷத்திலும் நான் பிரியனு யிருக்கி
றேன்.

ரு. அதுபோல,

(க) பாலியாவஸ்தையிலும்,

(உ) யௌவனவஸ்தையிலும்,

(ங) விருத்தாவஸ்தையிலும் நான் பிரியனு
யிருக்கிறேன்.

சு. அதுபோல,

(க) பூர்வதேகத்திலும்,

(உ) இந்தத்தேகத்திலும்,

(ங) வருந்தேகத்திலும் நான் பிரியனுயிரு
க்கிறேன்.

எ. அதுபோல,

(க) யுகத்திலும்,

(உ) மநுவிலும்,

(ங) கற்பத்திலும் நான் பிரியனு யிருக்கி
றேன்.

அ. அதுபோல,

(க) இறந்தகாலத்திலும்,

(உ) வருங்காலத்திலும்,

(௩) நிகழ்காலத்திலும் நான் பிரியனு யிருக்கிறேன்.

இவ்வாறு மூன்றுகாலத்திலும் பரமப்பிரியனு யிருத்தலால் நான் ஆநந்தசொரூபனு யிருக்கிறேனென் றறிக.

௧௭௯. வினு:-என்னினும் வேருகிய நாமரூப வஸ்துக்களோடுகூடிய மூன்று காலமும் என்னவென் றறிதல்?

விடை:-என்னினும்வேருகிய நாமரூபவஸ்துக்களோடுகூடிய மூன்றுகாலமும் துக்கமென் றறிக.

௧௮௦. வினு:-ஆநந்ததுக்கங்களின் நிச்சயம் எதனு லுண்டாகும்?

விடை:-ஆநந்ததுக்கங்களின்நிச்சயம் அந்வயவெதிரேகயுக்திகளால் உண்டாகும்.

௧௮௧. வினு:-ஆநந்ததுக்கங்களின் நிச்சயத்தில் அந்வயவெதிரேகயுக்திகளை அறிவதெப்படி?

விடை:-(அ) ஜாக்கிரத்தில் (பரமப்)பிரியனு யிருக்கின்ற நானே சொப்பனத்திலும்பிரியனுயி

ருக்கிறேன். *உ. ஆகையால் நான் ஆநந்தசொரூபன்.

(வெதி) ஜாக்கிரம் எனக்குப் பிரிய மன்று. ஆகையால் இது துக்கமாம். இவைமுதலிய மற்றெல்லாக்காலங்களையும் முன்போல அறிக.

இவ்வாறு ஆநந்ததுக்கங்களின் நிச்சயத்தில் அந்வயவெதிரேகயுக்திகளை அறிக.

க௮உ. வினா:-நான் பரமப்பிரியனாயிருக்கிறேனென்றறிவதெப்படி?

---

*உ. எந்தெந்த ஜாக்கிரமுதலிய காலங்கள் ஆத்மாவினிடத்தில் தோற்றுகின்றனவோ, அந்தந்தக்காலங்கள் துக்கவடிவமாயினும்,

(க) அத்தியாசத்தால் அவை ஆத்மாவிற்குச் சிதாபாசன்வாயிலாகப் பிரியமாகத் தோற்றுகின்றன. அப்போது அந்நியகாலங்கள் பிரியமாகத் தோற்றுகிறதில்லை. ஆகையால் எல்லாக்காலங்களிலும் **விபசிசாரமு** (மாறுதலு)டைய பிரியம் இருக்கின்றது, ஆனால் இவைகள் வாஸ்தவமாகத் துக்கவடிவமேயாம். ஆனால்,

(உ) ஆத்மாவி(தன்)னிடத்து **அவ்வியபிசாரப்** (எப்போதும்) **பிரிய** மிருக்கின்றது. ஆகையால் ஆத்மா **ஆநந்தவடிவமாம்**.

விடை:-க. திருஷ்டாந்தம்:-*௩. புத்திரனது மித்திர (சிநேகித)னிடத்திலிருக்கும் பிரியம் புத்திரன்பொருட்டாம்.

உ. புத்திரனிடத்துள்ள பிரியம் அவனது மித்திரன்பொருட்டன்று.

ஆகையால் புத்திரன் அதிகப்பிரியன். அதுபோல, (க) திரவியம் புத்திரன்முதலியவற்றிலுள்ள பிரியம் ஆத்மாவின் பொருட்டாம்.

(உ) ஆத்மாவினிடத்திலுள்ள பிரியம் திரவிய புத்திராதிகளின் பொருட்டன்று.

ஆகையால் ஆத்மா அதிகப்பிரியன். இவ்வாறு நான் பரமப்பிரியனு யிருக்கிறேனென் றறிக.

கஅ௩. வினு:-பிரியத்தின் ஏற்றத்தாழ்வுகளை அறிவதெப்படி?

விடை:-க. ஜாக்கிரத்தில் எல்லாவற்றினும் பிரியமுள்ளது திரவியம். ஏனெனின், தனத்தின்பொருட்டுப் புருஷன் தன் தேசத்தைவிட்டு அன்னிய

---

*௩. இதனைப் பிருகதாரணியகவுபநிஷத்து ஆறுவது அத்யாயம் ரு-வது பிராஹ்மணம் விரிவாய் எடுத்துக் கூறுவது காண்க.

தேசத்திற்குப் போய், அநேக நீசகர்மங் (தாழ்ந்த வேலை)களைச் செய்கின்றமையால் திரவியம் பிரிய முள்ளது.

உ. திரவியத்தினும் புத்திரன் பிரியன். ஏனெனின், புத்திரன் துர்ச்செய்கையினால் இராஜக்கிரகத்தில் பந்தனத்தை அடைந்தகாலத்து, அவனைத் தனத்தைக் கொடுத்து விடுவிக்கின்றமையால் தனத்தினும் புத்திரன் பிரியன்.

௩. புத்திரனினும் சரீரம் பிரியமுள்ளது. ஏனெனின், பஞ்சமுண்டாகுங்காலத்துப் புத்திரனை விற்றுச் சரீரநிருவாகஞ் செய்கின்றமையால் புத்திரனினும் சரீரம் பிரியமுள்ளது.

௪. சரீரத்தினும் இந்திரியம் பிரியமுள்ளது. ஏனெனின், யாரேனும் அடிக்க வருங்காலத்து இந்திரியங்களை மறைத்துக்கொண்டு, "என் சரீரத்திலடி; கண் காது மூக்கு முகங்களில் அடிக்காதே." யென்று சொல்லுகிறான். ஆகையால் சரீரத்தினும் இந்திரியம் பிரியமுள்ளது.

௫. இந்திரியத்தினும் பிராணன் பிரியமுள்ளது. ஏனெனின், ஒருவனுக்கு, துர்ச்செய்கை செய்ததினால் "இவன் பிராணனை வாங்குக." என்று இராஜாவின் உத்தரவு உண்டாகுமாயின், அப்

போது அவன் "என் திரவியம் புத்திரன் மனைவி வீடுமுதலியவற்றைக் கொள்ளையிடுங்கள்; என் பிராணனை வாங்காதீர்கள்." என்றுசொல்லுகிறுன். அப்படிச் சொல்லியும் பிராணனைவாங்கும்படியாகவே இராஜன் ஆணையிடுவானுயின், அப்போது "என் காதுமூக்குக்கைகால்களை அறுத்துவிடுங்கள்; ஆனுல் என் பிராணனை வாங்காதீர்கள்." என்று சொல்லுகிறுன். ஆகையால் இந்திரியத்திலும் பிராணன் பிரியமுள்ளது.

சு. பிராணனிலும் ஆத்மா பிரியமுள்ளது. ஏனெனின், ஒருவனுக்கு மிகுந்தவியாதியால் வருத்தம் வந்தகாலத்து "என் பிராணன் நீங்குமாயின், நான் சுகமுடையவனுகிறேன்." என்றுசொல்லுகிறுன். ஆகையால் பிராணனிலும் ஆத்மாபிரியமுள்ளது.

இவ்வாறு பிரியத்தின் ஏற்றத்தாழ்வை அறிக.

## ஸ்ரீவிசாரசந்திரோதயம் எட்டாங்கலை

## சச்சிதாநந்தவிசேஷவர்ணநம் என்பது

## முடிந்தது.

---



# ஸ்ரீ விசாரசந்திரோதயம்.

## ஒன்பதாங்கலை.

### அவாச்சியசித்தாந்தவர்ணனம்.

வாக்கு மநதிற் ககோசரம் பிரமமென்
றுரைத்திடுஞ் சாத்திரங் கருதுவர் பெரியோ
ரிலக்கணை யாதியா லியம்பும் வேதம்
*விருத்தி வியாத்தியா லுணரும் மநமே
சத்தாதி விதேய விசேஷண மவைதா
மசத்தாதி கடம்மின் னறையும் வேறென்
றுபேக்ஷிக சத்திய மாதிய விரோதி
யமிச மகற்றி யறிவிக்கும் பரமார்த்தம். (க)

அநந்த மகண்ட மசங்க மத்துவய
மாதிய நிஷேத்திய மவைபிர பஞ்சமொழித்
தெஞ்சிய வத்துவை யியம்பு மொழியிலதா
யிவ்வகைப் பரமான்மா வான்ம தேவனே
வேத சாத்திர மியாவு மிசைத்திடு
மாதலி னொழித்திடு வாபா சன்றனே [டாய்.
யானெனும் விருத்தியா னபரோக்ஷ மெய்தி

*விருத்திவியாப்தியின் இலக்கணத்தை கசு-வது கலையில் வியாப்தி-உ. என்பதில் காண்க.

க௮௪. வினு:-*க. பிரஹ்மாத்மா வாக்கிற்குவிஷய மாகாதெனின், அது எப்படிச் சச்சிதாநந்த முதலிய விசேஷணங்களாற் சொல்லப்படும்?

விடை:-பிரஹ்மாத்மாவிற்குச் சில *உ. விதேயவிசேஷணங்களாயும், சில *௩. நிஷேத்தியவிசேஷணங்களாயு மிருக்கின்றன. அவற்றுள்,

க. விதேயவிசேஷணங்களாகிய சத்துமுதலியன பிரபஞ்சத்தை நிஷேதித்து, எஞ்சி நிற்கும் பிரஹ்மத்தை *௪. இலக்ஷணையினலே நேரே அறிவிக்கின்றன.

---

*க. இங்கே பிரஹ்மாத்மா என்பது பண்புத்தொகை.

*உ. "சத்திருக்கிறது", "சித்திருக்கிறது", என்றிவ்வாறு விதிமுகமாகப் பிரஹ்மத்தை அறிவிக்கும் பதம் **விதேயவிசேஷணமாம்.**

*௩. "அநந்தம்(அந்தமுடையதன்று)" "அகண்டம்(கண்டமுடையதன்று)" என்றிவ்வாறு நிஷேதமுகத்தால் பிரஹ்மத்தை அறிவிக்கும்பதம் **நிஷேத்திய விசேஷணமாம்.**

*௪. க. (வா)மாயையிலும் பிரபஞ்சத்திலும் ஆபேக்ஷிகசத்தியத்துவமும், பிரஹ்மத்தில் நிரபேக்ஷிக(ஒன்றை முன்னிடாத)சத்தியத்துவமு முண்டு. இரண்டும் சேர்ந்து 'சத்து' என்னும் பதத்தின் வாச்சியமாம்.

உ. நிஷேத்தியவிசேஷணங்களாகிய அநந்தாதிகள் சாக்ஷாத்(நேரே) பிரபஞ்சத்தையே நிஷேதி

---

(ல) மாயையின் சத்தியத்துவத்தைவிட்டுப் பிரஹ்மமாத்திரத்தின் சத்தியத்துவம் இலக்ஷியமாம்.

உ. (வா) அந்தக்கரணவிருத்திஞானம் சேதனஞானம் என்னு மிரண்டும் சேர்ந்து 'சித்' தென்னும் பதத்திற்கு வாச்சியமாம்.

(ல) விருத்திஞானத்தை விட்டுச் சேதனமாத்திரமாகிய ஞானம் இலக்ஷியமாம்.

ரு. (வா) விஷயாநந்தம் வாசனாநந்தம் பிரஹ்மாநந்தம் என்னும் மூன்றும் சேர்ந்து 'ஆநந்தம்' என்னும் பதத்திற்கு வாச்சியமாம்.

(ல) இரண்டையும் விட்டுப் பிரஹ்மாநந்தம் மாத்திரம் இலக்ஷியமாம்.

ச. (வா) மாயையிலும் அதன் காரியமாகிய ஆகாசாதிகளிலும் ஆபேக்ஷிக வியாபகத்துவமும், பிரஹ்மத்தில்(ஆத்மாவில்)நிரபேக்ஷிக வியாபகத்துவமு முண்டு. இரண்டும்சேர்ந்து 'பிரஹ்மம்(விபு)' என்னும் பதத்திற்கு வாச்சியமாம்.

(ல) பிரஹ்மம் மாத்திரம் இலக்ஷியமாம்.

ரு.(வா)ஸாபாஸ (ஆபாசனோடுகூடிய) புத்தியில்ஆபேக்ஷிகசொப்பிரகாசத்தன்மையும், சேதனத்தில்நிரபேக்ஷிகசொப்பிரகாச த்தன்மையு முண்டு. இரண்டும்

க்கின்றன. அதற்கு விலக்ஷணமாகிய பிரஹ்மாத்மா அர்த்தத்தினலே சித்திக்கின்றது. அதனல்

---

சேர்ந்து 'சுயம்பிரகாசம்' என்னும் பதத்திற்கு வாச்சியமாம்.

(ல) சேதனம் மாத்திரம் இலக்ஷியமாம்.

சு. (வா) இரஜ்ஜுமுதலியவற்றில் ஆபேக்ஷிக அவிகாரித்துவமும், சேதனத்தில் நிரபேக்ஷிக அவிகாரித்துவமு முண்டு. அவ்விரண்டும் சேர்ந்து 'கூடஸ்து' னென்னும் பதத்திற்கு வாச்சியமாம்.

(ல) கேவலசேதனம் இலக்ஷியமாம்.

எ. (வா) இலௌகிகசாக்ஷியும் மாயைஅவித்தைகளின் உபகிதசேதனமு(பிரஹ்மமும் ஆத்மாவு) மாகிய இரண்டும் சேர்ந்து 'சாக்ஷி' என்னும் பதத்திற்கு வாச்சியமாம்.

(ல) மாயைஅவித்தைகளின் உபகிதசேதனமாத்திரம் இலக்ஷியமாம்.

அ. (வா) ஸாபாஸ அந்தக்கரணவிருத்தியென்னும் திருஷ்டியோடு கூடிய சேதனம் 'திருஷ்டா' என்னும் பதத்திற்கு வாச்சியமாம்.

(ல) சேதனபாகம் மாத்திரம் இலக்ஷியமாம்.

கூ. (வா) யாகத்தின் உபதிருஷ்டாவும் பிரத்தியகாத்மாவும் ஆகிய இரண்டும் சேர்ந்து 'உபதிருஷ்டா' என்னும் பதத்திற்கு வாச்சியமாம்.

(ல) பிரத்தியகாத்மாமாத்திரம் இலக்ஷியமாம்.

பிரஹ்மாத்மா அவாச்சியமா யிருத்தலால், எந்த விசேஷணத்தினாலும் சொல்லப்படுகிறதில்லை.

கஅ௫. வினா:-சத்துமுதலிய விதேயவிசேஷணங்கள் எப்படிப் பிரபஞ்சத்தைநிஷேதித்து மிஞ்சிய பிரஹ்மத்தை அறிவிக்கின்றன?

விடை:-க. சத் தென்பதனால் அசத்து நிஷேதிக்கப்பட, மிஞ்சியிருக்கும் சத்துரூபம் இலக்ஷணையினாலே சித்திக்கின்றது.

உ. சித் தென்பதனால் ஜடம் நிஷேதிக்கப்பட, மிஞ்சியிருக்கும் சித்துரூபம் இலக்ஷணையால் சித்திக்கின்றது.

---

கo. (வா) உலகத்திலுள்ள ஏகாங்கியாகியபுருஷனும் சஜாதீயபேதமில்லாத பிரஹ்மமும் 'ஏகம்' என்னும் பதத்திற்கு வாச்சியமாம்.

(ல) பிரஹ்மம் மாத்திரம் இலக்ஷியமாம்.

இப்படியே சொல்லப்படாத மற்ற விதேயவிசேஷணங்களிலும் அறிந்துகொள்ளுக.

இவ்வாறு பிரபஞ்சத்தின் 'அசத்து' முதலியவிசேஷணங்களை நிஷேதிக்கும் சத்துமுதலிய பதங்களின் அர்த்தத்திலும் பாகத்தியாகலக்ஷணையின் பிரவிருத்தியிருக்கின்றது.

௩. ஆநந்தம் என்பதனால் துக்கம் நிஷேதிக்கப் பட, மிஞ்சியிருக்கும் ஆநந்த(சுக)வடிவம் இலக்ஷணையினால் சித்திக்கின்றது.

௪. பிரஹ்மமென்பதனால் பரிச்சின்னம் நிஷேதிக்கப்பட, மிஞ்சியிருக்கும் வியாபகம் இலக்ஷணையினால் சித்திக்கின்றது.

௫. சுயம்பிரகாசமென்பதனால் அந்நியப்பிரகாசம் நிஷேதிக்கப்பட, மிஞ்சியிருக்கும் சுயம்பிரகாசம் இலக்ஷணையால் சித்திக்கின்றது.

௬. கூடஸ்தரே(அவிகாரியெ)ன்பதனால் விகாரி நிஷேதிக்கப்பட, மிஞ்சியிருக்கும் நிர்விகாரி இலக்ஷணையினாலே சித்திக்கின்றது.

௭-௯. சாக்ஷி, திருஷ்டா,*௫.உபதிருஷ்டா என்பவற்றால் சாக்ஷிய திருசிய உபதிருசியங்(சமீபத்தில் காணப்படும் வஸ்துக்)கள் நிஷேதிக்கப் பட, மிஞ்சியிருக்கும் சாக்ஷி திருஷ்டா உபதிருஷ்டா வென்பவை இலக்ஷணையினாலே சித்திக்கின்றன.

---

*௫. " उपद्रष्टाहम् ।

உபதிருஷ்டா யான்" என்பது பிரஹ்மவித்யோபநிஷத்து.

௧௦. ஏகம் என்பதனுல் நாநா வென்பது நிஷே திக்கப்பட, மிஞ்சிய ஏக மென்பது இலக்ஷணை யினுலே சித்திக்கின்றது.

இவ்வாறு மற்ற விதேயவிசேஷணங்களிலும றிக.

௧அ௬. வின :- அநந்தாதி நிஷேத்தியவிசேஷ ணங்கள் பிரபஞ்சத்தை எப்படி நிஷேதிக்கின்ற ன ?

விடை :- அநந்தம் என்பதனுல் தேசகாலவஸ் துக்களாலாகிய பரிச்சேதம் நிஷேதிக்கப்பட, எ ஞ்சிநின்ற அநந்தம் அர்த்தத்தினுல் சித்திக்கின் றது.

இவ்வாறு மற்ற நிஷேத்தியவிசேஷணங்களி லு மறிக.

௧அ௭. வின:-இவ்விசேஷணங்களுக்கு இவ் வாறு பொருள் செய்வதனு லென்ன பிரயோஜ னம் ?

விடை :- இவ்விசேஷணங்களுக்கு இப்படிப் பொருள் செய்வதன் பிரயோசனம்,*சு.சேதனம்

---

*சு. சேதனம் மனதிற்கும் வாக்கிற்கும் விஷயமா காமை மகோபநிஷத்து தைத்திரீயமுதலியவற்றில் பிரசித்தம்.

மனதிற்கும் வாக்கிற்கும் விஷயமாகா தென்று சொல்லும் சுருதியின் அர்த்தத்திற்கு விரோதமுண்டாகாமையாம். குணம் தொழில் ஜாதி சம்பந்தமுதலிய மனோவாக்குகளின் பிரவிருத்திக்கு ஏதுவாகிய தர்மங்கள் பிரஹ்மத்தி லில்லை.

ஆனல் பிரஹ்மம் தர்மமில்லாததா யிருத்தலால் நிர்விசேஷமாம். ஆகையால் சுருதியும் அதை மனோவாக்குகளுக்கு விஷயமாகாததெனக் கூறுகின்றது.

அல்லது எது பேசவேண்டியதோ, அது துவைதத்தின லுண்டாகிறது அத்வைதத்தினலுண்டாகிறதில்லை. ஆகையால் இந்த விசேஷணங்களுக்கு இப்படி அர்த்தஞ் செய்வதால் சுருதிவிருத்தமாகிய துவைதம் சித்திக்கிறதில்லை; அன்றியும் அத்வைதமும் சுகமாக அறியக்கூடிய தாகின்றது.

## ஸ்ரீ விசாரசந்திரோதயம் ஒன்பதாங்கலை

### அவாச்சியசித்தாந்தவர்ணநம் என்பது

முடிந்தது.

---



# ஸ்ரீ விசாரசந்திரோதயம்.

## பத்தாங்கலை.

### சாமானியவிசேஷசைதன்னியவர்ணநம்.

சமாநம் விசேடமென் டிரண்டே சேதந
மவற்றுட் சத்தியஞ் சமாநமென் றறிக
விசேடங் கற்பிதம் பிராந்தி வடிவமாஞ்
சம்சா ராசிரய மதுவே யெனக்காண். (௧)

நீரா தியவற்றி லிரவியி னெதிர்வடி
வெவ்வண மதிப்பர மான்மப் பதிபிம்பம்
கற்பித விசேஷ மெனக்கா ணீயே
யிகபர லோக வரத்தும் போக்குங்
கன்ம போகம் புசித்தலு மியாவுஞ்
சித்தினு பாஸன் செய்வன் சுத்தமாஞ்
சமாநந் தன்னைச் சாராவ வைதாஞ்
சமாந மத்தி பாதிப் பிரியமா
யெங்குமாம் பூரணப் பிரமமென் றோர்க. (௨)

நாமம் ரூப மிரண்டுந் தவிர்த்துச்
சச்சிதா நந்தந் தானெனக் காணே. (௩)

கஅஅ. வி௫:-விசேஷசைதன்னிய மென்பது யாது?

விடை:-அந்தக்கரணத்திலும் அந்தக்கரணவிருத்தியிலு முள்ள சாமானியசைதன்னியமாகிய பிரஹ்மத்தின் பிரதிபிம்பரூபசிதாபாசன் *க.விசேஷசைதன்னியம்.

கஅகூ. வி௫:-சிதாபாசன் லக்ஷணம் யாது?

விடை:-க. சைதன்னிய(பிரஹ்ம)த்தின் லக்ஷணமில்லாததாய்ச்,

உ. சைதன்னியத்தைப்போலத் தோற்றுவது சிதாபாச னெனப்படும்.

ககூ0. வி௫:-இந்தச் சிதாபாசன் எதனுல் விசேஷசைதன்னிய மெனப்படுகின்றது?

விடை:-அற்பதேசத்திலும் அற்பகாலத்திலுமிருக்கும் வஸ்து*உ. விசேஷமெனப்படும். சிதாபாசன் அந்தக்கரணதேசத்திலும், ஜாக்கிரசொப்

---

*க. இங்கே சொல்லப்பட்டிருக்கின்ற சிதாபாசனுகிய விசேஷசைதன்னியம், ஆருவது கலையிற் சொல்லப்பட்ட கற்பிதவிசேஷ அம்சத்தி லடங்கும்.

*உ. அதிஷ்டானம் அத்தியஸ்தம் என்னும் பேதத்தால் விசேஷ மிரண்டுவகையாம். அவற்றுள்,

பனகாலங்களிலும் அல்லது அஞ்ஞானகாலத்தி லுமிருத்தலால் **விசேஷசைதன்னிய** மெனப்படுகின்றது.

கககூக. வின :—விசேஷசைதன்னியத்தில் திருஷ்டாந்தம் யாது?

**விடை:—திருஷ்டாந்தம்:—**

க. சூரியனது பிரகாசம் எங்கும் சமானமாயினும், பிரதிபிம்பம் எங்கும் உண்டாகிறதில்லை. எங்கே ஜலம் அல்லது கண்ணுடியாகிய உபாதி இருக்கின்றதோ, அங்கே பிரதிபிம்பரூபமாக விசேஷம் தோற்றுகின்றது.

உ. **அல்லது** சூரியனது பிரகாசம் எங்கும் சமானமாயிருக்கினும், துணி பஞ்சு முதலியவற்றை எரிக்கிறதில்லை. எங்கே சூரியகாந்தக்கல்லாகிய உபாதியிருக்கின்றதோ, அங்கே அக்கினிரூபமாக

---

(க) எது பிராந்திகாலத்தில் தோற்றுகிறதில்லையோ, எது தோற்றுவதால் பிராந்தி நிவர்த்தியாகின்றதோ, அஃது **அதிஷ்டானமாகிய** விசேஷமாம்.

(உ) எது பிராந்திகாலத்தில் தோற்றி, அதிஷ்டானத்தை அறியுங்காலத்துத் தோற்றுகிறதில்லையோ, அஃது **அத்தியஸ்தவிசேஷமாம்**. இதனையே **கற்பித விசேஷ** மென்றும் கூறுவர்.

விசேஷ முண்டாய்த், துணி பஞ்சு முதலியவற்றை எரிக்கின்றது. அவற்றுள்,

௧. சாமானியரூபமானது எங்கும் எப்படியோ அப்படி(உள்ளபடி)யே இருத்தலால் யதார்த்தமா (வெகுகாலநிலையுடையதா)ம்.

௨. உபாதியினால் தோற்றும் விசேஷரூபம் வியபிசாரமுடையதா யிருத்தலால் அயதார்த்தமா (அற்பகாலநிலையுடையதா)ம்.

௧. அதுபோல அஸ்தி பாதிப் பிரியரூபமாயிருக்கிற சாமானியசைதன்னியம் எங்கும் சமானமாயிருக்கினும், அதனால் பேசுதல் நடத்தல் முதலிய விசேஷவியவகாரங்கள் உண்டாகா.

௨. எங்கே அந்தக்கரணமாகிய உபாதி யிருக்கின்றதோ, அங்கே சிதாபாசரூபமாகவிசேஷசைதன்னிய முண்டாய்ப், பேசுதல், நடத்தல், கருத்திருத்துவபோக்திருத்துவம், பரலோகஇவ்வுலகங்களுக்குப் போகுதல் வருதல் முதலிய விசேஷவியவகார முண்டாகின்றது.

அவற்றுள்,

௧. சாமானியசைதன்னியமாகிய பிரஹ்மம் சத்தியம்,

உ. உபாதியினால் தோற்றும் விசேஷசைதன்னியமாகிய சிதாபாசன் மித்தை.

அதுபோலவே,

க. புண்ணியபாபங்களின் கருத்திருத்துவம்,

உ. சுகதுக்கங்களின் போக்திருத்துவம்,

ங. பரலோக இகலோகங்களுக்குப் போகுதல் வருதல்,

ச. ஜனனமரணம்,

ரு. எண்பத்துநான்குலக்ஷம் யோனிகளை அடைதல்,

இவைமுதலிய சமுசாரதர்மங்களும், சிதாபாசனுடையனவா யிருத்தலால் மித்தையாம்.

கசஉ. வினா:-விசேஷசைதன்னியத்தை அறிவதால் நிச்சயிப்பது யாது?

விடை:-க. *ங. விசேஷசைதன்னியமாகிய சிதாபாசனும்,

---

*ங. " विशेषं संपरित्यज्य सन्मात्रं यदलेपकं ।
एकरूपं महारूपं सत्तायास्पदं विदुः ॥
விசேஷத்தினை விட்டுச் சன்மாத்திரமாய் எது பற்றின்றியதாயும், ஏகரூபமாயும், மகாரூபமாயும், சத்தைக்கிடமாயுமுள்ளதோ அதனை அறிக." என்பது அந்நபூர்ணோபநிஷத்து.

உ. அவனுடைய தர்மமும் நானல்ல; என்னுடையவுமல்ல; ஆனால் இவை என்னிடத்திற் கற்பிதங்களாம்; இவற்றிற் கதிஷ்டான சாமானிய சைதன்னியமாகிய நான்; இவற்றினும் வேறாயிருக்கிறேன் என்று நிச்சயிக்கவேண்டும்.

கக௩. வினா:-சாமானியசைதன்னிய மென்பது யாது?

விடை:-க. ஆகாயத்தைப்போல எங்கும் பரிபூரணமாய்ச்,

உ. சர்வநாமரூபங்களுக்கும் அதிஷ்டானமாய்,

௩. அஸ்தி பாதிப் பிரியரூபமாய்,

௪. நிர்விகாரமாயிருக்கும் பிரஹ்மம்

*௪. சாமானியசைதன்னியம்.

---

*௪. "कालसत्ता कलासत्ता वस्तुसत्तेयमित्यपि ।
विभागकलनां त्यक्त्वा सन्मात्रैकपरो भव ।
सत्तासामान्यमेवैकं भावयन्केवलं विभुः ॥

परिपूर्णपरानन्दी तिष्ठापूरितदिग्भरः ।
सत्तासामान्यपर्यंते यत्तत्कलनयोज्झितम् ।
पदमाद्यमनाद्यन्तं तस्य बीजं न विद्यते ॥

கக௬ச. வி௫:-பிரஹ்மம் எதனுல் சாமானிய சைதன்னிய மெனப்படுகின்றது?

விடை:-அதிகதேசத்திலும் அதிககாலத்திலும் இருக்கும் வஸ்து சாமானிய மெனப்படும்.

பிரஹ்மம் புத்திகற்பிதமாகியசகலதேசத்திலும் சகலகாலத்திலும் வியாபகமா யிருத்தலால், சாமானியசைதன்னிய மெனப்படுகின்றது.

கக௬ரு. வி௫:-சாமானியசைதன்னியத்தை அறிவதில் திருஷ்டாந்தம் யாது?

விடை:-திருஷ்டாந்தம்:-ஒரு இரஜ்ஜுவில் பல புருஷர்களுக்கு, ஒருவனுக்குத் தண்டமாகவும், ஒருவனுக்குச் சர்ப்பமாகவும், ஒருவனுக்குப் பிருதிவியின் இரேகையாகவும், ஒருவனுக்கு ஜலதாரையாகவும்பிராந்தி உண்டாகின்றது. அந்தப் பிராந்தியில் இரண்டமிசங்களிருக்கின்றன.

---

காலசத்தை கலாசத்தை வஸ்துசத்தை இது என்னும் விபாககற்பனையை விட்டுச் சன்மாத்திர மொன்றன்பர ௲ருக. கேவலவிபுவாகியசத்தாசாமானிய மொன்றனையே பாவித்துத் திக்குகளெல்லாம் நிரம்பியவனாய்ப் பரிபூர்ணபராநந்தியாய் நிற்பாயாக. சத்தா சாமானியபரியந்த முள்ளது எதுவோ அந்தக் கலக்கநீங்கியபதம் ஆதியாம்; ஆதியந்தமில்லாததாம். அதற்குக் காரண மில்லை." என்னும் அந்நபூர்ணசுருதி. சத்தா சாமானியமே மேலான நிலையெனக் காட்டுகின்றது.

௧. ஒன்று சாமானியமாகிய இதுவெனும் அமிசம்.

௨. மற்றது சர்ப்பமுதலிய விசேஷ அமிசம். அவற்றுள்,

௧. (௧) "இது தண்டம்,

(௨) இது சர்ப்பம்,

(௩) இது பிருதிவியின் இரேகை,

(௪) இது ஜலதாரை."

என்றிவ்வாறு சர்ப்பமுதலிய விசேஷஅமிசங்களில் சாமானியமாகிய இதுவெனும் அமிசம், எங்கும் வியாபகமாயிருக்கிறது. அஃது இரஜ்ஜுவின் சொரூபமாயு மிருக்கிறது. அச்சாமானிய அம்சம்,

(௧) பிராந்திகாலத்திலும் தோற்றுகிறது;

(௨) பிராந்திநீங்கியகாலத்திலும் "இஃது இரஜ்ஜு" என்பதாகத் தோற்றுகின்றது.

ஆகையால் சாமானிய இதுவெனும் அம்சம் அவ்வியபிசாரியா(பிறழ்ச்சியில்லாததா)யிருத்தலால் சத்தியமாம்.

௨. பரஸ்பர வியபிசாரியாகிய சர்ப்பமுதலிய விசேஷ அமிசங்கள் கற்பிதமாம்.

சித்தாந்தம்:—

அதுபோலச் சகல பதார்த்தங்களிலும் க. அஸ்தி, உ. பாதி, ங. பிரியம், ச. நாமம், ரு. ரூபம் என்னும் *ரு. ஐந்தமிசங்களுண்டு.

(க) "குடமிருக்கிறது" என்பது அஸ்தி(சத்து).

(உ) "குடம் விளங்குகிறது" என்பது பாதி (சித்து).

(ங) "குடம் பிரியமாயிருக்கிறது." ஏனெனின், குடம் நீர் முகத்தற்கு(மொள்ளுதற்கு) உபயோகமுள்ளதா யிருத்தலால் பிரிய(ஆநந்த)மாம். பாம்பு சிங்கமுதலியனவும் பெண்பாம்பு பெண்சிங்க முதலியவற்றிற்குப் பிரியமாம்.

(ச) "குடம்" என்னும் மூன்றெழுத்து நாமம்.

(ரு) "பருத்த உருண்டை வயிறுடைமை" குடத்தின்ரூபம்(வடிவம்). இப்படியே குடமுதலிய சகலபூதங்களிலும் பூதங்களின் காரியங்களிலும் அறிக.

---

*ரு. "अस्ति भाति प्रियं रूपं नाम चेत्यंशपञ्चकम् ॥

அஸ்தி, பாதி, பிரியம், ரூபம், நாமம் என்று ஐந்து அம்சங்களுண்டு." இது சரஸ்வதிரஹஸ்யோபநிஷத்து.

இவ்வாறு பாகிய(வெளிப்)பதார்த்தங்களில்ஐ ந்து அமிசங்கள் காட்டப்பட்டன. அதுபோல,

௧. ஆந்தர(உள்)தேகமுதலியவற்றில்,

(௧) "நானிருக்கிறேன்" என்பது அஸ்தி.

(௨) "நான் அறிகிறேன்" என்பது பாதி.

(௩) "எனக்கு நானே பிரியனு யிருக்கிறேன்" என்பது பிரியம்.

(௪) தேகம், இந்திரியம், பிராணன், மனம், புத்தி, சித்தம், அகங்காரம், அஞ்ஞானம், இவற்றின் தர்மம் என்பவை நாமம்.

(௫) இவற்றிற்கு "உரிய வடிவம்" ரூபம்.

இஃது ஆந்தரபதார்த்தங்களில் ஐந்து அமிசங்களைக் காட்டியதாம்.

௨. இந்தச் சகல நாமரூபங்களையும் விடுவதனுல்,

(௧) "பிருதிவி இருக்கிறது."

(௨) "பிருதிவி விளங்குகிறது."

(௩) "பிருதிவி பிரியமாயிருக்கிறது." ஏனெனின், பிருதிவி இருத்தற்கு இடங்கொடுத்தலால்.

(௪) "பிருதிவி" என்னும் நாம மிருக்கிறது.

(ரு) "கந்தகுணத்தோடுகூடிய" ரூபமிருக்கிறது.

௩. பிருதிவியின் நாமரூபத்தை விடுவதனால்,

(௧) "ஜலம் இருக்கிறது."

(௨) "ஜலம் விளங்குகிறது."

(௩) "ஜலம் பிரியமா யிருக்கிறது;" ஏனெனின், ஜலம் தாகத்தை நீக்குதலால்.

(௪) "ஜலம்" என்னும் நாம மிருக்கிறது.

(ரு) "சீதமாகிய பரிசகுணத்தோடுகூடிய" ரூப மிருக்கிறது.

௪. ஜலத்தின் நாமரூபத்தை விடுவதனால்,

(௧) "அக்கினி இருக்கிறது."

(௨) "அக்கினி விளங்குகிறது."

(௩) "அக்கினி பிரியமா யிருக்கிறது;" ஏனெனின், குளிரையும் இருளையும் போக்குதலால்.

(௪) "அக்கினி" என்னும்பெயர் இருக்கிறது.

(ரு) "உஷ்ணமாகியபரிசகுணத்தோடுகூடிய" ரூப மிருக்கிறது.

ரு. அக்கினியின் நாமரூபங்களை விடுவதனால்,

(க) "வாயு இருக்கிறது."

(உ) "வாயு விளங்குகிறது."

(ங) "வாயுபிரியமாயிருக்கிறது;" எனெனின், வாயு வியர்வையை நீக்குதலால்.

(ச) "வாயு" என்னும் நாம மிருக்கிறது.

(ரு) "உருவமில்லாதபரிசகுணத்தோடுகூடிய" ரூப மிருக்கிறது.

சு. வாயுவின் நாமரூபங்களை விடுவதனுல்,

(க) "ஆகாய மிருக்கிறது."

(உ) "ஆகாயம் விளங்குகிறது."

(ங) "ஆகாயம் பிரியமா யிருக்கிறது;" எனெனின், ஆகாயம் இருத்தற்கும் திரும்புதற்கும் இடங்கொடுக்கிறது.

(ச) "ஆகாயம்" என்னும் நாம மிருக்கிறது.

(ரு) "சப்தகுணத்தோடு கூடிய" ரூப மிருக்கிறது.

எ. ஆகாயத்தின் நாமரூபங்களை விடுவதனுல்,

(க) "பிறகு இன்னது இருக்கிற தென்று எனக்குத்தெரியவில்லை" என்னும் அஞ்

ஞான மிருக்கிறது.

(உ) அந்த "அஞ்ஞானம் விளங்குகிறது;"

(ங) "அஞ்ஞானம் பிரியமா யிருக்கிறது;" ஏனெனின், அஞ்ஞானிகளுக்குப் பிரியமாயிருக்கின்றது. அன்றியும், பிரபஞ்சத்திற்குக் காரணமா யிருத்தலால், ஜீவர்களின் நிருவாகத்தைச் செய்கின்றது.

(ச) "அஞ்ஞானம்" என்னும் நாம மிருக்கிறது.

(ரு) "ஆவரணம் விக்ஷேப மென்னும் சக்திகளையுடைய அநாதி அநிர்வசனீயபாவ ரூப (உண்மைவடிவ)" மென்னும் ரூப மிருக்கின்றது.

அ. அஞ்ஞானத்தின் நாமரூபங்களை விவேதனுல்,

(க) "ஒன்று மில்லை" எனத்தோற்றுவதாகிய சகல பதார்த்தங்களின் அபாவ மிருக்கின்றது."

(உ) "அபாவம் தோற்றுகிறது."

(ங) "அபாவம் சூநியத்தியானிகளுக்குப் பிரியமா யிருக்கின்றது."

(ச) இதற்கு "அபாவம்" என்னும் நாம

மிருக்கிறது.

(ரு) "சகல வஸ்துக்களின் அபாவம் (நிஷேத முகப் பிரதீதிக்கு விஷயம்)" என்னும் ரூப மிருக்கிறது.

கூ. அபாவத்தின் *கூ. நாமரூபங்களை விடுவதனால்,

---

*கூ. "आद्यत्रयं ब्रह्मरूपं जगद्रूपं ततो द्वयं ।
उपक्ष्य नामरूपे द्वे सच्चिदानंदतत्परः ।
समाधिं सर्वदा कुर्याध्दृदयेथवा बहिः ॥

சச்சிதாநந்தமாகிய முதல்மூன்றும் பிரஹ்மத்தின் வடிவம். மற்ற நாமரூபமாகிய இரண்டும் ஜகத்தின்வடிவம். நாமரூப மிரண்டையும் உபேக்ஷித்து, சச்சிதாநந்ததத்பரனாய் இருதயத்திலாவது வெளியிலாவது எப்போதும் சமாதியினைச் செய்யக்கடவன்." என்னும் சரஸ்வதிரஹஸ்யோபநிஷத்தும்,

"यथा नद्यस्स्यन्दमाना समुद्रेऽस्तंगच्छन्ति नामरूपे विहाय । तथा विद्वान्नामरूपाद्विमुक्तः परात्परं पुरुषमुपैति दिव्यम् ॥

எப்படி ஆறுகள் ஓடுகின்றவைகளாய் நாமரூபமிரண்டையும்விட்டுச் சமுத்திரத்தில்மறைகின்றனவோ,

(க) அபாவத்தன்மையின் சொரூபமான அதிஷ்டானமாகிய சத்வஸ்துவே மிஞ்சி யிருக்கின்றது.

(உ) அது அபாவத்தின் அபாவத்தன்மையைப் பிரகாசித்தலால் சித்தாம்.

(ங) துக்கத்திற்கு வேறு யிருத்தலால் ஆநந்தமாம்.

இவ்வாறு,

க. சர்வநாமரூபங்களிலும் அநுசூதமாயிருக்கும் அவ்வியபிசாரியாகிய நாமரூபங்களுக்கதிஷ்டானப்பிரஹ்மம் *எ. சாமானியசைதன்னியமாம். அது சத்தியமாம்.

---

அதுபோல வித்துவான் நாமரூபத்தினின்றும் விடுபட்டவனாய் மேலானவற்றிற்கும் மேலாய் விளங்கும் புருஷனாகியபிரஹ்மத்தை அடைகின்றான்." என்னும் முண்டகசுருதியும், நாமரூபமிரண்டனையும் விட்டபோது மிஞ்சுவது பிரஹ்ம மென்பதனை அறிவிக்கின்றன.

*எ. (க) சுழுத்திமூர்ச்சைசமாதிகளை யறிவது சாமானியசைதன்னியம்.

(உ) "கடத்தை நானறிகிறேன்" என்பதாகப்பிரமாதா, பிரமாணம், பிரமேய மென்னும் திரிபுடியை அறியும் சாக்ஷி சாமானியசைதன்னியம்.

(ங) ஜாக்கிரமுதலிய அவஸ்தைகளின் சந்திகளை அறிவது **சாமானியசைதன்னியம்.**

(ச) அதுபோலவே விருத்திகளின் சந்திகளை யறிவது **சாமானியசைதன்னியம்.**

(ரு) அங்குஷ்டத்தின் அக்கிர(நுனிப்)பாகத்தைய றிவது **சாமானியசைதன்னியம்.**

(சு) தேசாந்தரத்தில் விருத்தி சென்றிருக்குங் காலத்து, அதன் மத்தியபாகத்தை யறிவது **சாமானிய சைதன்னியம்.**

(எ) சூரியசந்திரவடிவமாக விருத்தி யுண்டாகுங் காலத்து, அதன் மத்தியபாகத்தை யறிவது **சாமானிய சைதன்னியம்.**

(அ) "மேரு எனக்குத் தெரியவில்லை" என அஞ்ஞானவிசிஷ்ட(அறியப்படாத)மேருவை யறிவது **சாமானியசைதன்னியம்.**

இச்சாமானியசைதன்னியலக்ஷணத்தினை,

"देशाद्देशान्तरप्राप्तौ संविदः मध्यमेव यत् ।
निमेषेण चिदाकाशं तद्विध्दि मुनिपुङ्गव ॥

ஒரு இடத்தினின்றும் மற்றோரிடத்தில் அறிவு சென்றபோது நிமிஷத்தால் எந்த இடை யிருக்கின்றதோ, அதனை முனிபுங்கவ! சிதாகாசமென்றறி." என்னும்

மகோபநிஷத்தின் நான்காம் அத்யாயவசனமும்,

" अर्थादर्थांतरं चित्ते याति मध्ये तु या स्थितिः।
सा ध्वस्तमननाकारा स्वरूपस्थितिरुच्यते ॥

संशान्तसर्वसङ्कल्पा या शिलावदवस्थितिः।
जाग्रन्निद्राविनिर्मुक्ता सा स्वरूपस्थितिः परा ॥

अहन्तांशे क्षते शांते भेदनिष्पंदाचित्तता।
अजडा या प्रचकति तत्स्वरूपमितीरितम् ॥

ஒரு வஸ்துவினின்றும் மற்றொரு வஸ்துவில் சித்தம் செல்லுங்கால், இடையிலுள்ள நிலை எதுவோ, அது மனனவடிவ மொழிந்த சொரூபஸ்திதி யெனப்படுகின்றது. சர்வசங்கற்பங்களொழிந்ததும், கல்லைப்போன்ற நிலையினதும், ஜாக்கிரசுழுத்திகளினின்று விடுபட்டதுமாகிய நிலை எதுவோ, அது மேலான சொரூபஸ்திதியாம். அகந்தையம்சம் நசித்தொழிந்தவிடத்து, அசைவொழிந்த சித்தத்தன்மையினதாய் அஜடமாய் எது பிரகாசிக்கின்றதோ, அது சொரூபஸ்திதி யென்று சொல்லப்படுகின்றது."

" सत्ता सर्वपदार्थानां नान्या संवेदनादृते।
संबन्धे दृष्टृदृश्यानां मध्ये दृष्टिर्हि यद्वपुः।

द्रष्टृदर्शनदृश्यादि वर्जितं तदिदं परम् ।
देशाद्देशं गते चित्ते मध्ये यच्चेतसो वपुः ।
अजाड्यसंविन्मननं तन्मयो भव सर्वदा ।
अजाग्रत्स्वप्ननिद्रस्य यत्ते रूपं सनातनम् ।
अचेतनं चाजडं च तन्मयो भव सर्वदा ॥
जडतां वर्जयित्वैकं शिलायां हृदयं हि तत् ।
अमनस्कस्वरूपं यत्तन्मयो भव सर्वदा ॥
चित्तं दूरे परित्यज्य योऽसि सोऽसि स्थिरो भव ॥

சகல பதார்த்தங்களின் சத்தையானது சம்வேதன(ஞான)த்தை விட வேறன்று. திருஷ்டா திருசியங்களின் சம்பந்தத்தில் இடையிலுள்ள திருஷ்டியாகிய எச்சரீரம் திருஷ்டா திருசியங்களின்றியதோ, அத்தன்மைய இது(**சோருபஸ்திதி**)மேலானதாம். ஒரு தேசத்தினின்றும் வேறொரு தேசத்திற்குச் சித்தம் செல்லுமிடத்து, இடையிலுள்ள சித்தத்தின் வடிவம் எது ஜாட்யம் விருத்திமனன மின்றியதா யிருக்கின்றதோ, அத்தன்மையனுகுக எப்பொழுதும். ஜாக்கிரசொப்பனசுழுத்திக ளின்றிய உன்னுடைய எந்த வடிவமானது பழைமையானதும் சேதனமின்றியதும் ஜடமின்றியதுமா யிருக்கின்றதோ, அத்தன்மையனுகுக எப்

பொழுதும். சிலேயின்(கல்லின்) இதயம் ஒன்றனேயே ஜடத்தன்மையினை விட்டு, அந்த அமனஸ்க அதாவது மனமிறந்தவடிவம் எதுவோ, அத்தன்மையனுகுக எப்பொழுதும். சித்தத்தினைத் தூரவிலக்கி எதுவாயிருக்கின்ருயோ, அதுவா யிருக்கின்ருய்; ஸ்திரமாகுக." என்னும் **மகோபநிஷத்தின்** ரு-வது அத்யாயத்தின் வசனங்களும்,

" आत्मनो जगतश्चांतर्दृष्टृदृश्यदशान्तरे ।
दर्शनाख्य स्वयात्मानं सर्वदा भावयन् भव ।
स्वाद्यस्वादकसंत्यक्तं स्वाद्यस्वादकमध्यगम् ।
स्वादनं केवलं ध्यायन् परमात्ममयो भव ।
अवलंब्य निरालंबं मध्ये मध्ये स्थिरो भव ॥

ஆத்மாவிற்கும்(தனக்கும்)ஜகத்திற்கும் இடையில் திருஷ்டாதிருசியதசையி னிடையில் தரிசன மென்னும் ஆத்மாவாகிய தன்னை எப்போதும் பாவிப்பவனுகுக. உருசிக்கப்படுபொருள் உருசிப்பவன் என்பவற்றை விட்ட உருசிக்கப்படுவது உருசிப்பதென்பவற்றினிடையி லிருப்பதான கேவல நல்ல உருசிப்பினைத் தியானித்துப் பரமாத்மமய னுகுக. நிராலம்பத்தினை அவலம்பித்து இடையிடையில் நிலேத்தவனுகுக." என்னும் **மகோபநிஷத்தின்** கூ-வது அத்யாயவசனமும், மற்றும் **கடோபநிஷத்து, அந்நபூர்ணோபநிஷத்து** முதலிய உபநிஷத்துக்களும் கூறுதல் காண்க.

உ. குடத்தின் நாமரூபம் படத்தில் இல்லை; படத்தின் நாமரூபம் குடத்தில் இல்லை. அதனால் பரஸ்பர*அ. வியபிசாரமுடைய இந்தநாமரூபங்கள் மித்தையாம்.

இது சாமானியசைதன்னியத்தை அறிவதில் திருஷ்டாந்தமாம்.

ககூசு. வினு:-முற்கூறிய சாமானியசைதன்னியமாகிய பிரஹ்மத்திற்கு எப்படி எல்லாவற்றினும் அதிக சூக்ஷ்மத்தன்மையும் வியாபகத்தன்மையு மிருக்கின்றது?

விடை:-க. யாது யாது காரியமோ, அது அது ஸ்தூலமும் பரிச்சின்னமுமாம்.

உ. யாது யாது காரணமோ, அது அது சூக்ஷ்மமும் வியாபகமுமா (அதிக தேசத்திலுள்ளதுமா)மென்பது நியமம்.

பிரஹ்மம்எல்லாவற்றிற்கும் காரணமா யிருத்தலால், எல்லாவற்றினும் அதிக சூக்ஷ்மமும்

---

*அ. எந்தப் பதார்த்தம் ஓரிடத்திலிருந்து ஓரிடத்திலில்லா திருக்கின்றதோ, அது வியபிசாரமு(மாறுதலு)டையதாம்.

வியாபகமுமா மென்பது இனிக் காட்டப்படுகின்றது.

க. (க) சமுத்திரஜலத்தினின்றும்கடினமாகிய நுரையும் உப்பு முண்டாகின்றன. இதனல் பிருதிவி ஜலத்தின் காரிய மென்று அறியப்படுகின்றது. ஆகையால் பிருதிவியினும் ஜலம் சூக்ஷ்மமும் வியாபகமுமாம்.

(உ) அல்லது பிருதிவியின் அவயவங்களாகிய கல் முதலியவற்றை வஸ்திரத்திற்போட்டால் தங்குகின்றன.

(ஙு) ஜலம் வஸ்திரத்தில் தங்குகிறதில்லை. அன்றியும்,

(ச) பிருதிவியில் எங்கெங்கே வெட்டிப்பார்த்தாலும், அங்கங்கே ஜலம் வெளிப்படுகின்றது.

(ரு) புராணங்களில் பிருதிவியினும் ஜலம் பத்து மடங்கு வியாபகமெனக் கூறப்பட்டிருக்கின்றது.

இதனுலும் ஜலம் பிருதிவியினும் சூக்ஷ்மமும் வியாபகமுமாம்.

உ. (க) அதுபோல, அக்கினிமுதலியவற்றின் வெப்பத்தால் சரீரத்தில் வியர்வையும், மழையு முண்டாகின்றன. இதனால் ஜலம் அக்கினியின் காரியமென் றறியப்படுகின்றது. ஆகையால் ஜலத்தினும் அக்கினி சூக்ஷ்மமும் வியாபகமுமாம்.

(உ) அல்லது, ஜலம் வஸ்திரத்தில் தங்குகிறதில்லை; குடத்தில் தங்குகின்றது.

(ங) சூரியன் முதலியவற்றின் பிரகாசம் குடத்திலும் தங்குகிறதில்லை.

(ச) புராணங்களில் ஜலத்தினும் அக்கினி பத்துமடங்கு வியாபகமெனக் கூறப்பட்டிருக்கின்றது.

இதனாலும் அக்கினி ஜலத்தினும் சூக்ஷ்மமும் வியாபகமுமாம்.

ங. (க) அதுபோல, அக்கினியின் உற்பத்தியும் நாசமும் காற்றின் அதீன(வச)மாம். இதனால் தேயு வாயுவின் காரியமென் றறியப்படுகின்றது. ஆகையால் அக்கினியினும் வாயு சூக்ஷ்மமும் வியாபகமுமாம்.

(உ) அல்லது, சூரியன் முதலியவற்றின் பிரகாசம், குடமுதலிய பாத்திரங்களில் தங்கு

கிறதில்லை; நேத்திரத்தினுல் அறியப்படு
கின்றது. வாயுவோ நேத்திரத்தினுலு ம
றியப்படுகிறதில்லை.

(ங) புராணங்களில் தேயுவினும் வாயு பத்து
மடங் கதிகமெனக் கூறப்பட்டிருக்கின்
றது.

இதனுலும் வாயு அக்கினியினும் சூக்ஷ்மமும்
வியாபகமுமாம்.

ச. (க) அதுபோல, வாயுவின் உற்பத்தி திதில
யங்கள் ஆகாயத்தி(வெளியி)லேயே உண்டாகின்
றன. இதனுல் வாயு ஆகாயத்தின் காரியமென அ
றியப்படுகின்றது. ஆகையால் வாயுவினும் ஆகா
யம் சூக்ஷ்மமும் வியாபகமுமாம்.

(உ) அல்லது, வாயு நேத்திரத்தினு லறியப்படு
கிறதில்லை. ஆனுல் துவக்கினுல் பரிசகு
ணவாயிலாகக் கிரகிக்கப்படுகின்றது. ஆ
காயமோ துவக்கினுலும் கிரகிக்கப்படுகி
றதில்லை.

(ங) புராணங்களில் வாயுவினும் ஆகாயம் பத்
துமடங்கு வியாபகமெனக் கூறப்பட்டி
ருக்கின்றது.

இதனாலும் அது வாயுவினும் சூக்ஷ்மமும் வியாபகமுமாம்.

ரு. (க) அதுபோல, "ஆகாயத்திற்குமேல் என்ன இருக்கும்?" என்று விசாரிக்க, "எனக்கு ஒன்றும் தெரியவில்லை." எனப் புத்தியின் மழுக்கத்திற்கு ஆசிரய (விஷய) மாகிய அஞ்ஞானம் தோற்றுகிறது. இதனால் ஆகாயம் அஞ்ஞானத்தின் காரியமென் றறியப்படுகின்றது. ஆகையால் அந்த அஞ்ஞானம் ஆகாயத்தினும் சூக்ஷ்மமும் வியாபகமுமாம்.

(உ) அல்லது, ஆகாயம் துவக்கினால் கிரகிக்கப்படுகிறதில்லை. ஆனால் மனதினால் கிரகிக்கப்படுகின்றது. அஞ்ஞானம் மனதினாலும் கிரகிக்கப்படுகிறதில்லை.

(ங) சாஸ்திரங்களில் அஞ்ஞானம் ஆகாயத்தினும் அநேகமடங் கதிகமெனக் கூறப்பட்டிருக்கின்றது.

இதனாலும் அது ஆகாயத்தினும் சூக்ஷ்மமும் வியாபகமுமாம்.

சா. (க) அதுபோல, "எனக்குத்தெரியவில்லை" என்னு மநுபவத்திற்கு விஷயமாகிய அஞ்ஞானத்தின் பிரகாசம், அறிவதாகிய சேதனத்தா லு

ண்டாகின்றது.

[க] "அஞ்ஞான மிருக்கிறது;
[உ] விளங்குகிறது;
[ங] அஞ்ஞானிகளுக்குப் பிரியமா யிருக்கின்
றது."

என்றிவ்வாறு அஞ்ஞானத்தில் அநுகூதமாக அஸ்தி பாதிப் பிரியமாகிய பிரஹ்மசேதனம் விளங்குகின்றது. ஆகையால் அஞ்ஞானம் பிரஹ்ம சேதனத்தின் ஆசிரிதமாம். அதனுல் பிரஹ்மசேதனம் அஞ்ஞானத்தினும் சூக்ஷமமும் வியாபகமுமாம்.

(உ) அல்லது, அஞ்ஞானம் மனதினுல் கிரகிக்கப்படுகிறதில்லை. ஆனுல் "எனக்குத் தெரியவில்லை" யென்னும் அநுபவமாகிய இலிங்கத்தால் அதன் அநுமான முண்டாகின்றது. பிரஹ்மசேதனம் சுவயம்பிரகாசவடிவமா யிருத்தலால் ஒருபிரமாணத்திற்கும் விஷயமாகாது.

(ங) சரீரத்திலுள்ள மச்சம்போலப் பிரஹ்மத்தின் ஏகதேசத்தில் அஞ்ஞானமிருக்கின்றது. மிஞ்சியிருக்கும் பிரஹ்மம் சுத்தசொப்பிரகாச மென்று சுருதிகளில் சொல்லப்பட்டிருக்கின்றது.

இதனுலும் அந்தப் பிரஹ்மசேதனம் அஞ்ஞானத்தைவிட சூக்ஷமமும் வியாபகமுமாம்.

இவ்வாறு சாமானியசைதன்னியமாகிய பிரஹ்மத்திற்குச் சகலபிரபஞ்சத்தினும் அதிக சூக்ஷமத்தன்மையும் வியாபகத்தன்மையு மிருக்கின்றது.

ககஎ. வினு:-சாமானியசைதன்னியத்தை அறிதலால் நிச்சயம்செய்யவேண்டியது யாது?

விடை:-க. (க) *க. அஸ்திபாதிப்பிரிய ரூப சாமானியசைதன்னியமாகிய பிரஹ்மமே நான்; (உ) நானே அந்த அஸ்திபாதிப் பிரியரூப சாமானியசைதன்னியமாகிய பிரஹ்மம்;

---

*க. "आत्माहं सर्वभूतानां विभुस्साक्षी न संशयः । ब्रह्मैवाहं सर्ववेदान्तवेद्यं नाहं वेद्यं व्योमवातादिरूपम् । रूपं नाहं नाम नाहं न कर्म ब्रह्मैवाहँसच्चिदानन्दरूपम् ॥

யான் சர்வபூதங்களின் ஆத்மா விபு சாக்ஷி; சம்சயமில்லை. சர்வவேதாந்தங்களினுலும் அறியத்தக்க பிரஹ்மமே யான். ஆகாயம் வாயுமுதலியவடிவ அறியப்படுபொருள் நானல்லன்; உருவம் யானல்லன்; பெயர் யானல்லன்; கர்மம் யானல்லன்; சச்சிதாநந்தவடிவப்பிரஹ்மமேயான்." என்பது சர்வசாரோபநிஷத்து.

௨. நாமரூபப்பிரபஞ்சம் என்னிடத்திற் கற்பிதம் என்று நிச்சயஞ்செய்யவேண்டியது.

கசூஅ. வின:-இப்படி நிச்சயஞ் செய்வதால் என்ன உண்டாகும்?

விடை:-*கo. இப்படி நிச்சயஞ்செய்வதனுல் சகல அநர்த்தநிவிருத்தியும் பரமாநந்தப் பிராப்தியுமாகிய மோக்ஷமுண்டாகும்.

---

*கo. இதனை இக்கலையின் கூ-வது டிப்பணியிலுள்ள முண்டகச்ருதியும்,

" भिद्यते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्वसंशयाः ।
क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन्दृष्टे परावरे ॥

அந்தப் பராவரமாகிய பிரஹ்மாத்மாவை யறிந்தபோது இதயமுடிச்சுகள் பேதிக்கின்றன; சர்வசம்சயங்களும் அறுகின்றன; கர்மங்கள் நசிக்கின்றன." என்றும் முண்டகமும்,

" तदा विद्वान्पुण्यपापे विधूय निरञ्जनः परमं साम्यमुपैति ॥

புருஷனுகிய பிரஹ்மயோனியினை யறிந்தபோது, வித்வான் புண்ய பாபங்களைக்கழுவி, நிரஞ்ஜனனுய்

மேலான சாம்யத்தை யடைகின்றான்." என்னும் முண்டகமும் மற்றும் அநேக சுருதிகளும் கூறுதல் காண்க.

## ஸ்ரீ விசாரசந்திரோதயம் பத்தாங்கலை சாமானியவிசேஷசைதன்னியவர்ணனம் என்பது முடிந்தது.





# ஸ்ரீ விசாரசந்திரோதயம்.

## பதினோராங் கலை.

### தத்துவம்பதார்த்தைக்கியநிரூபணம்.

வாச்சிய மிலக்கிய முணர்ந்து தற்பத
துவம்பதந் தம்மினி லக்கிய மிரண்டையு
மொருமைப் படுத்துக வுறுதிய தாக
வெவ்வே றாகிய விடம்பொருள் காலந்
தர்மமென் பவற்றோ டுபாதி யொழிக்க. (க)

உலக மியாவு மாக்கி நிறுத்தி
யொடுக்கு முற்றறி வுடைய *மாயிக
னீசன் றற்பத வாச்சிய மாவ
னுபாதி யொழிந்த பிரம மிலக்கியம். (உ)

தன்னிற் சம்சாரந் தன்னைக் கொள்ளுஞ்
சுதந்திர மில்லா வவித்யக னாகிய
வற்பஞ்ஞ ஜீவன் வாச்சியந் தொம்பதத்திற்
குபாதி யொழிந்த சாக்கி யிலக்கியம். (ங)

---

* மாயிகன் = மாயையை யுபாதியாக வுடையவன்.

வாச்சிய மிரண்டுந் தம்மில் வேறு
மிலக்கியந் தமக்கிலை வேற்றுமை யிறையு
மிவ்வகைப் பிரமம் யானென் றுணரு
மவனே நிருபாதிகப் பிரம மாகுவன். (ச)

கசுகசு. வி:—"தத்" பத மென்பது யாது?

விடை:—சாமவேதத்தினது சாந்தோக்கிய வுபநிஷத்தின் ஆருவது பிரபாடக(அத்தியாய)த்தில் சுவேதகேது வென்னும் புத்திரனுக்கு அவர் பிதாவாகிய உத்தாலகமுனிவர், ஒன்பது முறை உபதேசித்த,

*க. "तत्त्वमसि ॥ தத்துவமஸி" என்னும் மகாவாக்கியத்தின் முதற்பதம் "தத்" என்னும் பதமாம்.

---

*க. (க) இத்தத்துவமஸியினைப் போல

(உ) "प्रज्ञानं ब्रह्म ॥ பிரஞ்ஞானம் பிரஹ்மம்." என்பது இருக்குவேதத்தின் ஐதரேயவுபநிஷத் மகாவாக்கியம்.

(ங) "अहं ब्रह्मास्मि ॥ அகம்பிரஹ்மாஸ்மி." என்பது எஜுர்வேதத்தின் பிருகதாரணியகவுபநிஷத் மகாவாக்கியம்.

உ00. வினா:–"துவம்" பதமென்பது யாது?

விடை:–இதே "தத்துவமஸி" மகாவாக்கியத்தின் இரண்டாவது பதம் "துவம்" பதமாம்.

உ0க. வினா:–வாச்சியார்த்தம் இலக்ஷியார்த்தமென்பவை யாவை?

விடை:–சத்தத்திற்கு அர்த்தத்தோடுள்ள சம்பந்தம் சத்தத்தின் விருத்தி யெனப்படும். அந்த விருத்தி இரண்டு வகையாம்:–

---

(ச) " अयमात्मा ब्रह्म ॥ அயமாத்மா பிரஹ்மம்." என்பது அதர்வணவேதத்தின் மாண்டூக்கியவுபநிஷத் மகாவாக்கியம்.

(க) "தத்" பதத்திற்கு வாச்சியார்த்தமாகிய ஈசுவரனும், இலக்ஷியார்த்தமாகிய சுத்தப்பிரஹ்மமுமே முற்கூறிய மூன்று மகாவாக்கியங்களிலுமுள்ள "பிரஹ்ம" பதத்திற்கு வாச்சியார்த்தலக்ஷியார்த்தங்களாம்.

(உ) "துவம்"பதத்திற்கு வாச்சியார்த்தமாகிய ஜீவனும், இலக்ஷியார்த்தமாகியகூடஸ்தசாக்ஷியுமேமுற்கூறிய மூன்று மகாவாக்கியங்களிலுமுள்ள "பிரஞ்ஞானம்", "அகம்", "அயம்" பதத்தோடுகூடிய "ஆத்மா" என்னும் இம்மூன்றுபதங்களுக்கும் வாச்சியார்த்தலக்ஷியார்த்தங்களாம். அன்றியும் "தத்துவமஸி" வாக்கிய முழுவதிற்குமுள்ள ஜீவப்பிரஹ்மஐக்கியமா

க. ஒன்று சக்திவிருத்தி;

உ. மற்றொன்று இலக்ஷணாவிருத்தி.

க. சத்தத்தில் அர்த்தஞானத்தை உண்டு பண்ணும் சாமர்த்தியமாகிய சத்தத்திற்கு அர்த்தத்தோடுள்ள சாக்ஷாத் சம்பந்தமானது சத்தத்தின் *உ. சக்திவிருத்தியாம்.

உ. சக்திவிருத்தியினால் அறியப்பட்ட அர்த்தத்தின்வாயிலாகச் சப்தத்திற்கு அர்த்தத்தோடுள்ள பரம்பரையாகிய சம்பந்தம் சத்தத்தின் இலக்ஷணாவிருத்தியாம்.

க. அவற்றுள், சக்திவிருத்தியினால் எந்த அர்த்தம் அறியப்படுகின்றதோ, அது சப்தத்தின் வாச்சியார்த்தமெனப்படும். இதனையே சக்கியார்த்தமென்றும், முக்கியார்த்தமென்றுங்கூறுவர்.

உ. இலக்ஷணாவிருத்தியினால் அறியப்படும் அர்த்தம் சப்தத்தின் இலக்ஷ்யார்த்தமெனப்படும்.

---

கிய அர்த்தமே முற்கூறிய மூன்று மகாவாக்கியங்களுக்கும் அர்த்தமாம்.

சாந்தோக்கியத்தின் ஒன்பதாமுறை உபதேசத்தைத் தத்துவமஸிமகாவாக்கியவுபதேசம் என்னும் எம்மாற் செய்யப்பட்ட நூலிற் காண்க.

*உ. இந்தச் சக்திவிருத்தியின் இலக்ஷணத்தில்

உ௰௨. வினா:—இலக்ஷணாவிருத்தி எத்தனைவகை யாம்?

விடை:—௧. ஜஹத்து. ௨. அஜஹத்து. ௩. பாகத்தியாகம்(ஜஹதஜஹத்து)என்னும் பேதத்தால் இலக்ஷணாவிருத்தி மூன்றுவகையாம்.

உ௰௩. வினா:—மூன்றுவிதமாகிய இலக்ஷணையின் இலக்ஷணமும் உதாரணமும் எவை?

விடை:—௧. எங்கே வாச்சியார்த்தம் முழுவதும் விடுபட்டு, வாச்சியார்த்தத்தின் சம்பந்தியானது கிரகிக்கப்படுகின்றதோ, அது ஜகத்திலக்ஷணை(விட்டலக்கணை)யாம்.

ஒரு புருஷன் ஒருவனை "இடைச்சேரி எங்கேயிருக்கிறது" என்று கேட்க, அதற்கவன் "இடைச்சேரி கங்கையில் இருக்கிறது" என்றுசொல்வானாயின், அங்கே, கங்கை என்னும் பதத்திற்கு வாச்சியார்த்தமாகிய தேவநதியின் பிரவாகத்தில் இடைச்சேரியானது சம்பவியாது. ஆகை

---

அந்நியமதஸ்தர்கொள்கைகளும், அவற்றின் கண்டனமும், சித்தாந்தமும் விசாரசாகர விருத்திப்பிரபாகாகிரந்தங்களிற் காண்க.

யால் வாச்சியார்த்தமாகிய தேவநதியின் பிரவா
கம் முழுவதும் விடுபட்டு, அதன் சம்பந்தியாகி
ய தீரம்(கரை)கொள்ளப்படுகிறது.

உ. எங்கே வாச்சியார்த்தம் விடுபடாமல், அத
ன்சம்பதியானது கிரகிக்கப்படுகின்றதோ, அது
அஜஹத்திலக்ஷணே(விடாதலக்கணே)யாம்.

ஒருவன் "சிவப்பு ஓடுகிறது" என்று சொல்
வாஞயின், அங்கே சிவப்பு என்னும் பதத்திற்கு
வாச்சியார்த்தமாகிய செந்நிறத்தில் ஓடுதல் பொ
ருந்தா தாகையால், செந்நிறமுடைய குதிரை ஓ
டுகிறதென வாச்சியார்த்தம் விடுபடாமல், அதன்
சம்பந்தியாகிய குதிரை யென்னும் அதிக அர்த்
தம் கிரகிக்கப்படுகின்றது.

ங. எங்கே விரோதமுடைய சில வாச்சிய பா
கம் விடுபட்டு, அதன் சம்பந்தியாகிய விரோதமி
ல்லாத சில வாச்சியபாகம் கொள்ளப்படுகின்ற
தோ, அது பாகத்தியாகலக்ஷணே(விட்டுவிடாத
லக்கணே)யாம்.

முன் ஒரு தேசகாலத்தில் பார்க்கப்பட்ட தே
வதத்தன் அந்நியதேசகாலத்தில் பார்க்கப்படுவா
ஞயின், அப்போது அவனைப் பார்க்கும் சோம
தத்தனைவன்" அந்தத்(தூர)தேசத்திலும் அ

தக்(பூத)காலத்திலும்பார்க்கப்பட்ட தேவதத்தன் எவனோ, அவனே இந்தத்(சமீப)தேசத்தில் இந்தக் (வர்த்தமான)காலத்தில்வந்திருக்கிறான்". என்று சொல்லுகிறான். இங்கே அந்தத் தேசகாலமும் இந்தத் தேசகாலமுமாகிய வாச்சியபாகங்களுக்கு ஐக்கிய விரோதமிருத்தலால், அவற்றின் பார்வை விடுபட்டு, "தேவதத்தன் இவன்தான்" என்னும் விரோதமில்லாத வாச்சியபாகம் கொள்ளப்படுகின்றது.

உ௦௪. வினா:-மூன்றுவித இலக்ஷணைகளில் மகாவாக்கியத்தில் எந்த இலக்ஷணை பொருந்தும்?

விடை:-௧.எங்கேவிட்டலக்கணையிருக்கின்றதோ, அங்கே வாச்சியார்த்தம் முழுவதும் விடுபடுகின்றது. மகாவாக்கியத்தில்விட்டலக்கணையைக் கொள்ளுவோமாயின்,

(௧) "தத்" "துவம்" பதங்களின் வாச்சியார்த்தத்தில்பிரவேசித்துள்ள பிரஹ்மசைதன்னியசாக்ஷிசைதன்னியங்களுக்கு விடுபாடுண்டாய்,

(உ) அவற்றினும் வேறாகிய அசத்து ஜடதுக்கரூபப் பிரபஞ்சம் கொள்ளப்படுவதாகும். அல்லது சமஷ்டிவியஷ்டிப்பிரபஞ்சமயமான உபா

தியி (விசேஷணவடிவ வாச்சியபாகத்தி) னையும் சேதனத்தோடு விடுவதனுல் மிஞ்சியிருக்கும்சூநி யம் கொள்ளப்படுவதாகும்.

அதனுல் பெரும் அநர்த்தத்தி னடைவு உண் டாகும். அதனுற் புருஷார்த்தமும் சித்தியாது. ஆகையால் மகாவாக்கியத்தில் விட்டலக்கணை பொருந்தாது.

௨. எங்கே விடாதலக்கணை யிருக்கின்றதோ அங்கே வாச்சியார்த்தத்தின் எப்பாகமும் விடுப டுகிறதில்லை; அதிக அர்த்தம் கொள்ளப்படுகின் றது. மகாவாக்கியத்தில் விடாதலக்கணையைக் கொள்ளுவோமாயின், "தத்" "துவம்" பதவா ச்சியார்த்தங்கள் எப்படியோ அப்படியே யிருக் கும். அதனோடு சூநியவடிவ அதிக அர்த்தத்தினை யும் கிரகிக்கவேண்டியதாகும். அதனுல் ஐக்கிய விரோதம் நீங்காது. அதனுல் இலக்ஷணையைச் செய்ததற்கு ஒரு பிரயோஜனமும் சித்தியாது. ஆகையால் மகாவாக்கியத்தில் விடா லக்கணை பொருந்தாது.

௩. எங்கே பாகத்தியாகலக்ஷணை யிருக்கின்ற தோ, அங்கே விரோதமுடைய பாகம் விடுபட்டு, விரோதமில்லாத பாகம் கொள்ளப்படுகின்றது.

மகாவாக்கியத்தில் பாகத்தியாக லக்ஷணையைக் கொள்ளுவோமாயின்,

க. "தத்" "துவம்" பதங்களின் வாச்சியார்த்தங்களினின்றும் தர்மத்தோடுகூடிய மாயை அவித்தையாகிய விரோதிபாகத்தின் விடுபாடுண்டாகிறது.

உ. விரோதமில்லாத அசங்கசுத்தசேதனபாகம் கொள்ளப்படுகின்றது.

ஆதலால்,

(க) அவற்றிற்கு ஐக்கியமும் பொருந்துகின்றது.

(உ) அதனால்பரமபுருஷார்த்தத்தின்பிராப்தியுண்டாகின்றது.

ஆகையால் மகாவாக்கியார்த்தத்தில் பாகத்தியாகலக்ஷணை பொருந்தும்.

உ0௹. வினா:—"தத்" பதத்தின் வாச்சியார்த்தலக்ஷியார்த்தங்களெவை?

விடை:—க. அவ்வியாகிருதமாகிய மாயை ஈசுவரனுக்குத் தேசமாம்.

உ. உற்பத்தி திதி பிரளய மென்னு மிம்மூன்

ளம் ஈசுவரனுக்குக் காலங்களாம்.

௩. சத்துவகுணம் இரஜோகுணம் தமோகுணம் என்னு மிம்மூன்றும், ஈசுவரனுக்கு *௩. வஸ்துக்(சிருஷ்டி சாமக்கிரியை)களாம்.

௪. விராட்டு இரணியகருப்பம் அவ்வியாகிருதம் என்னு மிம்மூன்றும் ஈசுவரனுக்குச் சரீரங்கள்.

௫. வைசுவானரன் சூத்திராத்மா அந்தரியாமி என்னும் இம்மூவரும் ஈசத்தன்மையின் அபிமானிகள்.

---

*௩. மாயையும் மூன்றுகுணங்களும் ஒரே பதார்த்தமாகையால், ஈசுவரனது தேசவஸ்துசரீரங்களுக்கு ஏகத்துவ முண்டாகின்றது. ஆயினும் குயவனுக்குக் குடத்தைச் செய்ய,

(க) மிருத்திகையாகிய பிருதிவி தேச(இட)மாயும்,

(உ) மிருத்திகையின் பிண்டம் (திரள்) வஸ்துவாயும்,

(௩) எலும்புமுதலிய வடிவினதாகிய பிருதிவியின் பாகம் சரீரமாயு மிருக்கின்றன.

அவற்றிற்கு ஏகத்துவம் சம்பவியாதென்ப தில்லை. அதுபோல ஈசுவரனது தேசமுதலியவற்றிற்கும் ஏக

சு. "ஒருவனுகியநான் அநேகமாக ஆவேன்" என்னும் * ச. பார்வைமுதல் "ஜீவரூபமாகப் பிரவேசித்தார்" என்பதுவரையிலுள்ள சிருஷ்டி ஈசுவரனது காரியமாம்.

---

எ. க. சருவசக்தித்துவம், உ. சருவஞ்ஞத்துவம், ௩. வியாபகத்துவம், ச. ஏகத்துவம், ரு. சுதந்திரத்துவம், சு. சாமர்த்தியம், எ. பரோக்ஷத்துவம், அ. மாயாவுபாதியுடைமை என்னு மிவ்வெட்டும் ஈசுவரனது தர்மங்கள்.

க. (க) இவைஎல்லாவற்றேடும்கூடியமாயை,

(உ) அதிலுள்ள சிற்பிரதிபிம்பமாகிய சிதாபாசன்,

---

த்துவம் சம்பவியா தென்ப தில்லை.

*ச. "ईक्षणादिप्रवेशान्ता सृष्टिरीशेन कल्पिता ॥

ஈக்ஷணமுதல் பிரவேசபரியந்தமான சிருஷ்டி ஈசுவரனுல் கற்பிக்கப்பட்டது." என்பது மகோபநிஷத்தும் வராகோபநிஷத்துமாம். ஈக்ஷணமுதல் பிரவேசபரியந்தமான சிருஷ்டி சாந்தோக்கியம் ஆறுவது பிரபாடகத்திலும் மற்றும் தைத்திரீயம், ஐதரேயமுதலிய அநேக சுருதிகளிலும் கூறப்பட்டிருத்தல்காண்க.

(ங) அவற்றிற்கதிஷ்டானமாகிய பிரஹ்மம் என்னும்

இவை எல்லாம் சேர்ந்து ஈசுவர னெனப்படும்.
*ரு. அது "தத்" பதத்திற்கு வாச்சியார்த்தமாம்.

---

*ரு. "तत्रपारोक्ष्यशबलस्सर्वज्ञत्वादिलक्षणो मायोपाधिः सच्चिदानन्दलक्षणो जगद्योनिस्तत्पदवाच्यो भवति ॥

அம்மகாவாக்கியங்களில் பரோக்ஷசபளமாய்ச் சர்வஞ்ஞத்துவமுதலிய லக்ஷணமுள்ள மாயையை உபாதியாகவுடைய சச்சிதாநந்தலக்ஷண ஜகத்காரணமான ஈசுவரன் தத்பதவாச்சியமாம்." என்பது பைங்கலம்.

"ब्रह्मैव स्वशक्तिं प्रकृत्यभिधेयामाश्रित्य लोकान्सृष्ट्वा प्रविश्यान्तर्यामित्वेन ब्रह्मादीनां बुद्धीन्द्रियनियन्तृत्वादीश्वरः ॥

பிரஹ்மமே பிரகிருதி யென்னும் தனது சக்தியினை ஆசிரயித்து, லோகங்களைச் சிருஷ்டித்து, அந்தரியாமித்தன்மையால் பிரவேசித்து, பிரஹ்மாமுதலியோரின் புத்தீந்திரியங்களை நியமனஞ்செய்கின்றமையால் ஈசுவரனும்." என்பது நிராலம்பம்.

உ. இவை எல்லாவற்றோடும் கூடியமாயாசிதா பாசபாகத்தை விட்டு, மிஞ்சியிருக்கும் விராட்டு இரணியகருப்ப அவ்வியாகிருதங்களுக்கு அதிஷ்டான ஈசுவரசாக்ஷியாகிய சுத்தப் பிரஹ்மம், "தத்" பதத்திற்கு இலக்ஷியார்த்த மாம்..

உ೦௬. வின:–பிரஹ்மத்திற்கும் மாயையில் பிரதிபிம்பனாகிய ஈசுவரனுக்கும் பரஸ்பர அத்தியாசம் (அந்நியோந்நியாத்தியாசம்) எப்படியிருக்கின்றது ?

விடை :–அவிசாரதிருஷ்டியால்,

பிரஹ்மத்தினது சத்தியத்தன்மையின் சமுசர்க்கம்(தாதாத்மியசம்பந்தம்) ஈசுவரனிடத்து அத்தியஸ்தமாகின்றமையால், ஈசுவரன் சத்தியமாகத் தோற்றுகின்றார்.

---

" सत्यज्ञानमनन्तमानन्दं सर्वज्ञत्वाद्युपेतं मायोपाधिकं तत्पदार्थः परमात्मा ॥

சத்தியஞான அநந்த ஆநந்தமாய்ச் சர்வஞ்ஞத்துவ முதலியவற்றோடுகூடிய மாயோபாதிகன் தத்பதத்திற்கு வாச்சியமான பரமாத்மாவாம்." என்பது சர்வசாரம்.

உ. ஈசுவரனது சொரூபமும் அவரது காரணத்தன்மையின் சொரூபமும் பிரஹ்மத்தில் அத்தியஸ்தமாகின்றமையால், பிரஹ்மம் ஜகத்திற்குக் காரணமாகத் தோற்றுகின்றது. இதனையே தடஸ்தலக்ஷணத்தை அறிவிக்கும் சுருதிபுராண ஆசாரியர்களது வசனங்கள் அநுவாதஞ் செய்கின்றன.

இவ்வாறு பிரஹ்மத்திற்கும் ஈசுவரனுக்கும் பரஸ்பரஅத்தியாச மிருக்கின்றது.

உ0எ. வினு :—அவ்வத்தியாசம் எதனுல் நிவர்த்தியாம் ?

விடை :—அவ்வத்தியாசம் விவேகஞானத்தால் நிவர்த்தியாம்.

உ0அ. வினு :—“ துவம் ” பதத்தின் வாச்சியார்த்தலக்ஷியார்த்தங்க ளெவை ?

விடை :—க. நேத்திரம், உ. கண்டம், ந. இருதயம் என்னு மிம்மூன்றும் ஜீவனுக்குத் தேசமாம்.

உ. ஜாக்கிரம் சொப்பனம் சுழுத்தி என்னுமிம்மூன்றும் ஜீவனுக்குக் காலமாம்.

ந. ஸ்தூலம் சூக்ஷ்மம் காரணம் என்னு மிம்

M. வடிவேல்



மூன்றும் ஜீவனுக்கு வஸ்துக் (போகசாமக்கிரி) களாம்.

௪. இதுவே சரீரமுமாம்.

௫. விசுவன் தைஜசன் பிராஞ்ஞனென்னுமிம் மூவரும் ஜீவத்தன்மையின் அபிமானிகள்.

௬. ஜாக்கிரமுதல்மோக்ஷபரியந்தமுள்ளபோகமாகிய சமுசாரம் ஜீவனது காரியமாம்.

௭. ௧. அற்பசக்தித்துவம், ௨. அற்பஞ்ஞத்துவம், ௩. பரிச்சின்னத்தும், ௪. நாநாத்துவம், ௫. பரதந்திரத்துவம், ௬. சாமர்த்தியமின்மை, ௭. அபரோக்ஷத்துவம், ௮. அவித்யோபாதியுடைமை என்னுமிவ்வெட்டும் ஜீவனது தர்மங்களாம்.

௧. (௧) இவை எல்லாவற்றோடும் கூடிய அவித்தை,

(௨) அதில் பிரதிபிம்பமாகிய சிதாபாசன்,

(௩) அவற்றிற்கதிஷ்டானமாகிய கூடஸ்தர்,

என்னுமிவை எல்லாஞ்சேர்ந்து ஜீவனெனப்படும். * ௬. அது "துவம்" பதத்திற்கு வாச்யார்த்தமாம்.

௨. இவை எல்லாவற்றோடும் கூடிய சிதாபாச

பாகத்தைவிட்டு, மிஞ்சியிருக்கும் ஸ்தூலசூக்ஷ்ம காரணசரீரங்களுக்கு அதிஷ்டான ஜீவசாக்ஷி

---

*சு. " स एवान्तःकरणसंभिन्नबोधोऽस्मत्प्रत्ययावलंघनस्त्वंपदवाच्यो भवति ॥

அவ்வீசுவரனே அந்தக்கரணத்தோடுகூடிய அறிவுடையவனாய், யான் என்னும் விருத்திக்குப்பற்றுக்கோடாய்த் துவம்பதவாச்சியனாகின்றான்." என்பது பைங்கலம்.

" सत्यज्ञानमनन्तमानन्दं सर्वशरीरोपाधिविनिर्मुक्तं कटकमकुटाद्युपाधिरहितस्वर्णघनवद्विज्ञानघनचिन्मात्रस्वभावमात्मचैतन्यं ब्रह्म यदवभासते तदविद्योपाधिकं त्वंपदार्थस्स प्रत्यगात्मा ॥

சத்தியஞான அநந்த ஆநந்தமாய்ச் சகலசரீரோபாதிகளினின்றும் விடுபட்டதாய்க் கடகமகுடமுதலிய உபாதிகளின்றிய பொற்கட்டியினைப்போல ஞானகனசிந்மாத்திரஸ்வபாவமாயுள்ள ஆத்மசைதன்னியமான எந்தப் பிரஹ்மம் பிரகாசிக்கின்றதோ, அது அவித்தையை யுபாதியாகவுடைய துவம்பதவாச்சியமாம். அஃது பிரத்தியகாத்மாவாம்." என்பது சர்வசாரம்.

யாகிய கூடஸ்த ஆத்மா "துவம்" பதத்திற்கு இலக்ஷியார்த்தமாம்.

உ௦கூ. வினா:—கூடஸ்தருக்கும் புத்தியில்பிரதி பிம்பமாகிய ஜீவனுக்கும் பரஸ்பர அத்தியாசம் எப்படியாகும்?

விடை:—அவிசாரதிருஷ்டியில்,

க. கூடஸ்தரது சத்தியத்தன்மையின் சமுசர்க்கம் (தாதாத்மிய சம்பந்தம்) ஜீவனிடத்தில் அத்தியஸ்தமாகின்றமையால், ஜீவன் மித்தையாகத் தோற்றாமல் சத்தியமாகத் தோற்றுகின்றது.

உ. ஜீவனது சொரூபமும் அதனது கர்த்திருத்துவாதி தர்மங்களும் கூடஸ்தரிடத்தில் அத்தியஸ்தமாகின்றமையால், கூடஸ்தர் அகர்த்தாவும் அபோக்தாவும், அசமுசாரியும், நித்தியமுக்தமும், அசங்கமுமாகிய பிரஹ்மமாகத் தோற்றாமல், அதனினும் விபரீதமாகத் தோற்றுகின்றார்.

இவ்வாறு கூடஸ்தருக்கும் ஜீவனுக்கும் பரஸ்பர அத்தியாசமாம்.

உக௦. வினா:—அந்த அத்தியாசம் எதனால் நிவர்த்தியாம்?

விடை :-அந்த அத்தியாசம் விவேகஞானத்தால் நிவர்த்தியாம்.

உகக. வினு :-"தத்" பத "துவம்" பதார்த்தங்களுக்கு மகாவாக்கியத்திற் சொல்லப்பட்ட ஐக்கியம் எப்படிச் சம்பவிக்கும்?

விடை :-க. "தத்" பத "துவம்" பதார்த்தங்களின் வாச்சியார்த்தமாகிய உபாதிசகித சைதன்னியங்(ஈசுவர ஜீவர்)களின் ஐக்கியத்திற்கு விரோத மிருந்தபோதிலும்,

உ. "தத்"பத "துவம்" பதங்களின் இலக்ஷியார்த்தமாகிய பிரஹ்மாத்மாக்களின் ஐக்கியத்திற்குச் சிறிதும் விரோத மில்லை.

இவ்வாறு "தத்" பத "துவம்" பதார்த்தங்களுக்கு மகாவாக்கியத்திற் கூறிய ஐக்கியம் சம்பவிக்கும்.

உகஉ. வினு :-"நான் பிரஹ்மம்." என்னும் பிரஹ்மாத்மவைக்கியஞானம் யாருக் குண்டாகின்றது?

விடை :-இந்த ஞானம் சிதாபாசனுக் குண்டாகின்றது.

உகங. வினா:-பிரஹ்மத்துக்கு வேறாகிய சிதா பாசன் தன்னை எப்படிப் பிரஹ்மரூபமாக அறி வன் ?

விடை :-க. ஜீவத்தன்மைக்கு அதிஷ்டானமா கிய கூடஸ்தருக்குப் பிரஹ்மத்தோடு முக்கிய அபேத மிருக்கின்றது.

உ. புத்தியோடுகூடிய சிதாபாசனுக்குத்தன்னு சொரூபத்தைப் பாதித்தலால், பிரஹ்மத்தோடு அபேத முண்டாகின்றது.

ஆகையால்,

க. சிதாபாசன் தனது சொரூபத்தைப் பாதி த்துத், தன்னை அகம் சப்தத்திற்கு இலக்ஷியார்த் தமாகிய கூடஸ்தராக அறிகிறான்.

உ. தனது நிஜரூபமாகிய கூடஸ்தரை "நான் கூடஸ்தர்" என்றபிமானித்துக்கொண்டு, "நான் பிரஹ்மம்" என்றறிகிறான். இவ்வாறு சிதாபா சன் தன்னைப் பிரஹ்மரூபமாக அறிகிறான்.

உகச. வினா :-இந்தத் "தத்" "துவம்" பத இலக்ஷியார்த்தங்களின் ஐக்கியத்தில் திருஷ்டாந் தம் யாது ?

விடை :--திருஷ்டாந்தம், க. (க) கடமடவுபாதிகளையுடைய கடாகாசமடாகாசங்களுக்கு ஐக்கிய விரோத மிருந்தபோதிலும்,

(உ) கடமடங்களாகிய உபாதிகளின் திருஷ்டியை விட்டு, ஆகாசமாத்திரத்திற்கு ஐக்கிய விரோத மில்லை.

உ. (க) கண்ணாடிப்பாத்திரத்திலும் மண்பாத்திரத்திலும் எரியும் விளக்கின் உபாதிகளாகிய இரண்டு பாத்திரங்களுக்கும் ஐக்கிய விரோத மிருந்தபோதிலும்,

(உ) அக்கினித்தன்மையால் தீபத்தின் ஐக்கியத்திற்கு விரோத மில்லை.

ங. (க) இராஜாவுக்கும் இடையனுக்கும் அவர்களின் உபாதிகளாகிய சேனையினாலும் ஆட்டுமந்தையினாலும் ஐக்கியத்திற்கு விரோத மிருந்தபோதிலும்,

(உ) மனிதத் தன்மையால் ஐக்கியத்திற்கு விரோத மில்லை.

ச. (க) கங்காஜலத்திற்கும் கங்கையின் கலசஜலத்திற்கும் அவற்றின் உபாதிகளாகிய ஆறுகல

சங்களால் ஐக்கியவிரோத மிருந்தபோதிலும்,

(உ) கங்கைநீர்மாத்திரத்தால் ஐக்கியத்திற்கு விரோத மில்லை.

ரு. (க) சமுத்திரத்திற்கும் நீர்த்துளிக்கும் அவற்றின் உபாதிகளாகிய சமுத்திரதிவலைகளால் ஐக்கியவிரோத மிருந்தபோதிலும்,

(உ) ஜலமாத்திரத்தால் ஐக்கியத்திற்கு விரோதமில்லை.

சு. (க) ஓர் புருஷனைப் பிதாவை முன்னிட்டுப் புத்திரனென்றும், பாட்டனை முன்னிட்டுப்பௌத்திர(பேர)னென்றும் சொல்லுகிறார்கள். அவனது உபாதிகளாகிய பிதாபாட்டன்மார்களால் ஐக்கியத்திற்கு விரோத மிருந்தபோதிலும்,

(உ) புருஷன்மாத்திரத்தால் ஐக்கியத்திற்கு விரோத மில்லை.

எ. காசியில் ஓர் அரசனிருந்தான். அவன் யானையில் உட்கார்ந்து பவனிவருவதைச் செவ்வையாகப் பார்த்திருந்த ஓர் யாத்திராவாசியாகிய தேவதத்தன், சிலகாலத்திற்குப் பின் அக்காசியரசனை ஓர் வேற்றரசன் அவனது இராச்சியத்தை யுங் கவ

ர்ந்துகொண்டு துரத்திவிட, அவன் கோவணம் தரித்து, அங்கத்தில் விபூதி யணிந்து, சுரைக்குடுக்கையும், தண்டமும் கையிற்கொண்டவனய், வெறுங்காலோடு தீர்த்தயாத்திரைக்குப் புறப்பட்டுச் சுற்றிக்கொண்டே தன் கிராமத்திற்கு வரக்கண்டு, அந்நிய யாத்திராவாசியாகிய சோமதத்தனை நோக்கி, நாம் காசியில் எந்த இராஜாவைப் பார்த்தோமோ "அவன்தான் இவன்" என்று சொன்னான்.

அதற்கு அந்நிய யாத்திராவாசியாகிய சோமதத்தன்,

(க) அந்தத் தேசம் வேறு; இந்தத் தேசம் வேறு;

(உ) அந்தக் காலம்(அவஸ்தை)வேறு; இந்தக் காலம் வேறு;

(ங) அவனது வஸ்து(சாமக்கிரியை)வேறு; இவனது வஸ்து வேறு;

(ச) அவனது அபிமானம் வேறு; இவனது அபிமானம் வேறு;

(ரு) அவனது காரியம் வேறு; இவனது காரியம் வேறு;

(௬) அவனது தர்மம் வேறு; இவனது தர்மம் வேறு;

ஆகையால் அந்தக் காசி அரசனுக்கும் இந்தச் சந்நியாசிக்கும் ஐக்கியம் எப்படிக் கூடுமென, அதற்கு அத்தேவதத்தன், அவனுடையவும் இவனுடையவுமாகிய (௧) தேச (௨) கால (௩) வஸ்து (௪) அபிமான (௫) காரிய (௬) தர்மங்களை விட இரண்டிலும் அநுசூதமாயுள்ள புருஷன்மாத்திரம் ஒருவனே என்றான்.

சித்தாந்தம் :—அதுபோல, ஜீவேசுவரர்களது தேசகாலமுதலியவற்றை விட்டால், இருவரிலும் அநுசூதமாயுள்ளசேதனமாத்திரமாகிய பிரஹ்மமும் ஆத்மாவும் ஒன்றேயாம். ஆகையால் "பிரஹ்மமே நான், நானே பிரஹ்மம்." என்று திடமாக நிச்சயம் செய்தல்வேண்டும்.

இதுவே தத்துவஞானம். *எ. இதனாலேயே சருவதுக்கநிவிருத்தியும் பரமாநந்தப்பிராப்தியுமாகிய மோக்ஷ முண்டாகின்றது.

---

*எ. தத்துவம்பதங்களின் ஐக்கியத்தையும், மகாவாக்கியத்தினால் அகம்பிரஹ்மாஸ்மி என்னும் திடாபரோக்ஷமுண்டாம் என்பதையும், அதனாலேயே சர்வ

துக்கநிவிருத்தி பரமாநந்தப்பிராப்தியாகிய மோக்ஷமுண்டாம் என்பதையும் அநேகம் சுருதிகள் கூறியிருக்கின்றன. அவற்றுள் சில வருமாறு:—

" यत्परं ब्रह्म सर्वात्मा विश्वस्यायतनं महत् ।
सूक्ष्मात्सूक्ष्मतरं नित्यं तत्त्वमेव त्वमेव तत् ॥
जाग्रत्स्वप्नसुषुप्त्यादि प्रपञ्चं यत्प्रकाशते ।
तद्ब्रह्माहमिति ज्ञात्वा सर्वबन्धैः प्रमुच्यते ॥
त्रिषु धामसु यद्भोज्यं भोक्ताभोगश्च यद्भवेत् ।
तेभ्यो विलक्षणस्साक्षी चिन्मात्रोऽहं सदाशिवः ॥
मय्येव सकलं जातं मयि सर्वं प्रतिष्ठितम् ।
मयि सर्वं लयं याति तद्ब्रह्माद्वयमस्म्यहम् ॥

எது பரப்பிரஹ்மமாயும், சர்வாத்மாவாயும், விசுவத்திற்கிடமாயும், மகத்தாயும், சூக்ஷமத்திலும் சூக்ஷமமாயும் நித்தியமாயு முள்ளதோ, அதுவே நீ; நீயே அது. ஜாக்கிரம் சொப்பனம் சுழுத்திமுதலிய ஜகத்தினை எது பிரகாசிக்கின்றதோ அதாவது அறிகின்றதோ, அந்தப் பிரஹ்மம் யான் என்றறிந்து, சர்வபந்தங்களினின்றும் விடுபடுகின்றான். முப்புரங்களிலும்

அதாவது மூன்று அவஸ்தைகளிலும் எந்தப் போஜ்
யம் (புசிக்கப்படுபொருள்) போக்தா போக முண்
டோ, அவற்றிற்கு விலக்ஷணமான சாக்ஷி சின்மாத்
திரமாகிய யான் சதாசிவன். என்னிடத்திலேயே யா
வும் உண்டாயின. என்னிடத்திலேயே யாவும் நிலைத்
திருக்கின்றன. என்னிடத்திலேயே யாவும் ஒடுங்குகி
ன்றன. அத்தன்மைய பிரஹ்மமாகிய அத்வயம்
யான்." என்னும் இவை முதலியன கைவல்யசுருதி.

"परमात्मात्मनोरेकत्वज्ञानेन तयोर्भेद एव विभग्नः
सा सन्ध्या ॥

பரமாத்மா ஆத்மா வென்னு மிரண்டன் ஒருமை
(ஒன்றெனுந்தன்மை)ஞானத்தினால் அவ்விரண்டன்
பேதமே தொலைந்தது. அது சந்தியாவாம்." என்
பது பரமஹம்ஸோபநிஷத்து.

"सर्वोपाधिविमुक्तं निर्विशेषचिन्मात्रं सदद्वैतमान-
न्दममायं ब्रह्म । तद्धि त्वंपदार्थादौपाधिकात्तत्पदार्था-
च्चौपाधिकभेदाद्विलक्षणमभेद्यमधिष्ठानत्वोपलक्षितं शुद्धं
पारमार्थिकं सत्तामात्रमविनाशि ॥

சர்வோபாதிகளினின்று விடுபட்டதும், நிர்விசேஷ

சின்மாத்திரமும், சத்தும், அத்வைதமும் ஆநந்தமுமான மாயையின்றிய வஸ்து பிரஹ்மம். அதுவே உபாதியினுலாகிய தத்பதவாச்சியத்தினும் துவம்பத வாச்சியத்தினும் உபாதியினுலாகிய பேதத்தினும் வேறுன அபேதமும், அதிஷ்டானத்தினுல் உபலக்ஷிக்கப்பட்டதும், சுத்தமும், பாரமார்த்திகமும், சந்தாமாத்திரமும், அவிநாசியுமாம்." இது சர்வசாரோபநிஷத்து.

" तद्ब्रह्माहमिति ज्ञात्वा ब्रह्म सम्पद्यते ध्रुवम् ॥

நிஷ்கலாதிலக்ஷணமுடைய பிரஹ்மம் யானென்றறிந்து, நிச்சயமாகப் பிரஹ்மத்தினையடைகின்றுன்." இது பிரஹ்மபிந்தூபநிஷத்து.

" येनेक्षते शृणोतीदं जिघ्रति व्याकरोति च ।
स्वाद्वस्वादु विजानाति तत्प्रज्ञानमुदीरितम् ॥
चतुर्मुखेन्द्रदेवेषु मनुष्याश्वगवादिषु ।
चैतन्यमेकं ब्रह्मातः प्रज्ञानं ब्रह्म मय्यपि ॥
परिपूर्णः परात्मास्मिन्देहे विद्याधिकारिणि ।
बुद्धेः साक्षितया स्थित्वा स्फुरन्नहमितीर्यते ॥

स्वतः पूर्णः परात्मात्र ब्रह्मशब्देन वर्णितः ।
अस्मीत्यैक्यपरामर्शस्तेन ब्रह्म भवाम्यहम् ॥

एकमेवाद्वितीयं सन्नामरूपविवर्जितम् ।
सृष्टेः पुराधुनाप्यस्य तादृक्त्वं तदितीर्यते ॥
श्रोतुर्देहेन्द्रियातीतं वस्त्वत्र त्वंपदेरितम् ।
एकता गृह्यतेऽसीति तदैक्यमनुभूयताम् ।
स्वप्रकाशापरोक्षत्वमयमित्युक्तितो मतम् ।
अहंकारादिदेहान्तं प्रत्यगात्मेति गीयते ।
दृश्यमानस्य सर्वस्य जगतस्तत्त्वमीर्यते ॥

ब्रह्मशब्देन तद्ब्रह्म स्वप्रकाशात्मरूपकम् ।
अनात्मदृष्टेरविवेकनिद्रामहंममस्वप्नगतिं गतोऽहं ।
स्वरूपसूर्येऽभ्युदिते स्फुटोक्तै-
र्गुरोर्महावाक्यपदैः प्रबुद्धः ।

वाच्यं लक्ष्यमिति द्विधार्थसरणी वाच्यस्य हि त्वंपदे
वाच्यं भौतिकमिन्द्रियादिरपि यल्लक्ष्यं त्वमर्थश्च सः ।
वाच्यं तत्पदमीशताकृतमतिर्लक्ष्यं तु सच्चित्सुखानन्द-

ब्रह्म तदर्थ एव च तयोरैक्यं त्वसीदं पदम् । त्वमिति तदिति कार्ये कारणे सत्युपाधौ द्वितयमितरथैकं सच्चिदानन्दरूपं उभयवचनहेतू देश कालौ च हित्वा जगति भवति सोऽयं देवदत्तो यथैकः ॥ कार्योपाधिरयं जीवः कारणोपाधिरीश्वरः । कार्यकारणतां हित्वा पूर्णबोधोऽवशिष्यते ॥

புருஷன் எதனால் இதனைக் காண்கின்றானோ, கேட்கின்றானோ, முகருகின்றானோ, சொல்லுகின்றானோ, உருசி உருசியின்மைகளை யறிகின்றானோ, அது **பிரக்ஞான** மெனப்படும். சதுர்முகேந்திர தேவர்களிலும், மனிதர் குதிரை பசு முதலியவற்றிலும் உள்ள சைதன்னியம் ஒன்றே **பிரஹ்மம்**. ஆதலால் என்னிடத்திலுமுள்ள பிரஞ்ஞானம் பிரஹ்மமாம். பரிபூர்ண பரமாத்மா இந்த வித்தியாதிகாரியாகிய தேகத்தில் புத்தியின் சாக்ஷித்தன்மையாக இருந்து விளங்குவதாய் அகம் (யான்) என்று சொல்லப்படுகின்றது தானே பூர்ணமான பராத்மா இங்குப் பிரஹ்மசப்தத்தினால் வர்ணிக்கப்பட்டுளது. அஸ்மி (இருக்கின்றேன்) என்பது ஐக்கிய ஆராய்ச்சியாம். அதனால் யான் பிரஹ்ம

மாகின்றேன். ஒரே அத்விதிய நாமரூபமின்றிய சத்து சிருஷ்டிக்கு முன்னிருந்தது. இப்பொழுதும் இதற்கு அத்தன்மை யிருத்தலால் தத் (அஃது) எனப்படுகின்றது. கேட்பவனது தேகேந்திரியாதிதவஸ்து இங்குத் துவம்பதத்தாற் சொல்லப்படுவதாம். அஸி (இருக்கிறாய்) என்பதனால் ஐக்கியம் (ஒருமை) நிரகிக்கப்படுகின்றது. அவ்வைக்கியம் அநுபவிக்கப்படுக. சுவப்பிரகாசாபரோக்ஷத்துவம் அயம் (இந்த) என்னும் சொல்லால் கொள்ளப்படுகின்றது. அகங்காரமுதல் தேகபரியந்தமுள்ள பிரத்தியக்கு ஆத்மாவென்று சொல்லப்படுகின்றது. காணப்படுகின்ற சகலஜகத்தின் தத்துவம் (உண்மை) பிரஹ்மசப்தத்தினால் சொல்லப்படுகின்றது அந்தப் பிரஹ்மம் சுவப்பிரகாச ஆத்மவடிவமாம். அநாத்மதிருஷ்டியினால் அவிவேகநித்திரையினையும் யான் எனதெனும் சொப்பனகதியையும் அடைந்திருந்த யான் குருவின் வெளிப்படைவாக்குகளாகிய மகாவாக்கியபதங்களால் சுவரூபசூரியன் உதிக்கவே விழித்தேன். வாச்சியலக்ஷிய மென்று வாக்கியத்திற்கு இருவகைப் பொருட்பாகுபாடுண்டு. துவம்பதத்தில் வாச்சியம் பௌதிகமும் இந்திரியாதிகளுமாம்; இலக்ஷியம் நீ என்னும் சொற்பொருள் எதுவோ அதுவே. தத்பதவாச்சியம் ஈசத்தன்மையாலாகிய புத்தி; லக்ஷியமோ சச்சிதாநந்தப்பிரஹ்மமான தத் என்னும் பொருளாம். இந்த அஸி (இருக்கிறாய்) என்னும் பதம் அவ்விரண்டன் ஐக்கியத்தை அதாவது அவ்விரண்டும் ஒன்றென்பதனை அறி

விக்கின்றது. துவம் என்றும் தத் என்றும் காரியகாரணங்களாகிய உபாதியுள்ளபோது இரண்டாம். அவை இல்லாதபோது, ஒரே சச்சிதாநந்தவடிவமாம். இரண்டு வசனங்களுக்கும் காரணமான தேசகாலங்களை விட்டு, உலகத்தில் அவனே இத்தேவதத்தன் என்று எப்படி ஒருவனே யாகின்றானோ, அதுபோலக் காரியோபாதியுடையவன் இந்தஜீவன்; காரணோபாதியுடையவன் ஈசுவரன். காரியகாரணத்தன்மையைவிடின், பூரணபோதம் மிஞ்சுகின்றது." என்பது சுகரஹஸ்யோபநிஷத்து.

"जीवात्मनः परस्यापि यद्येवमुभयोरपि ।
अहमेव परं ब्रह्म ब्रह्माहमिति संस्थितिः ॥
समाधिस्स तु विज्ञेयस्सर्ववृत्तिविवर्जितः ।
ब्रह्म संपद्यते योगी न भूयः संसृतिं व्रजेत् ॥

இவ்வாறு ஜீவாத்மா பரமாத்மா இரண்டற்கும் 'நானேபரப்பிரஹ்மம், பிரஹ்மமே நான்' என்னும் செவ்வையான நிலையுண்டாயின், அதுவே சகலவிருத்திகளுமின்றிய சமாதியென் றறியத்தக்கதாம். அதனால்யோகி பிரஹ்மத்தை யடைகின்றான்; மறுபடியும் சம்சாரத்தை யடைகிறதில்லை." இது திரிசிகிப்பிராஹ்மணோபநிஷத்து.

" जीवः पञ्चविंशकः स्वकल्पितचतुर्विंशतितत्त्वं परीत्यज्य षड्विंशः परमात्माहमिति निश्चयाज्जीवन्मुक्तो भवति ॥

*இருபத்தைந்தாவது தத்துவமாகிய ஜீவன் தன்னுற் கற்பிக்கப்பட்ட இருபத்துநான்கு தத்துவங்களையும் விட்டு, இருபத்தாருவது தத்துவமான பரமாத்மா யான் என்னும் நிச்சயத்தால் ஜீவன்முக்தனுகின்ருன்."* என்பது மண்டலப்பிராஹ்மணசுருதியின் முதல் பிராஹ்மணம்.

"तद्वांश्चक्षुरादिबाह्यप्रपञ्चोपरतः विगतप्रपञ्चगंधः सर्वं जगदात्मत्वेन पश्यंस्त्यक्ताहंकारो ब्रह्माहमस्मीति चिन्तयन्निदं सर्वं यदयमात्मेति भावयन् कृतकृत्यो भवति ॥

*அந்தச்சங்கற்பாதி யொழிந்த மனத்தினையுடையவன் நேத்திரமுதலிய வெளிப்பிரபஞ்சோபரதனுய்ப் பிரபஞ்ச நாற்ற மின்றியவனுய் எல்லா உலகினையும் தானுகக் கண்டொழித்த அகங்காரமுடையவனுய்ப் பிராஹ்மம் யானென்று சிந்தித்து, யாதொரு இவ்வெல்லாம் இவ்வாத்மாவே என்று பாவித்துக் கிருதகிருத்தியனுகின்ருன்."* என்பது மண்டலப்பிராஹ்மணசுருதி

வின் இரண்டாவது பிராஹ்மணம்.

“अच्युतोऽस्मि महादेव तव कारुण्यलेशतः ।
विज्ञानघन एवास्मि शिवोऽस्मि किमतः परम् ॥
न निजं निजवद्भात्यंतःकरणजृंभणात् ।
अंतःकरणनाशेन संविन्मात्रस्थितो हरिः ॥
संविन्मात्रस्थितश्चाहमजोऽस्मि किमतः परम् ।
व्यतिरिक्तं जडं सर्वं स्वप्नवच्च विनश्यति ॥
चिज्जडानां तु यो द्रष्टा सोऽच्युतो ज्ञानविग्रहः ।
स एव हि महादेवस्स एव हि महा हरिः ॥
स एव ज्योतिषां ज्योतिस्स एव परमेश्वरः ।
स एव हि परं ब्रह्म तद्ब्रह्माहं न संशयः ॥
जीवश्शिवश्शिवो जीवस्स जीवः केवलश्शिवः ।
तुषेण बद्धो व्रीहिस्स्यात्तुषाभावे तु तण्डुलः ॥
एवं बद्धस्तथा जीवः कर्मनाशे सदाशिवः ।
पाशबद्धस्तथा जीवः पाशमुक्तस्तदा शिवः ॥

மகாதேவனே! தம்முடைய கருணையின் இலேசத்தால் அச்சுதனாயிருக்கின்றேன்; விஞ்ஞானகனனாகவே

யிருக்கின்றேன்; சிவமா யிருக்கின்றேன். இதன்பேரில் யாதுளது? அந்தக்கரணத்தின் விரிவால் உண்மையானது உண்மைபோல் தோற்றுகிறதில்லை. அந்தக்கரணநாசத்தினால் சம்வித்து (ஞான) மாத்திரமாய் நிலைத்துள்ள ஹரி யிருக்கின்றார். யான் சம்வித்து மாத்திரமாக நிலைத்துள்ள அஜனா (பிரஹ்மாவா) யிருக்கின்றேன். இதன்பேரில் யாதுளது? என்னின்வேறுபட்ட ஜடம் முழுவதும் சொப்பனம்போல் நசிக்கின்றது. சிற்சடங்களைக் காண்பவன் எவனோ அவன் அச்சுதனாகிய ஞானவிக்கிரகம்; அவன்றானே மகாதேவன்; அவன்றானே மகாஹரி; அவனே ஜோதிகளுக்கெல்லாம் ஜோதி; அவனே பரமேசுவரன். அவன்றானே பரப்பிரஹ்மம்; அந்தப்பிரஹ்மம் நான்; சம்சயமில்லை. ஜீவன் சிவன். சிவன் ஜீவன். அந்தஜீவன் கேவலம் சிவம். உமியினாற் கட்டப்பட்டது நெல்லாகின்றது; உமி நீங்கிய போது அரிசியாம். இப்படிப் பந்தப்பட்டபோது அவ்வாறு ஜீவனாகின்றான். கர்மநாசத்தில் சதாசிவனாகின்றான். பாசத்தினால் கட்டப்பட்டவன் அவ்வாறு ஜீவனாகின்றான்; பாசம்நீங்கியவன் அப்போது சதாசிவனாகின்றான்.'' என்பது ஸ்கந்தோபநிஷத்து.

“ कार्यकारणोपाधिभेदाज्जीवेश्वरभेदोपि दृश्यते ।
कारणोपाधिरीश्वरः कार्योपाधिरयं जीवः ॥

காரியகாரணவுபாதி பேதத்தால் ஜீவேசுவரபேதமும் காணப்படுகின்றது. காரணோபாதியுடையவன்

ஈசுவரன், காரியோபாதியுடையவன் இச்சீவன்.'' என்பது மகாநாராயணேபநிஷத்து ௪-வது அத்யாயம்.

" तं यथा यथोपासते तथैव भवति । तस्माद्ब्राह्मणः पुरुषरूपं परं ब्रह्मैवाहमिति भावयेत्तद्रूपो भवति ॥ य एवं वेद तद्ब्रह्म तापत्रयातीतं षट्कोशविनिर्मुक्तं षडूर्मिवर्जितं पञ्चकोशातीतं षड्भावविकारशून्यमेवमादिसर्वविलक्षणं भवति ॥

அந்தத்தேவனை எப்படி எப்படி உபாசிக்கின்றனே, அப்படி அப்படியே ஆகின்றான். ஆதலால் பிராஹ்மணன் புருஷவடிவமான பரப்பிரஹ்மமே யான் என்று பாவிக்கவேண்டும். எவன் இவ்வாறு அறிகின்றனே, அவன் அவ்வடிவமாகின்றான். அந்தப்பிரஹ்மம் தாபத்திரயாதீதமும், ஷட்கோசங்களினீங்கியதும் ஷடூர்மிகளின்றியதும், பஞ்சகோசாதீதமும், ஷட்பாவவிகாரசூநியமும், இதுபோன்றதுமுதலிய மற்றெல்லாவற்றினும் விலக்ஷணமுமாகின்றது.'' என்பது முக்திகோபநிஷத்து.

" परजीवोपाधी मायाविद्ये विहाय तत्त्वंपदलक्ष्यं प्रत्यगभिन्नं ब्रह्म तत्त्वमसीत्यहं ब्रह्मास्मीति वाक्यार्थविचारः श्रवणं भवति ॥

தத்பதத்துவம்பதவாச்சியர்களான பரஜீவர்களின் உபாதியான மாயையினையும் அவித்தையினையும்விட்டு, தத்துவம்பதலக்ஷியமான பிரத்தியகபின்னபிரஹ்மமாகிய அது நீ என்பதும், யான் பிரஹ்மம் என்பதுமான வாக்கியார்த்தவிசாரம் சிரவண மாகின்றது." என்பதும்,

"अव्यक्तलेशाज्ञानाच्छादितपारमार्थिकस्य जीवस्य तत्त्वमस्यादिवाक्यानि ब्रह्मणैकतां जगुः। नेतरयोर्व्यावहारिकप्रातिभासिकयोः॥

தத்துவமஸிமுதலியவாக்கியங்கள் அவ்வியக்தலேசமான அஞ்ஞானத்தினல் மறைக்கப்பட்ட பாரமார்த்திக ஜீவனுக்குப் பிரஹ்மத்தோடு ஒருமையைக்கூறுகின்றன. மற்ற வியாவகாரிகப்பிராதிபாஸிக ஜீவர்களிருவருக்கும் கூறுகிறதில்லை." என்பதும்,

"अहं ब्रह्मेति नियतं मोक्षहेतुर्महात्मनाम्॥"

"யான் பிரஹ்ம மென்பது மகாத்மாக்களுக்கு நியதமாய் மோக்ஷஹேது வாகின்றது."

"नाहं ब्रह्मेति जानाति तस्य मुक्तिर्न जायते॥

யான் பிரஹ்மமன் றென்று அறிகிறவன் எவனே, அவனுக்கு மோக்ஷ முண்டாகாது." என்பனவும் பைங்கலசுருதிகள்.

" गुरुशास्त्रोक्तमार्गेण स्वानुभूत्या च चिद्घने ।
ब्रह्मैवाहमिति ज्ञात्वा वीतशोको भवेन्मुनिः ॥

முநியானவன் குருசாஸ்திரங்களால் சொல்லப்பட்டவ்வழியினாலும் சுவாநுபூதியினாலும் சிற்கனத்தில் பிரஹ்மமே யான் என்றறிந்து சோகநீங்கியவனாவான்." என்பதும்,

" आत्मैकत्वं विदित्वा त्वं तिष्ठाक्षुब्धमहाब्धिवत् ॥

ஆத்மா ஒன்றெனுந்தன்மையை யறிந்து, நீ கலக்கமற்ற மகாசமுத்திரம்போல நிலைத்திருப்பாயாக." என்பதும்,

" अहं ब्रह्मेति नियतं मोक्षहेतुर्महात्मनाम् ॥

யான் பிரஹ்ம மென்பது மகாத்மாக்களுக்கு நியதமாய் மோக்ஷத்திற்குக் காரண மாகின்றது." என்பதும்,

" यदा ह्येष एतस्मिन्नल्पमप्यन्तरं नरः ।
विजानाति तदा तस्य भयं स्यान्नात्र संशयः ॥

सर्वगं सच्चिदानन्दं ज्ञानचक्षुर्निरीक्षते ।
अज्ञानचक्षुर्नेक्षेत भास्वन्तं भानुमंधवत् ॥

प्रज्ञानमेव तद्ब्रह्म सत्यप्रज्ञानलक्षणं ।
एवं ब्रह्मपरिज्ञानादेव मर्त्योऽमृतो भवेत् ॥

भिद्यंते हृदयग्रंथयश्छिद्यन्ते सर्वसंशयाः ।
क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन् दृष्टे परावरे ॥

எப்போது இந்நரன் இதில் சிறிதேனும் பேதத்தை யறிகின்றானோ, அப்போது அவனுக்குப் பய முண்டாகின்றது. இதிற் சமுசய மில்லை. எல்லாவற்றினுமிருப்பதாகிய சச்சிதானந்தத்தினை ஞானநேத்திரமுள்ளவன் காண்கின்றான்; அஞ்ஞானநேத்திரமுள்ளவன் பிரகாசிக்கின்ற சூரியனைக் குருடன் காணாததுபோலக் காணான். பிரஞ்ஞானமே அந்தச் சத்தியப்பிரஞ்ஞான லக்ஷணப் பிரஹ்மமாம். இவ்வாறு பிரஹ்மத்தை அறிதலினாலேயே மர்த்தியன் (மரணதர்மமுடையவன்) அமிருதனாகின்றான் அதாவது மரணதர்மமில்லாதவனாகின்றான். அந்தப்பராவரமாகிய பிரஹ்மத்தை அறிந்தகாலத்து, இருதயக்கிரந்திகள் பேதிக்கப்படுகின்றன; சர்வசம்சயங்களும் சேதிக்கப்படுகின்றன; இவனுடைய கர்மங்கள் க்ஷீண மாகின்றன." என்பதும்,

" नाहं ब्रह्मेति सङ्कल्पात्सुदृढाद्बध्यते मनः ।
सर्वं ब्रह्मेति सङ्कल्पात्सुदृढान्मुच्यते मनः ॥

யான் பிரஹ்மம் அன்று என்னும் மிகத்திடமான சங்கற்பத்தால் மனம் கட்டப்படுகின்றது. சர்வம் பிரஹ்மம் என்னும் மிகத்திடமான சங்கற்பத்தால் மனம் விடுபடுகின்றது."

" नाहं मांसं न चास्तीनि देहादन्यः परोऽस्म्यहम् ।
इति निश्चितवानन्तः क्षीणाविद्यो विमुच्यते ॥
कल्पितेयमविद्येह अनात्मन्यात्मभावनात् ।
परं पौरुषमाश्रित्य यत्नात्परमया धिया ॥
भोगेच्छां दूरतस्त्यक्त्वा निर्विकल्पसुखी भव ॥

யான் மாம்ஸமல்லன், யான் எலும்புகளுமல்லன்; தேகத்திற்கு அந்நியமான பரன் யான் என்னும் நிச்சயமுடையவன் அவித்தை நசித்தவனாய் முக்தனாகின்றான். இங்கு இவ்வவித்தை அநாத்மாவில் ஆத்மபாவனையினால் அதாவது தானல்லாததனைத் தானென உணர்தலால் கற்பிக்கப்பட்டதாம். மேலான புருஷத்தன்மையினை ஆசிரயித்து, யத்தனத்தால் மேலான புத்தியினால்போகத்தின் இச்சையைத் தூரமாகத் தள்ளி நிர்விகற்பசுகமுடையவனாவாய்." என்பதும் மஹோபநிஷத்து ஐந்தாவது அத்யாயமாம்.

" कामक्रोधभयञ्चापि मोहलोभमदो रजः ।

जन्ममृत्युश्च कार्पण्यं शोकस्तन्द्रा क्षुधा तृषा ॥
तृष्णा लज्जा भयं दुःखं विषादो हर्षमेवच ।
एभिर्दोषैर्विनिर्मुक्तस्स जीवश्शिव उच्यते ॥

காமம், குரோதம், பயம், மோகம், லோபம், மதம், இராஜஸ், ஜன்மம், மரணம், கிருபணத்தன்மை, சோகம், தந்திரை அதாவது சுழுத்திக்குமுன் வரும்சோம்பல், பசி, தாகம், ஆசை, வெட்கம், பயம், துக்கம், விஷாதம் (மனக்கலக்கம்), ஹர்ஷம்(மனக்களிப்பு)என்னும் இத்தோஷங்களினின்று விடுபட்ட அந்த ஜீவன் சிவன் எனப்படுகின்றான்." என்பது **யோகசிகோபநிஷத்து** முதல் அத்யாயம்.

" चैतन्यस्यैकरूपत्वाद्भेदो युक्तो न कर्हिचित् ।
जीवत्वं च तथा ज्ञेयं रज्ज्वां सर्पग्रहो यथा ॥
रज्ज्वज्ञानात्क्षणेनैव यद्वद्रज्जुर्हि सर्पिणी ।
भाति तद्वच्चितिस्साक्षाद्विश्वाकारेण केवला ॥
उपादानं प्रपञ्चस्य ब्रह्मणोऽन्यन्न विद्यते ।
तस्मात्सर्वप्रपञ्चोऽयं ब्रह्मैवास्ति न चेतरत् ॥
व्याप्यव्यापकता मिथ्या सर्वमात्मेति शासनात् ।

इति ज्ञाते परे तत्त्वे भेदस्यावसरः कुतः ॥
ब्रह्मणस्सर्वभूतानि जायन्ते परमात्मनः ।
तस्मादेतानि ब्रह्मैव भवन्तीति विचिन्तय ॥
ब्रह्मैव सर्वनामानि रूपाणि विविधानि च ।
कर्माण्यपि समग्राणि बिभर्तीति भावय ॥
सुवर्णाज्जायमानस्य सुवर्णत्वं च शाश्वतम् ।
ब्रह्मणो जायमानस्य ब्रह्मत्वं च तथा भवेत् ॥
स्वल्पमप्यन्तरं कृत्वा जीवात्मपरमात्मनोः ।
यस्तिष्ठति स मूढात्मा भयं तस्यापि भाषितम् ॥
यदज्ञानाद्भवेद्द्वैतमितरत्तत्प्रपश्यति ।
आत्मत्वेन तदा सर्वं नेतरत्तत्र चाण्वपि ।
अनुभूतोप्ययं लोको व्यवहारक्षमोपि सन् ।
असद्रूपो यथा स्वप्न उत्तरक्षणबाधितः ॥

சைதன்னியம் ஒருவடிவமாயிருத்தலால் பேதம் ஒரிடத்தும் பொருந்துவதன்று. இரஜ்ஜுவில் சர்ப்பஞானம் எப்படியோ அப்படி ஜீவத்தன்மை அறியத்தக்கதாம். இரஜ்ஜுவஞ்ஞானத்தினல் க்ஷணத்திலேயே

மாதிமூர்ச்சைமரண மென்னும் அவஸ்தைகளு
ம், காமக்குரோதாதி அரிஷட்வர்க்கங்களும், வி
வேகாதி நான்கு சாதனங்களும், சாத்துவிகாதி
முக்குணங்களும், அவித்தை அஸ்மிதை ராகம்
துவேஷம் அபிநிவேசமென்னும் பஞ்சக்கிலேச
ங்களும், மைத்திரியாதி நான்கும், விபர்யயம் பிர
மாணம்முதலிய ஐந்துவிருத்திகளும், இயமநிய
மாதி அஷ்டாங்கயோகங்களும், பிரத்தியக்ஷாதி
ஆறு அல்லது நான்கு பிரமாணங்களும், நாநா
விதப்பெயர்வடிவகுணதர்மசக்தியின் ஆசிரயமா
கிய ரோகம் ரோகமின்மைகளும் ஆந்தரப்பிரப
ஞ்சமாம்; பாகியப்பிரபஞ்சத்துள்ள நால்வகை
யோனிசரீரங்களின் சம்பந்தமிருத்தலாலும், ஆ
காயாதிபாகிய பதார்த்தங்களின் அபேக்ஷையால்
ஆந்தரமாயிருத்தலாலும் இது துவம்பத உபாதி
யெனப்படுகின்றது.

பிரஞ்ஞை ௨ :-

௧. ஸ்திதப்பிரஞ்ஞை :-சமாதி சிரவணாதி சா
தனங்களோடு செய்யும் மகாவாக்கியவிசாரத்தி
னு லுண்டாகும் சம்சயவிபரீதபாவனை யின்றிய
பிரஹ்மாகாரபுத்தி.

௨. அஸ்திதப்பிரஞ்ஞை :-மூற்கூறிய சாதன

நுஷ்டானங்களின்றிச் சாமானியமாக வேதாந்தங்களைக் கேட்பதாலும் படிப்பதாலும் க்ஷணிகமுண்டாகும் பிரஹ்மாகாரபுத்தி.

* ௬. பிரஹ்மம் ௨:-

௧. சப்தப்பிரஹ்மம்(பிரணவாதி)

௨. பரப்பிரஹ்மம்.

பிராந்தி ௨:-

௧. சோபாதிகப்பிராந்தி:-உபாதியோடுகூடிய அஞ்ஞானத்தினுற்றோன்றும் பிராந்தி. இத்தன்மையது கண்ணாடியிற் பிரதிபிம்பம் ஜகத்துமுதலியவற்றினதாம்.

௨. நிருபாதிகப்பிராந்தி:-கேவல அஞ்ஞானத்தினுற்றோன்றுவது. இத்தன்மையது இரஜ்ஜுவிற் றோன்றும் சர்ப்பமுதலியவற்றினதாம்.

சிருஷ்டி ௨:-

௧. கிரமசிருஷ்டி:-(முறையே)யுண்டாவது.

௨. யுகபத்சிருஷ்டி:- ஒரேகாலத்தில் உண்டாவது.

---

* ௬. திரிபுராதாபிநீயுபநிஷத்து.

க. ஜீவசிருஷ்டி :–அவித்தையின் விருத்தியினுல் அல்லது கேவலமனதின் விருத்தியினுல் எதனைச் சாக்ஷி விளக்குகின்றதோ, அது சாக்ஷிபாஸியம் அல்லது பிராதிபாஸிகமாம்.

உ. ஈசுவரசிருஷ்டி :– இந்திரியவாயிலாக அந்தக்கரணவிருத்தியினுல் எதனைச்சாக்ஷி பிரகாசிக்(அறி)கின்றதோ, அது பிரமாதாபாஸ்யமாம். இதனை வியாவகாரிகம் என்பர்.

* எ. மனதின் நாசம் உ :–

க. சொரூபநாசம்.

உ. அரூபநாசம்.

* அ. மனம் உ :–

க. சுத்தம் :–காமமின்றியது.

உ. அசுத்தம் :–காமசங்கற்பம்.

முக்தி உ :–

---

* எ. முக்திகோபநிஷத்து.

* அ. திரிபுரதாபிநீயுபநிஷத்து, பிரஹ்மபிந்துபநிஷத்து, அமிர்தபிந்துபநிஷத்து, மைத்திராயணியுபநிஷத்து

௧. பதப்பிராப்திவடிவம்.

௨. ஸ்வரூபப்பிராப்திவடிவம்.

மோக்ஷாம்சம் ௨ :-

௧. அநர்த்தநிவிருத்தி.

௨. பரமாநந்தப்பிராப்தி.

* ௬. யோகம் ௨ :-

௧. சாலம்பம்:-கைகால்முதலிய வடிவத்தோடு கூடிய மண்டலமுதலிய பற்றுக்கோடாகிய ஆலம்பனமுடையது.

௨. நிராலம்பம்:-சகலநாமரூப கர்மங்களினின்று மிக விலகியதாகவும், சகலகாமமுதலிய அந்தக்கரணவிருத்திகளின் சாக்ஷித்தன்மையாகவும், அவற்றின் ஆலம்பனமின்றியதாகவும் பாவித்தல்.

வாக்கியம் ௨ :-

௧. அவாந்தரவாக்கியம் :-பரமாத்மாவினது அல்லது ஜீவனது சொரூபத்தை யறிவிக்கும் வாக்கியம்.

---

* ௬. மகாநாராயணோபநிஷத்து.

உ. மகாவாக்கியம் :–ஜீவப்பிரஹ்மங்களின் ஏகத்துவத்தை அறிவிக்கும் வாக்கியம்.

* ௧௦. வாசனை உ :–

௧. சுபம்.

உ. அசுபம்.

* ௧௧. ௧. சுத்தம்.

உ. மலினம்.

வாதம் உ :–

௧. பிரதிபிம்பவாதம்.

உ. அவச்சேதவாதம்.

* ௧௨. வித்தை உ :–

௧. பரம் :–பிரஹ்மஞானம்.

உ. அபரம் :–வேதவேதாங்கசாஸ்திராதிகளாம்.

---

* ௧௦. முக்திகோபநிஷத்து.

* ௧௧. முக்திகோபநிஷத்து.

* ௧௨. முண்டகோபநிஷத்து, ருத்திரஹிருதயோபநிஷத்து.

விபரீதபாவனை உ :-

௧. பிரமாணகதம்.

௨. பிரமேயகதம்.

வியாப்தி உ :-௧. விருத்திவியாப்தி, ௨. பலவியாப்தி.

௧. விஷயத்திலுள்ள ஆவரணத்தினைப்பங்கம் செய்வது விருத்திவியாப்தி.

௨. அவ்விஷயத்தினை இஃது என்று சுட்டியறிவது பலவியாப்தி.

மூவகைப்பதார்த்தங்கள்.

அக்கினி ௩ :-

௧. ஆஹவனீயம், ௨. கார்ஹபத்யம், ௩. தக்ஷிணாக்கினி.

அத்தியாத்மமுதலியன ௩ :-

௧. அத்தியாத்மம் :- சுரோத்திரம், துவக்கு, சக்ஷுஸ், ஜிஹ்வை(ரசனை), ஆக்கிராணம் என்னும் ஐந்து ஞானேந்திரியங்களும்,

வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபஸ்தம் என்னும் ஐந்து கருமேந்திரியங்களும்,

மனம், புத்தி, சித்தம், அகங்கார மென்னும் நான்கு அந்தக்கரணங்களும் ஆகிய பதிநான்கும் இந்திரியாதிகள்.

௨. அதிதெய்வம்:—திசை, வாயு, சூரியன், வருணன், அசுவினிகுமார ரென்னும் ஐந்து ஞானேந்திரியதேவதைகளும்,

அக்கினி, இந்திரன், உபேந்திரன், பிரஜாபதி, மிருத்யு வென்னும் ஐந்து கருமேந்திரியதேவதைகளும்,

சந்திரன், பிரஹ்மா, வாசுதேவன் (க்ஷேத்திரஞ்ஞன்), ருத்திரன் என்னும் நான்கு அந்தக்கரணதேவதைகளுமாகிய பதிநான்கும் தேவதைகள்.

௩. அதிபூதம்:—சப்தம், ஸ்பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் ஐந்து ஞானேந்திரியவிஷயங்களும்,

வசனம், ஆதானம், கமனம், ரதி, மலவிசர்க்கம் என்னும் ஐந்து கருமேந்திரியவிஷயங்களும்,

சங்கற்பம், விகற்பம், நிச்சயம், சிந்தனம் என்னும் நான்கு அந்தக்கரணவிஷயங்களுமாகிய பதினான்கும் விஷயங்கள்.

இவற்றுள் ஒவ்வொரு இந்திரியமும் அத்யாத்மமாம். ஒவ்வொருதேவதையும் அதிதெய்வமாம். ஒவ்வொரு விஷயமும் அதிபூதமாம்.

அந்தக்கரணதோஷம் ரு :-

†க. மலம் :—ஜன்மஜன்மாந்தரங்களின் பாபம். அதாவது, புருடன் அநாதியாயுள்ள சம்சாரத்தில் அஞ்ஞானஜீவர்களிடத்து அநேகஜன்மமடைந்து பிராந்தியினுல் ரஜோதமோகுணப்பிரதான ஜீவர்களிடத்துத் துவேஷாதிபுத்தியோடு சிறிதும் பெரிதுமாகிய பற்பல பிரஹ்மஹத்தி முதலிய பாதகங்களைச் செய்கின்றான். அதனுலுண்டான அநேகவாசனைகள் அந்தக்கரணத்தில் பதிந்திருக்கின்றன. அதுவே மலதோஷமாம். அதன் பிரபாவத்தால் பகிர்முகமுடைய ஜீவன் இந்தச்சரீரத்திலும் பாபாசார முடையவ

---

† பாவ மாகு மலமுள்ளம்
  பற்றுச் சலித்தல் விக்ஷேப
மோவ லில்லா வுண்மைநிலை
  யுணர்த லின்மை யாவரண
மாகு மூன்று முள்ளத்தை
  யணைந்த குற்ற மிவைகடாமும்
போகுங் கன்ம வுபாசனைநன்
  ஞாந மென்னு மவற்றாலே.

வனைய் சத்சாஸ்திரவிசாரத்தையும் சாதுசங்கத்தையும் ஒருபோதும் கைப்பற்றுகிறதில்லை.

௨. விக்ஷேபம்:—சித்தத்தின் சஞ்சலத்துவம். ரஜோகுணத்தால் விழுங்கப்பட்ட சித்தத்தில் ஒவ்வொரு க்ஷணமும் இஷ்டவஸ்துவினுலுண்டாகும் சலனம் சஞ்சலமாம். எதனுல் அந்த விஷயாதிகளில் உழலும் சித்தம் சாஸ்திராதிப் பிரயத்தினங்களின்றி, முன் சம்ஸ்காரபலத்தால் சதா வெளிமுகமாகிச் சலிக்கின்றதோ, அதனுல் நாள் தோறும், சாஸ்திரவசனங்களைக் கேட்கினும் படிக்கினும் அவ்வசனங்களைச் சித்தத்தில் கிரகித்தலும் தரித்தலும் செய்கிறதில்லை.

௩. ஆவரணம்:—சொரூபத்தின் அஞ்ஞானம். அதாவது 'யான் அஞ்ஞானி, ஆத்மாவை அறியேன்' என்னும் அநுபவசித்த சொரூபாஞ்ஞானம் முன்னுள்ள அஞ்ஞானத்தின் ஏதுவாம். அதன் பிரபாவத்தால் சகல ஜீவர்களும் கடியந்திரம்(கலசங்கட்டிய ஏற்றம்)போலச் சம்சாரத்தில் மேல்கீழான கதியையடைகின்றூர்கள்.

அபரோக்ஷஞானப்பிரதிபந்தம் ௩:—

க. பூதப்பிரதியந்தம்:— சிரவணமனனுதி அநுஷ்டானகாலங்களில் முன் அநுபவிக்கப்பட்ட த

னக்கிஷ்டமான எருமை முதலான வஸ்துக்களை மீண்டும் அநுசந்தித்தல்.

உ. வர்த்தமானப்பிரதிபந்தம்:- (க) விஷயாசக்தி (விஷயங்களில் பற்றுதல்வடிவினது).

(உ) பிரஞ்ஞாமாந்த்யம்:-அதாவது பிரஞ்ஞை (புத்தி)யின் மந்தத்தன்மை (கிரகித்தல் தரித்தல் என்பவற்றின் சாமர்த்தியவடிவ கூர்மை யில்லாமை).

(௩) குதர்க்கம்:-சுஷ்கதர்க்கமுடையவனுயிருத்தலால் சுருதிகளின் அர்த்தத்தினை வேறு வகையாகக் கற்பித்தல்.

(௪) விபரீததுராக்கிரகம் :-ஆத்மா கருத்ருத்வ முதலிய தருமங்களோடுகூடிய தென்னும் ஞான வடிவ விபரீதபாவனையில் யுக்தியில்லாத ஹடம் (பிடிவாதம்).

௩. பாவீ (ஆகாமி)பிரதிபந்தம்:- ஞானவிருப்புடையோன் சாதிக்கும் அநுஷ்டானகாலங்களில் பாபகருமங்களின் காரியமாகிய ஏதேனும் ஒருவஸ்துவில் தயை அல்லது விசுவாசங்களையுண்டாக்கும் ஜந்மாந்தரத்திற்குக் காரணமாகிய பிராரப்தசேஷமும்(எஞ்சிய பிராரப்தமும்), பிரஹ்மலோகாதிகளி னிச்சைகளும்.

அர்த்தவாதம் ௩:–நிந்தையையாவது துதியை யாவது அறிவிக்கும் வாக்கியம்.

க. அநுவாதம்:– அந்நியப்பிரமாணத்தாற்சித் தித்த அர்த்தத்தை அறிவிக்கும் வாக்கியம். "அக்கினி பனிக்கு மருந்து" என்னும் வாக்கியம் போல.

உ. குணவாதம்:– அந்நியப்பிரமாணவிரோத மாகிய விதேய அர்த்தத்தைக் குணவாயிலாகத் துதிக்கும் வாக்கியம். பிரகாசமாகிய குணத்தின் சமத்தன்மையால் துதிக்கும் " யூபம்(எக்கிய கம்பம்) ஆதித்தன்" என்னும் வாக்கியம்போல.

௩. பூதார்த்தவாதம்:– சுவார்த்தத்தில் பிரமாணமுள்ளதாய், இலக்ஷணையினாலே விதேய(விதிக்கப்படும்) அர்த்தத்தின் சிலாக்கியத்தை அறிவிக்கும் வாக்கியம்; " வஜ்ஜிரஹஸ்தன் புரந்தரன் " என்னும் வாக்கியம்போல.

அவதி ௩:– வரம்பு (எல்லை).

க. ஞானத்தின் அவதி:– அஞ்ஞானிக்கு தேஹாதிகளில் சம்சயவிபரீதபாவனையின்றித்திட ஆத்மத்தன்மைப்புத்தி யிருப்பதுபோலச் சுபாவமாகச் சித்தித்துள்ள பிரஹ்மாத்மாவில் உண்டாகும் திடபுத்தி.

உ. வைராக்கியத்தின் அவதி:— சுவர்க்காதி லோகங்களிலும் சத்தியலோகங்களிலுமுள்ள விஷயங்களை துரும்புபோலெண்ணும் புத்திவிருத்தி.

௩. உபராமத்தின் அவதி:-ஜாக்கிராவஸ்தையில் சுழுத்திபோலச் சகலவஸ்துக்களின் ஸ்மிருதியில்லாதது சித்தநிரோதமாகிய உபரதி (உபசாந்தி)யினது அவதி.

*௧௩. அவஸ்தை ௩:-மூன்று தேகவிவகாரங்களின் காலம்.

௧. ஜாக்கிராவஸ்தை:– தேவதைகளின் அநுக்கிரஹத்தோடுகூடிய இந்திரியங்களுக்கு விஷயங்களின் ஞானம் எதனு லுண்டாகின்றதோ, அது ஜாக்கிர மெனப்படும்.

அல்லது எந்தப் பதினான்கு தேவதைகளின் அநுக்கிரஹத்தோடுகூடிய் பதினான்கு இந்திரியங்களால், ஸ்தூலவிஷயபோகங்களும் அததற்குரிய கர்மங்களும் பிராரப்தகர்மங்களுக்கிடாக உண்டாகின்றனவோ, அந்தச் சத்துவகுணபரிணமபுத்திவிருத்தி ஜாக்கிராவஸ்தை எனப்படும். அதற்கு அபிமானி விசுவன்.

*௧௩. வராகோபநிஷதம் முதல் அத்யாயம்.

உ. சொப்பனாவஸ்தை:- எந்த ஜாக்கிரபோகங்களைத் தரும் கருமங்கள் லயமடைந்து, சொப்பன் போகங்களைத்தரும் கருமங்கள் உதயமானபின், வாசனாமய இந்திரியங்களால் வாசனாமய சூக்ஷ்மபோகங்களும் கிரியைகளும் உண்டாகின்றனவோ, அந்த ரஜோகுணபரிணாமபுத்திவிருத்தி சொப்பனாவஸ்தை யெனப்படும். அதற்கு அபிமானி தைஜஸன்.

௩. சுழுத்தியவஸ்தை :-எது ஜாக்கிரசொப்பன மென்னும் இரண்டின் உற்பத்திலயங்களுக்கு இடமா யிருக்கின்றதோ, எதில் சகலவிசேஷவிருத்திகளும் ஒடுங்கி அபாவவடிவா யிருக்கின்றனவோ, அந்தத் தமோகுணபரிணாமஸம்ஸ்காரவடிவ புத்திவிருத்தி சுழுத்தியவஸ்தை யெனப்படும். அதற்கு அபிமானி பிராஞ்ஞன்.

ஆத்மா ௩ :-

க. ஞானாத்மா :-வர்ணாச்சிரமாதி அபிமானத்தோடுகூடிய பரிச்சின்னவியஷ்டி அகங்காராவச்சின்னசேதனம்.

உ. மகானாத்மா :-ஸர்வவியஷ்டி அகங்காராதிகளிலும் பிரவேசித்துள்ள அபரிச்சின்ன சமஷ்டி சாமானிய அகங்காராவச்சின்னசேதனம்.

௩. சாந்தாத்மா :- இவ்விருவகை அகங்கார அநவச்சின்னசுத்தசேதனம்.

ஆத்மாவின் பேதம் ௩ :-

௧. மித்தியாத்மா :-பூதங்களின் விகாரமான அநிருத ஜட துக்கவடிவமும், மலமூத்திராதிகளால் நிறைந்ததும், அன்னமயமுதலிய பஞ்சகோசங்களோடு கூடியதும், இந்திரியாதிசங்காதங்களுமாகிய இந்தச் சரீரம் மித்தையாம். அநாத்மாவும் சொரூபமாக மித்தியாவடிவமுமாம்; ஆயினும் சேதனவடிவப்பிரத்யகாத்மதாதாத்மிய அத்தியாசத்தினுல் இது ஆத்மசப்தத்தினுற் சொல்லப்படுகின்றது. இந்தச் சேதன் ஆத்மா அவிவேககாலத்தில் தன்னை முற்கூறிய சங்காதங்களுக்கபின்னமாக மதித்து, கர்த்திருத்வ போக்திருத்வ சுகித்வ துக்கித்வ ஜனன மரணமுதலான அநாத்மதர்மங்கள் தன்னுடையவென்று தாழ்ந்த நிலையை யடைகின்றது. விவேககாலத்தில் தாதாத்மியசம்பந்த அபிமானத்தை விடுவதால் இச்சங்காதம் பொய்யென்று நிச்சயிக்கப்படுகின்றது. ஆனதால் இது மித்யாத்மா வெனப்படுகின்றது.

௨. கௌணாத்மா:-ஸ்த்ரீ புத்ரதனுதிகள் கௌணாத்மா வெனப்படுகின்றன. ஜீவனது அவிவேகதசையில் தன்னினும் அவைகள் வேறு என்

னும் பேதம் பிரத்யக்ஷமாகச் சித்தித்திருந்தாலும், ஆத்மாவின் தாதாத்மிய அத்தியாசத்தினால் அவைகளைத் தன்வடிவாகப் பாவித்து, அவைகளுக் குண்டாகும் லாபநஷ்டங்களைத் தான் அநுபவிக்கின்றான். எப்படித் தனதாத்மாவில் தனக்குப் பிரேமை யிருக்கின்றதோ, அதுபோலவே அவைகளினு மிருக்கின்றது. எப்படி இந்தத்துக்காதிகுணங்களைத் தனக்குப் பிரதிகூலமாக நினைக்கின்றானோ, அப்படியே அவைகளின் துக்காதி குணங்களையும் நினைப்பதால் சாஸ்திரத்தில் இவைகௌணாத்மா வெனப்படுகின்றன.

இதனின்(கௌணாத்மாவின்)வேறாகிய மித்யாத்மா அல்லது முக்கியாத்மாவின் ஞானகாலத்தில் இதன் சம்பந்தமான ஆத்மபுத்தி நஷ்டமாவதால் குணவாயிலாகவே இவை ஆத்மசப்தத்தாற் சொல்லப்படுகின்றன.

ரு. முக்கியாத்மா :—எந்தச் சுயம்பிரகாசவடிவு சாக்ஷியாகிய ஆத்மா பஞ்சகோசங்களையும் பிரகாசிக்கின்றதோ, எதற்குச் சகல சங்காதங்களும் திருசியமோ, அது திருஷ்டாவாம். அதுவே தனது நிஜவடிவாம். எதற்கு மகாவாக்கியங்களால் சொல்லப்படும் பூர்ணாநந்தபிரஹ்மத்தோடு அபின்னத்தன்மை யிருக்கின்றதோ அது முக்கியாத்மா வெனப்படும்.

அந்தச் சேஷியாகிய ஆத்மாவே நிரதிசயப் பிரேமைக்கு விஷயமாம். அந்தப்பிரேமையினால் அதற்கு அநுகூலமான மித்தியாத்மாவிலும்கௌணாத்மாவிலும் ஜீவர்களுக்குப் பிரேமையுண்டாகின்றது.

ஆநந்தம் ரு :-

க. **பிரஹ்மாநந்தம்** :-சமாதியில் உண்டாகும் அல்லது சுழுத்தியிலுள்ள பிம்பபூதமாகிய ஆநந்தம் பிரஹ்மாநந்தமாம்.

உ. **விஷயாநந்தம்** :-ஜாக்கிரசொப்பனங்களில் விஷயப்பிராப்தியாகிய நிமித்தத்தால் ஏகாக்கிரமாகிய சித்தத்தி லுண்டாகும் ஆத்மசொரூபமாகிய ஆநந்தத்தின் க்ஷணிகப்பிரதிபிம்பம் விஷயாநந்தமாம். இதனையே இலேசாநந்த மென்றும், மாத்திராநந்த மென்றும் கூறுவர்.

ரு. **வாசனாநந்தம்** :-சுழுத்தியினின் றெழுதல் முதலிய * கச. உதாசீனதசையில் அநுபவிக்கப்படும் ஆநந்தம் வாசனாநந்தமாம்.

---

* கச. சுழுத்தியினின்றும் எழுந்தகாலத்துச் சுகதுக்கங்களின் அபாவ மிருக்கின்றது. ஆதலால் அது உதாசீனதசையாம். இவ்வாறே ஜாக்கிரத்திலெங்கெங்குச் சுகதுக்கங்களிரண்டின் இன்மை யிருக்கின்றதோ, அந்தந்தக்காலம் உதாசீனதசை யெனப்படும்.

இலக்ஷணதோஷம் ௩ :-

†க. அவ்வியாப்தி:-இலக்ஷியத்தின் ஏகதேசத்

---

எங்குச் சுகமிருக்கின்றதோ, அங்கு ராகமிருக்கின்றது. எங்குத் துக்கமிருக்கின்றதோ, அங்குத் துவேஷமுண்டாகின்றது. ஆதலால் சுகதுக்கவடிவநிமித்தத்தினுற்றோன்றிய இராகத்துவேஷங்களின் இன்மைக்காலத்திலே உதாசீனத்தன்மையென்றும் தூஷ்ணீம் ஸ்திதி யென்றும், சும்மாவிருக்கும்நிலை யென்றுங் கூறுவர்.

† இலக்கிய மலலா வற்றி
    லிலக்கணஞ் செல்லலாலே
அலக்கிய மருவு மத்தை
    யதிவியாத் திதோட மென்ப
இலக்கியத் தொருபாகத்தி
    லிலக்கணஞ் செலாமை தன்னைத்
துலக்கவி லவ்வி யாத்தி
    தோடமென் றுரைப்பர் கற்றோர். (க)

இலக்கிய முற்று மந்த
    விலக்கண மிலாமை தன்னை
இலக்கண சம்ப வமென்
    றியம்புவ ரிவைகண் மூன்றும்
இலக்கிய மறிய வொட்டா
    விலக்கண தோட மாகும்
இலக்கணந் தனக்கிம் மூன்று
    மின்மையே யிலக்க ணங்காண். (உ)

தில் இலக்ஷண மிருத்தல். அது பசு கபில நிற முடைய தெனல்.

௨. அதிவியாப்தி:—இலக்ஷியத்தில் வியாபித்து, இலக்ஷியமல்லாததிலும் அந்த இலக்ஷணமிருத்தல். அது பசு கொம்புள்ள தெனல்.

௩. அசம்பவம்:—இலக்ஷியத்தில் இலக்ஷண மில்லாதிருத்தல். அது பசு பிளவுபடாதகுளம்பு களுடைய தெனல்.

உத்தேசமுதலியன ௩:—

‡ க. உத்தேசம்:—பெயரைக் கீர்த்தி(சொல்லு)தல்.

---

ஆவினைக் கோடு டைத்தாக்கூற
லதிவியாத் திதோட மாகும்
ஆவினைக் கபில மென்ன
வவ்வியாத் திதோட மாகும்
ஆவொற்றைக் குரத்த தென்ன
லசம்பவ மிவைக ளின்றி
* ஆவலே தாடித் தென்ன
லமையிலக் கணமா மன்றே. (௩)

* ஆ = அலேதாடியுடையது.

‡ ஒருபொருட் குள்ள நாம
முரைப்பதுத் தேச மத்திற்
குரியதாந் தன்மை கூற

உ. இலக்ஷணம் :- அசாதாரணதர்மம் (ஒன்றி லிருப்பதாகிய தர்மம்).

௩. பரீக்ஷை:-பதக்கிருதி (அதிவியாப்திமுத லிய தோஷங்களை விசாரித்தல்).

உலகம் ௩ :-

க. சொர்க்கம் :- புண்ணியமுடையோரது விஷயசுகாநுபவங்களுக் கிடமாயும், காமதேநு கற்பகத்தருமுதலான பல ஐசுவரியங்களுடைய தாயும், புண்ணிய உத்கிருஷ்டத்தால் அடைதற் குரிய பலவகைப் பிரகாசங்களோடுகூடிய இந்தி ரலோகமுதல் சத்தியலோகம் வரையிலுமுள்ள உலகங்கள் சொர்க்கலோக மெனப்படும்.

உ. மத்தியம் :-மிசிரகருமமுடைய ஜீவர்களி ன் போகங்களுக்கிடமாயும், பற்பல சுகதுக்கங் களுக் கேதுவான சாமக்கிரிக ளுடையதாயும், சூரியாதிப்பிரகாசங்களோடு கூடியதாயு முள்ள து மத்தீய(மிருத்யு)லோக மெனப்படும்.

---

ஆறுமிலக் கணமா மத்தி
அரைமிலக் கண்முண் டாவென்
அசாவுதல் பரீட்சை யாகுக்
திருமிலக் கண்முக் குற்றஞ்
சார்ந்திடா திருத்தல் வேண்டும்.

௩. பாதாளம் :—ஜீவர்களின் போகத்திற்கிடமாயும், உண்பதற்கும் பருகுவதற்கும் யோக்கியமான பல சாமக்கிரிகளோடு கூடியதாயும், மணி (இரத்தினம்)முதலான பிரகாசங்களோடு கூடியதாயு முள்ள அதலமுதல் பாதாளம் வரையிலுள்ள உலகங்கள் பாதாளலோக மெனப்படும்.

ஏஷணை ௩:—இச்சை அல்லது வாசனை.

௧. புத்திரேஷணை (புத்திரன்து இச்சை).

௨. வித்தேஷணை(தனம் பூமிமுதலியவற்றின் இச்சை).

௩. உலகஏஷணை:— எல்லோரு மென்னைத் துதிக்கவேண்டும்; ஒருவரு மென்னை நிந்திக்கலாகா தென்னு மிச்சை, அல்லது பரலோகங்களின் இச்சை.

* கரு. சதுமுதலியன:—௩ வைராக்கியம் தத்துவஞானம் உபரதி என்னும் மூன்றற்கும்.

௧. வைராக்கியத்தினது:—

---

* கரு. ஸ்ரீபஞ்சதசி சித்திரதீபம் ருஎ௨, ருஎ௩, ருஎச-வது சுலோகத்திலும் அதன் டிப்பணத்திலும் இவைகளின் விரிவைக் காண்க.

(க) ஏது:--இந்தலோகத்தின் விஷயங்களிலும் பரலோகத்தின் விஷயங்களிலும் அநித்தியத்தன்மையின் புத்திவடிவதோஷதிருஷ்டி (விவேகம்).

(உ) சொரூபம் :- ஜிஹாசை (விடுதலின் இச்சை).

(ங) பலம் :-விட்டபின் அந்தப் போக்கிய (விஷய)ங்களில் உண்டாகும் உபரதி.

உ. தத்துவஞானத்தினது:-

(க) ஏது:-குருமுகமாக மகாவாக்கிய உபதேசமும் சாஸ்திரவிசாரமுமாகிய இருவகைச்சிரவணாதி (சிரவணம் மனனம் நிதித்தியாசனமென்னும்) மூன்றும்.

(உ) சொரூபம்:-மித்தையினையும் (சகல அநாத்மவஸ்துக்களையும்) தத்துவத்தையும் (பிரத்யக்பின்னபிரஹ்மத்தையும்) விவேகித்தல் அதாவது நிஷ்பிரபஞ்ச ஆத்மாவின் (தன்னின்) வேறாகாத பிரஹ்மத்தினை நிச்சயித்தல்.

(ங) பலம் :-மீண்டும் கிரந்தி (முடிச்சு) உதயமாகாமை அதாவது காரண (அவித்தை) காரியங் (ஜந்மாதி)களோடுகூடிய அந்நியோந்நியாத்தியா

சவடிவ சித்ஜடக்கிரந்தியின் அத்தியந்த நிவிரு த்தி(பரமாநந்தத்தின் பிராப்திவடிவ மோக்ஷம்).

ங. உபரதியினது:—

(க) ஏது:–இயமம், நியமம், ஆசனம், பிராண யாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சவிகற்பசமாதி என்னும் எட்டும்.

(உ) சொரூபம்:–சித்தநிரோதவடிவ யோகம் (நிருவிகற்பசமாதி).

(ங) பலம்:–வியவகாரத்தின் விஸ்மிருதி (ம றதி).

கரணம். ங:–ஜீவிதஅவஸ்தையில் ஜீவனாகிய கர்த்தாவினால் செய்யப்படுகின்ற விகித அவிகித கர்மங்களுக்கு இம்மூன்றும் சாதனமாயிருத்த லால் கரண மெனப்படுகின்றன.

க. மனம். உ. வாக்கு ங. காயம்.

கர்த்தவ்யமுதலியன ங:—

க. கர்த்தவ்யம்:-செய்யத்தக்க ஞானசாதனம்.

உ. ஞாதவ்யம்:— அறியத்தக்க ஞானத்தின் விஷயம் (பிரஹ்மாத்ம ஐக்கியம்).

௩. பிராப்தவ்யம்:—அடையத்தக்க ஞானத்தின் பயனாகிய மோக்ஷம்.

கர்மம் ௩:—

க. புண்ணியம்—:சுருதிஸ்மிருதியாதிகளிற் கூறிய யஞ்ஞாதிவிகிதகர்மங்கள் தமது அநுஷ்டானவாயிலாகப் புண்ணியவடிவ அதிர்ஷ்டத்தை யுண்டுபண்ணிச் சுவர்க்காதி பயனைத் தருதலால் புண்ணியகரும மெனப்படுகின்றன.

உ. பாபம்:—பிராந்தியி(மயக்கத்தி)னாற் தனதிச்சையின்படி செய்த சுருதியாதிகளில் நிஷேதிக்கப்பட்டுள்ள பரஸ்த்ரீகமனமுதலான கருமங்கள் தமது அநுஷ்டானவாயிலாகப் பாபவடிவ அதிருஷ்டத்தை யுண்டுபண்ணி நரக முதலான பயனைக் கொடுப்பதால் பாபகரும மெனப்படுகின்றன.

௩. மிசிரம் (கலப்பு) :— முற்கூறிய கிரமமாக அநுஷ்டிக்கப்படும் விதிநிஷேத மென்னும் இருவகைக்கருமங்களும் தமதநுஷ்டானவாயிலாகப் புண்ணியபாபவடிவ அதிர்ஷ்டத்தினை யுண்டாக்கித் தாழ்வும் உயர்வுமாகிய மனிதப்பிறப்பைத் தருதலால் மிசிரகரும மெனப்படுகின்றன.

*௧௪௯. கர்மம் ௩:—

௧. சஞ்சிதம்:—ஜன்மாந்தரங்களில் சேர்க்கப்பட்ட கர்மம்.

௨. ஆகாமியம்:—வர்த்தமான (இந்த) ஜன்மத்தில் செய்யப்படும் கர்மம்.

௩. பிராரப்தம்:—வர்த்தமான ஜன்மத்தின் ஆரம்பத்திற் கேதுவான கர்மம்.

கர்மமுதலியன ௩:—

௧. கர்மம்:—வேதவிகிதகர்மம்.

௨. விகர்மம்:—வேதத்திற்கு விருத்தமாகிய கர்மம்.

௩. அகர்மம்:—இருவிதகர்மத்தையும் செய்யாதிருத்தல்.

காரணவாதம் ௩:—

†௧. ஆரம்பம்:—பாட்டன் முதலியவர்களால் செய்யப்பட்ட பழைய வீடு இடிந்துபோக, அதி

---

*௧௬. வராகோபநிஷத்து ௧-வது அத்யாயம்.

†இடிந்ததோர் வீட்டிற் போகா
தெஞ்சிய தளவா டங்கொண்

ளுள்ள செங்கல்முதலிய சாமக்கிரிகளால் முறுப
டியும் புதுவீட்டைக் கட்ட ஆரம்பித்தல்போல,
காரியமாகிய பிருதிவிமுதலியவற்றின் நாசத்தன்

டடர்ந்தவீ டாரம் பிப்பா
ரங்ஙனம் பிரள யத்தே
பொடிந்திடா தெஞ்சி நின்ற
பூவணு வாதி தம்மாற்
படர்ந்தபூ வாதி யாக்கல்
பகருமா ரம்ப வாதம். (க)

சீரிணை யாயி கர்கொள்
சிறப்பிலா வாதந் தன்னிற்
காரியந் தன்னிற் பேதங்
காரணந் தனக்குண் டென்ப
கூரிய புத்தி யில்லார்
கொண்டமே னேக்கற் கீரகச்
சீரிய கோத மர்தாங்
கூறிய தோரா ரன்னோர். (உ)

பாலதே தயிரா தல்போற்
பகர்பிர கிருதி தானே
ஏலுமான் முதலாக் கூறு
மியாவுமாய்ப் பரிண மித்தன்
மாலுறு சாங்கி யர்கண்
மதிப்பரி ணாம வாதஞ்
சாலகா ரணத்திற் காருஞ்
சாருகா ரியத்த பேதம். (௩)

மைக்குக் காரணமாகிய பரமாணுக்கள் கெடா திருக்கின்றன, அவற்றால் மறுபடியும் வேறு பிருதிவிமுதலியவற்றின் ஆரம்பம் உண்டாகிறது. இப்படி நியாயமதத்தில் ஆரம்பவாதம் ஒப்பப்பட்டிருக்கின்றது. இதில் காரிய காரணங்களுக்குப் பேத முண்டு.

---

ஈதெனக் காணி ரச்சு
விருந்தவா றிருக்க வங்கு
மேவுவேற் றுருவப் பாம்பு
விடமசத் தையதாத் தோற்று
மீதுபோற் பிரம மென்று
மிருந்தவா றிருக்க வஃதின்
மேவுவேற் றுருவ லோகம்
விடமசத் தையதாத் தோற்றும். (௪)

வித்தக வதிட்டா னத்தில்
விடமசத் தையதா வேறு
பெறத்தருத் தோற்ற மஃதே
புகல்விவர்த் தவாத மிங்கு
மித்தையாங் கார்யா பேத
மேவிடுங் காரணந்தான்
இத்தகை விவர்த்த வாத
மியம்பிடும் வேதாந் திகள். (௫)

உ. பரிணமம்:-பாலின் பரிணமம் (வேற்ரு ருவம்) தயிராதல்போலச் சாங்கியமதத்தில் பிர கிருதியின் பரிணமம் ஜகத்தாம். உபாசகர்களது மதத்தில் பிரஹ்மத்தின் பரிணமம் ஜகத்தும் ஜீ வனுமாம். இப்படி அவர்கள் பரிணமவாதம் ஒ ப்பியிருக்கின்ருர்கள். இதில் காரியகாரணங்களு க்கு அபேதமுண்டு.

ங. விவர்த்தம்:-நிர்விகாரமாகிய இரஜ்ஜுவில் இரஜ்ஜுவாகிய அதிஷ்டானத்திலும் விஷமச த்தையுடைய வேற்றுருவமாகிய சர்ப்பமுண்டா கின்றது. அது இரஜ்ஜுவின் விவர்த்த (கற்பித காரிய)மாம். அதுபோல நிர்விகாரப் பிரஹ்மத் தில் அதிஷ்டானப்பிரஹ்மத்திலும் விஷமசத் தையுடைய வேற்றுருவமாகிய ஜகத்துண்டாகி ன்றது. அது பிரஹ்மத்தின் விவர்த்த (கற்பித காரிய)மாம். இப்படி வேதாந்த சித்தாந்தத்தில் விவர்த்தவாதம் ஒப்பப்பட்டிருக்கின்றது. இதி லும் காரியகாரணங்களுக்குப் பாதத்திலாகிய அபேதமுண்டு.

காலம் ங:—

க. இறப்பு:-நிகழ்காலத்தின் முற்கணத்துள்ள சூரியாதி உதயங்களாலுண்டாகும் க்ஷணமுகூர்

த்தாதிவடிவ அநந்தக் கிரியைகளால் உபலக்ஷிக்க ப்படும் காலம் இறந்தகாலம்.

உ. எதிர்வு:—நிகழ்காலத்தின் பிற்கணமுதல் யுகாதிவரையிலுமுள்ள காலம் எதிர்காலம்.

ங. நிகழ்வு:— பிராரப்தம் (ஆரம்பிக்கப்பட்டது) நாசமாவதன் முன் பல கிரியைகளால் உபலக்ஷிக்கப்படும் காலம் நிகழ்காலம்.

*கஎ. குணம் ங:—

க. சத்துவம். உ. இராஜசு. ங. தமசு.

குருடுமுதலியன ங:—

குருடுமுதலியன நேத்திரத்தின் தர்மமாம். இங்கே குருடாகிய நேத்திரத்தின் தர்மமானது செவிடு ஊமைமுதலிய மற்ற இந்திரியங்களின் தர்மங்களையும் குறிப்பிப்பதாகின்றது.

---

*கஎ. "सत्त्वरजस्तमांसि च गुणत्रयम् ॥

சத்துவம், இராஜசு, தமசு என்பன குணத்திரயம்." என்பது வராகோபநிஷத்து.

மந்தத்தன்மையும் தெளிவும் சகல இந்திரியங்க ளுக்கும் சமமென் றறிக.

க. குருடு:-நேத்திரம் எவ்விதத்தாலும் தனது விஷயத்தைக் கிரகியாதிருத்தல்.

---

“ सात्त्विकराजसतामसलक्षणानि त्रयो गुणाः ।
अहिंसासत्यमस्तेयब्रह्मचर्यापरिग्रहाः ॥
अक्रोधो गुरुशुश्रूषा शौचस्संतोष आर्जवम् ।
अमानित्वमदंभित्वमास्तिकत्वमहिंसता ॥
एते सर्वे गुणा ज्ञेयास्सात्त्विकस्य विशेषतः ।
अहं कर्तास्म्यहं भोक्तास्म्यहं वक्ताऽभिमानवान् ॥
एते गुणा राजसस्य प्रोच्यन्ते ब्रह्मवित्तमैः ।
निद्रालस्यो मोहरागौ मैथुनं चौर्यमेव च ॥
एते गुणास्तामसस्य प्रोच्यन्ते ब्रह्मवादिभिः ।
ऊर्ध्वे सात्त्विको मध्ये राजसोधस्तात्तामस इति ॥
सम्यग्ज्ञानं सात्त्विकम् । धर्मज्ञानं राजसम् ।
तिमिरान्धं तामसमिति ॥

உ. மந்தம்:-இந்திரியங்கள் தமது விஷயத்தைச் சொற்பமாகக் கிரகித்தல்.

---

சாத்விகராஜஸதாமஸலக்ஷணங்களுடைய மூன்று குணங்களுண்டு.

க. அஹிம்ஸை, சத்தியம், திருடாமை, பிரஹ்மசரியம், பிறர்பொருள்கொள்ளாமை, கோப மின்மை, குருபணிவிடை, சௌசம், சந்தோஷம், நேர்மை, மானமுடைமை யின்மை, இடம்ப மின்மை, ஆஸ்திகத்தன்மை, அஹிம்சிரத்தன்மை(துன்பஞ்செய்யாத வியல்புடைமை)யென்னும் இவையாவும் விசேஷமாகச் சாத்துவிகனது குணங்களென்று அறியப்படுகின்றன.

உ. யான் செய்பவன், யான் புசிப்பவன், யான் சொல்லுகிறவன், அபிமானமுடையவன் என்னும் இவை இராஜஸனது குணங்களென்று பிரஹ்மவித்துக்களாற் சொல்லப்படுகின்றன.

ங. நித்திரை, சோம்பல், மோகம், இராகம், மைதுனம், திருட்டு என்னும் இவை தாமஸனது குணங்களென்று பிரஹ்மவாதிகளால் சொல்லப்படும். மேலே சாத்துவிகமும், நடுவில் இராஜஸமும், கீழே தாமஸமும் என்க. நல்ல ஞானம் சாத்துவிகமும், தர்மஞானம் இராஜஸமும், அறியாமை தாமஸமுமாமென்க.'' சாரீரகோபநிஷத்து.

ரு. தெளிவு:-இந்திரியங்கள் தமது விஷயத்தைச் தெளிவாகக் கிரகித்தல்.

சத்தை ரு:—

*க. வியாவகாரிகம்:-எவற்றிற்குப் பிரஹ்மஞானமின்றிப் பாதம் (மித்தியாத்துவ நிச்சயம்) உண்டாகிறதில்லையோ, பிரஹ்மஞானத்திற்குப் பின் எவற்றிற்கு அதிஷ்டானத்தினும் வேறாகிய சத்தாஸ்பூர்த்தி தோற்றுகிறதில்லையோ, அத்தன்மைய மாயையும் அதன் காரியமும் வியாவகாரிகமாம். அவற்றின் சத்தையினை வியாவகாரிக சத்தை யென்பர்.

உ. பிராதிபாஸிகம்:—எவற்றிற்குப் பிரஹ்ம ஞானமின்றி ரஜ்ஜுமுதலியவற்றின் ஞானத்தினாலேயே பாத முண்டாகிறதோ, அத்தன்மைய தூலாஞ்ஞானமும், அதன் காரியமான ரஜ்ஜுசர்

---

* என்றுமொரு படித்தாக விலகிநின்று பொன்று
இருப்பதுவே யெழில்பார மார்த்திகமாஞ் சத்தை
யொன்றுருப் பிரமஞானம் பொருந்தளவு மிருந்து
போவதுவே புகல்வியாவ காரிகமாஞ் சத்தை
துன்றுவியா வகாரிகந்தான் றேற்றுமள விருந்து
தொலைவதுவே சொல்பிராதி பாஸிகமாஞ் சத்தை
என்றுமுள பிரமத்தோ டிலகுநனு வுலகு
மியல்கனவிற் றேற்றுலகு மிலக்கியுங்க ளாமே.

ப்பமுதலியனவும் பிராதிபாஸிகமாம். அவற்றின் சத்தையினைப் **பிராதிபாஸிகசத்தை** யென்பர்.

ங. **பாரமார்த்திகம்**:-எதற்கு மூன்று காலத்திலும் பாதமுண்டாகிறதில்லையோ, அத்தன்மைய உற்பத்தி நாசமின்றியதா யிருத்தலின் நித்திய (சத்திய)மான சேதனம் எதுவோ, அது பாரமார்த்திகமாம். அதன் சத்தையினை(இருப்பை)ப் **பாரமார்த்திகசத்தை** யென்பர்.

பாலபோதம் ருஉ-வது டிப்பணியில் இதன் திருஷ்டாந்தம் பார்க்க.

* கஅ. **சம்பந்தம் ங**:-

க. **சையோகம்**. உ. **சமவாயம்**. ங. **தாதாத்மியம்**.

**சரீரம் ங**:-அபிமானியாகிய ஜீவசேதனமின்றி வியாபாராதிகளில் சுதந்தரமில்லாததும், ஞானத்தினுல் பாதமாவதும், பிராரப்தக்ஷயத்தினுல் நாசமடைவதுமா யிருத்தலால் சரீர மெனப்படுகிறது.

---

*கஅ. இதன் விவரத்தை **விருத்திப்பிரபாகரத்திற்** காணலாம்.

க. ஸ்தூலம் :—பஞ்சீகிருதபஞ்சமகாபூதங்களின் பரிணாமமு(காரியவடிவ இருபத்தைந்து தத்துவங்களு)ம், சுக்கிலசோணிதக்கலப்பினலுண்டானதும், பால்முதலான அந்நாதிகளால் ரக்ஷிக்கப்படுவதும், ரூபாதி அபிமானத்தால் இந்திரியாதிகளால் கோசரிக்கப்படுவதும் ஸ்தூலசரீரமாம்.

உ. சூக்ஷ்மம் :—அபஞ்சீகிருத பஞ்சபூதங்களின் காரியமும், பதினேழுதத்துவங்களோடு கூடியதும், மூன்று கோசங்களை யுடையதும், பாகிய இந்திரியாதிகளால் கோசரிக்கப்படாததும் சூக்ஷ்மசரீரமாம்.

ங. காரணம் :—ஸ்தூலசூக்ஷ்மசரீரங்களுக்கு உபாதானகாரணமான அஞ்ஞானம் காரணசரீரமாம்.

சிரவணமுதலியவற்றின் பலம் ங:—

க. பிரமாணசமுசயநாசம். உ. பிரமேயசமுசயநாசம். ங. விபரியயநாசம்.

சுழுத்தி ங:—

க. சுழுத்திஜாக்கிரம்:—சாத்விகவிருத்தி பூர்வகமாகிய சுகசுழுத்தி.

உ. சுழுத்திசொப்பனம் :—இராஜஸவிருத்தி பூர்வகமாகிய துக்கசுழுத்தி.

ரு. சுழுத்திசுழுத்தி:-தாமஸவிருத்திபூர்வகமாகிய காட(ஆழ்ந்த)சுழுத்தி.

சுழுத்திமுதலியன ரு:-

க. சுழுத்தி :-ஜாக்கிரசொப்பனபோகங்களைத் தரும் பிராரப்தகருமம் க்ஷயமாகச் சுழுத்தி சம்பந்தமான சுகபோகங்களைத் தரும் கருமங்கள் உதயமானபின், பிரசன்னமான முகமுதலான அடையாளங்களோடுகூடிய சகல தெளிவான விருத்திகளின் அபாவவடிவ நித்திரையுண்டாகி, மீண்டும் ஜாக்கிரபோகங்களைத்தரும் கருமங்கள் உதயமாக எது நாசமாகின்றதோ, அது சுழுத்தியெனப்படும்.

உ. மூர்ச்சை:-ஜாக்கிராவஸ்தையிலேயே சோகாதிகளால், அல்லதுமுத்கர(இருப்புத்தடி)முதலான ஆயுதங்களின் அடியினுல், அல்லது அசுவாதிகளிலிருந்து விழுவதால் உண்டாகும் மலினமும் குரூரமுமான முகமுதலான அடையாளங்களோடு சகல தெளிவான விருத்திகளின் அபாவவடிவாய் எதில், பிராரப்த சேஷத்தினுல் மீண்டும்

எழுதல் அல்லது மரித்த லுண்டாகின்றதோ, அ து மூர்ச்சை யெனப்படும்.

௩. சமாதி:-ஜாக்கிரத்திலேயே தன் பிரயத்தி னத்தோடு சாதிக்கப்படும் நிதித்தியாசனத்தினால் அல்லது பதஞ்சலிபகவான் கூறிய தாரணத்தியா னுதிகளின் அநுஷ்டானுதிகளா லுண்டாகும் சித் தநிரோதம் சமாதி யெனப்படும். அல்லது சா க்ஷாத்காரத்தின் பின்னுண்டாகும் பிரஹ்மாகா ரசித்தவிருத்திகளின் பிரவாகம், அல்லது சகல விருத்திகளும் நிரோதமாகப்பிரஹ்மனடிவாக உ ண்டாகும் சித்தத்தின் அசைவற்ற நிலை சமாதி யெனப்படும்.

சொப்பனம் ௩:-

௧. சொப்பனஜாக்கிரம் :—எதார்த்தமாகிய பொருளைச் சொப்பனத்திற் காணுதல்.

௨. சொப்பனசொப்பனம் :-சொப்பனத்தில் இரஜ்ஜுசர்ப்பமுதலிய பிராந்திகளைக்காணுதல்.

௩. சொப்பனசுழுத்தி:-கண்ட சொப்பனத்தி ன் மறதி(நினைவின்மை).

ஞாதாமுதலியன ௩:-

க. ஞாதா(காண்பான்). உ. ஞானம்(காட்சி). ௩. ஞேயம்(காணப்படுபொருள்).

* கசு. ஞானப்பிரதிபந்தகம் ௩:-

க. சமுசயம். உ. அசம்பாவனை. ௩. விபரீதபாவனை.

ஞானமுதலியன ௩:-

க. ஞானம்:-தத்துவம்பதார்த்த சோதன பூர்வகமாகக் குருவினுலுபதேசிக்கப்பட்ட மகாவாக்கியவிசாரஞ் செய்வதாலுண்டாகும் பிரஹ்மாத்மசாக்ஷாத்காரம்.

உ. வைராக்கியம்:-முன்னுள்ளதும் இனிவருவதுமான விஷயங்கள் அநர்த்தத்திற் கேதுவென்னும்தோஷதிருஷ்டியினுலும், மித்தியாத்வ(பாதயோக்கியசொரூபமுடைய தென்னும்) புத்தியினுலும் உண்டாகும் அவற்றின் இச்சை யில்லாமை.

௩. உபரதி:-சித்தத்திருக்கும் இலௌகிகவைதிகமான சர்வவியவகாரங்களிலும் இச்சையில்லாமை அல்லது மறதி.

---

*கசு. இதன்விரிவை விசாரசாகரம், கசு-ம் பிரசங்கத்திற் காண்க.

தாதாத்மியம் :-௩.

௧. பிரமஜதாதாத்மியம் :-அகங்காரத்திற்குச் சாக்ஷியினோடுள்ள தாதாத்மியம்.

௨. சகஜதாதாத்மியம்:-அகங்காரத்திற்குச் சிதாபாஸனோடுள்ள தாதாத்மியம்.

௩. கர்மஜதாதாத்மியம்:-அகங்காரத்திற்கு ஸ்தூலதேகத்தோடுள்ள தாதாத்மியம்.

* ௨௦. தாபம் ௩:-துக்கம்.

௧. அத்தியாத்மம் :-ஸ்தூலசூக்ஷ்மசரீரங்களில் அந்தக்கரண பிராண இந்திரியதேகாதி சங்காதங்களை ஆசிரயித்து, காமக்குரோதாதி இரக்தசூலையாதி, வியஸனங்களால் உண்டாகும், வியாதி ஆதியாகிய துக்கங்கள் அத்தியாத்மதாபமாம்.

௨. அதிதெய்வம்:-தெய்வத்தினு லுண்டாகும் சீதம் உஷ்ணம் பெருமழை மழையின்மை மின்னல் இடி பூகம்பமுதலிய துக்கங்கள் அதிதெய்வதாபமாம்.

௩. அதிபூதம்:-தனது சரீரத்திற்கு வேருகிய நேத்திரத்திற்கு விஷயமாகும் பிராணி(திருடர்

---

*௨௦. முக்தகலோபநிஷதம்.

புலி சத்துரு முதலான பூதாதி)களால் உண்டாகும் துக்கம் அதிபூததாபமாம்.

நாதமுதலியன ௩:-

க. நாதம்:-ஓங்காரம் அல்லது சத்தகுணம் அல்லது பரைமுதலிய(ச)வாக்குகள்.

உ. விந்து:-ஓங்காரத்தின் அலக்ஷியார்த்தமாகிய துரியபதம்.

௩. கலை:-ஓங்காரத்தின் அகாராதி மாத்திரை; பரைவாக்காகிய அம்சம்(சத்தத்தின் அவயவம்).

நிவிருத்தி ௩:-(தாதாத்மியத்தின்)

க, பிரமஜத்தின் நிவிருத்தி:- ஞானத்தினல் பிராந்தி(அவிவேகம்)நாசமாக, பிரமஜதாதாத்மியத்தின் நிவிருத்தி யுண்டாகின்றது.

உ. சகஜத்தின் நிவிருத்தி:-சகஜதாதாத்மியத்திற்கு ஞானத்தால் பாதமும், ஞானியின் தேகம் விழுந்தபின் நாசமு முண்டாகின்றது.

௩. கர்மஜத்தின் நிவிருத்தி:-ஞானியின் கர்மஜதாதாத்மியம் பிராரத்தபோகம் முடிவாகவே நிவர்த்தியாகின்றது.

பாபகரும்பயன். ௩:-

௧. உத்கிருஷ்டம்:-பிரஹ்மஹத்தி, ப்ரூணஹத்தி(சிசுக்கொலை)குருபத்நியைக் கூடுதல் முதலியன உத்கிருஷ்டபாதகங்கள். இவைகளைச் செய்வோன் எவரும் பரிதாபப்படும் சிம்ஹம், சர்ப்பம், தேள், தம்சகம்(குழவி கொசுமுதலியன), மலப்புழு, நாய், சுவபசன்(நாய்மாமிசமுண்ணும் சண்டாளன்), முள்விருக்ஷங்கள் முதலான தாமஸசரீரங்களைப் பயனாக அடைகின்றான்.

௨. மத்யமம்:-திருட்டு, பொய், பிறரைவஞ்சித்தல், பரஸ்த்ரீசங்கமுதலியன மத்யமபாபங்கள். இவைகளைச்செய்வோன் எருமை, குதிரை, கழுதை, சிலைப்பேன், கொசு, மா, பலா, தெங்குமுதலான தாமஸராஜஸசரீராதிகளைப் பயனாக அடைகின்றான்.

௩. சாமானியம்:-ஈ எறும்பு ஆடு முதலானவைகளை இம்சித்தல் சாமாநியபாபங்கள். இவைகளைச் செய்வோன் பசு, யானை, அரசு, துளசி, பூங்கொத்து, கொடிகள் முதலான ராஜஸசரீரங்களைப் பயனாக அடைகின்றான்.

பிரபஞ்சம்௩:-சமஷ்டிவியஷ்டியாகியமூன்று

சரீரம், பஞ்சகோசம், மூன்றவஸ்தை முதலிய நாமரூபங்கள்.

க. ஸ்தூலம். உ. சூக்ஷமம். ௩. காரணம்.

*உக. பிரஹ்மத்தின் ரூபம் ௩:-

க. சகளம். உ. சகளநிஷ்களம். ௩. நிஷ்களம்.

பிரஹ்மம் ௩:-

க. விராட்டு. உ. இரணியகருப்பன். ௩. ஈசுவரன்.

*உஉ. பிராணயாமம் ௩:-

க. பூரகம். உ. கும்பகம். ௩. இரேசகம்.

பிராரத்தம் ௩:-

க. இச்சை:-தனது இச்சையாற்செய்யப்பட்ட பிக்ஷை (தீர்த்த) யாத்திரைகளால் உண்டாகும் சுகதுக்காதிகள் இச்சாபிராரப்த மெனப்படும்.

உ. பரவிச்சை :-சமாதி அல்லது உத்தான அவஸ்தைகளில் சிஷ்யன் அல்லது புண்ணியவா

---

*உக. சாண்டில்யோபநிஷத்து ௩-வது அத்யாயம்.

*உஉ. அமிர்தநாதோபநிஷத்துமுதலியன.

ன்களான பக்தர்களால் தனது இச்சையில்லாம லேகொடுக்கப்படும் அந்நாதிகளும், அதனுலுண் டாகும் சுகாதிகளும், நிந்தகன் பொருமையுள்ள வன்கொடியன்பன்றி துஷ்டசித்தமுடையோன் துவேஷிமுதலானவர்களால் செய்யப்படும் நிந் தை பீடையாதிகளாலுண்டாகும் துக்காதிகளு ம் பரேச்சாபிராரப்த மெனப்படும்.

௩. அநிச்சை:—தன்னிச்சையும் பிறரிச்சையுமி ன்றி, ஆகாயத்திருந்து விழும் பழம்போல, அக ஸ்மாத்தாக(நிமித்தமில்லாது)தனக்கிஷ்டமில்லா த பாறை யிடிந்து விழுதல் முள்தைத்தல் முதலா னவைகளாலுண்டாகும் துக்காநுபவமும், தனக் கிஷ்டமான தாலம்(பனை), மா, பலாமுதலான பழங்கள் விழுவதாலுண்டாகும் சுகாநுபவமும் அநிச்சாபிராரப்த மெனப்படும்.

பிராரப்தகருமம் ௩:—

*௨௩. க. மந்தம். ௨. தீவிரம். ௩. தீவிரதரம்.

புண்ணியகருமபயன் ௩:—

க. உத்கிருஷ்டம் :—உபாசனையால் ஹிரண்ய

---

*௨௩. விசாரசாகரம் ௭-வது தரங்கம் ௭௭அ-வது பிரசங்கத்தில் இதன் விரிவைப் பார்க்க.

கர்ப்பசரீரப்பிராப்தியைக் கொடுப்பது உத்கிருஷ்ட புண்ணியகருமபயன்.

உ. மத்யமம்:–சகாமகர்மங்களால் இந்திராதி சரீரப்பிராப்தியைக் கொடுப்பது மத்யம புண்ணியகருமபயன்.

ந. சாமாநியம் :– யக்ஷராக்ஷஸாதிசரீரப் பிராப்தியைத் தருவது சாமானியபுண்ணியகருமபயன்.

*உச. மநோநாசாதி ந:–

க. மநோநாசம். உ. வாசனக்ஷயம். ந. தத்துவஞானம்.

மிசிரகருமபயன் ந:–

க. உத்கிருஷ்டம் :–நிஷ்காமகர்மாநுஷ்டான முதல் நிர்விகற்பசமாதிபரியந்த முள்ள சகல சாதனங்களையும் அவைகட்குரிய சரீரப்பிராப்தி உத்கிருஷ்டமிசிரகருமபயனும். புண்ணியமிருந்த அந்தச் சரீரத் துண்டாகும் ஆதிவியாதி(சாரீரமானவை)துக்கா நுபவங்கள் அற்ப்பாபத்தின் பயனும்.

---

*உச: அந்நபூர்ணோபநிஷத்து, முக்திகோபநிஷத்து.

உ. மத்யமம்:–புண்ணியபாபம் சமமாயிருத்த லால் தனது வருணாச்சிரமங்களுக்குரிய காமிய நிஷித்த நித்திய நைமித்திகாதி கர்மாநுஷ்டானாதிகள் அடைதற்குரிய சரீரப்பிராப்தி மத்யமமிசிரகரும பயனும்.

ங. சாமாநியம்:–பாபமிகுதியால் சண்டாளன் வேடன் அல்லது குதிரைமுதலான பசுவாதிகளின்சரீரப்பிராப்தி சாமாநியமிசிர கருமபயனும்.

மூர்த்தி ங:–

க. பிரஹ்மா. உ. விஷ்ணு. ங. சிவன்.

* உடு. வாசனை ங:–

க. லோகவாசனை :–என்னை உலகம் நிந்திக்கலாகாது, எல்லோரும் என்னைத் துதிக்கவேண்டும் என்னும் ஆக்கிரகத்தின் திடஸம்ஸ்காரம்.

உ. தேகவாசனை :–ஸ்தூலசூக்ஷ்மதேகங்களின் ரோகாதிரூப அல்லது பாபரூப மலங்களை ஔஷதாதிகளாலாவது அல்லது தீர்த்தயாத்திரையினாலாவது அடியோடு நீக்குவேன். அன்றி

---

*உரு. முக்திகோபநிஷத்திலும், ஸ்ரீபஞ்சதசி தியானதீபம் கஎ௬-வது சுலோகத்திலும், அதன் டிப்பணத்திலும் இதன் விரிவைக் காண்க.

யும், அவற்றின்கண் புஷ்டியழகுமுதலியவடிவ அல்லது புண்ணியவடிவ குணத்தைச் சம்பாதிப்பேன் என்னும் ஆக்கிரகத்தின் திடஸம்ஸ்காரம்.

ங. சாஸ்திரவாசனை :—சகலசாஸ்திரங்களின் பாடத்தையாவது அர்த்தத்தையாவது அல்லது அந்தந்தச் சாஸ்திரத்திற் கூறிய ஆசரணத்தை (நடையை)யாவது யான்தரிப்பேன் என்னும் ஆக்கிரகத்தின் திடஸம்ஸ்காரம்.

வாதமுதலியன ங:—

க. வாதம்:—குருசிஷ்யசம்வாதம்.

உ. ஜல்பம் :—யுக்திப்பிரமாணங்களில் வல்ல பண்டிதர்கள் பரமதத்தினைக்கண்டித்துத் தம் மதத்தைப் போஷிக்கும் வாதம்.

ங. விதண்டை:—மூர்க்கர்களது பிரமாணயுக்தியில்லாத வாதம்; அல்லது தன் பக்ஷத்தை ஸ்தாபித்துப் பரபக்ஷத்தைக் கண்டித்தல். இது ஸ்ரீஹர்ஷமிசிராசாரியர் கண்டன கிரந்தத்தில் செய்திருப்பது போன்றதாம்.

விதிவாக்கியம் ங:—

க. அபூர்வவிதி :—அபூர்வக்கிரியையை விதிக்கும் வாக்கியம்,

உ. நியமவிதி:–அடையப்பட்ட இரண்டு பக்ஷங்களில் ஒன்றை விதிக்கும் வாக்கியம்.

ங. பரிசங்கியாவிதி:–இரண்டு பக்ஷத்தில் ஒன்றன் நிஷேதத்தை விதிக்கும் வாக்கியம்.

வேதத்தின் காண்டம் ங:–

க. கர்மம்:–தர்மாதி நான்கு புருஷார்த்தங்களையடைவிக்கும் சாதனங்களைக் கூறும் சர்வார்த்தப்பிரகாசகசர்வஞ்ஞகற்பிதமான சங்கீர்ண(கலப்பு)வாக்கியங்களோடு கூடிய வேதவடிவான ஒரு விருக்ஷ மிருக்கின்றது.

அதற்கு ஸ்ரீவியாசர்முதலான ஆசாரியர்களால் கலியில் ஜீவர்களுடைய மந்தபுத்தியை யுத்தேசித்து, இருக்குமுதலிய நான்கு பிரிவுகள் விருக்ஷங்களின் கிளைகள்போல மும்மூன்று காண்டங்களாக வெவ்வேறு அமைக்கப்பட்டிருக்கின்றன.

அவற்றுள், காமியம், நிஷ்காமியம், நித்தியம், நைமித்திகமெனப் பற்பல கருமங்கள் பிரயோகங்கள் அநுஷ்டானங்கள் முதலானவைகளாகப் பலகர்த்தாக்களால் ஜீவர்கள் கருமமார்க்கத்தில் பிரவர்த்திக்கும்பொருட்டுக் கூறப்பட்டுள்ளன. அவை கருமகாண்டங்களாம். அதிகாரிகள் சாஸ்

திராநுசாரமாக எதை யநுஷ்டித்துச் சுவர்க்காதிகளையும் அந்தக்கரணசுத்திமுதலானவைகளையும் பயனாக வடைகின்றார்களோ, அந்தக் கருமகாண்டங்களின் பொருளை நிச்சயிக்க, ரிஷிகள் முனிவர்களால் அமைக்கப்பட்ட நூல்கள் தருமசாஸ்திரங்களாம்.

உ. உபாசனை :—எதில் சகுணநிர்க்குண பேதங்களும், பிரதீக அகங்கிரஹ பேதங்களும், சாதனவடிவ பலவடிவ பேதங்களும், ஒன்பதுவித பக்திபேதங்களும், பலவித பகவத் உபாஸனைகள், அநுஷ்டானங்கள், அதிகாரிகள், பயன் முதலியனவும், அதிகாரிகளுக்கு உபாஸனையின்பொருட்டுச் சொல்லப்படுகின்றனவோ, அது உபாசனா **காண்டமாம்.** எதை யநுஷ்டித்து, உபாசகன் சித்த ஏகாக்கிரவாயிலாகப் பரம்பரையாகச் சகுண நிர்குணபிரஹ்மப்பிராப்தியாகிய பயனை யடைகின்றானோ, அந்த உபாசனாகாண்டப்பொருளை நிச்சயிக்க, ரிஷிகள் முனிவர்கள்முதலானவர்களால் செய்யப்பட்ட நூல்கள் உபாசனாசாஸ்திரங்களாம்.

௩. ஞானம்:—எது ஆத்மஸ்வரூபமாக நிற்றலை அல்லது அவித்தியாநிவிருத்திவடிவ மோக்ஷத்தின் சாதனங்களைக் கூறுகின்றதோ, பரோக்ஷ

அபரோக்ஷஞானத்திற்குச் சாதனமாக யஞ்ஞாதி சமாதி சிரவணாதிவடிவ பகிரங்கஅந்தரங்கசாதனங்கள், அதனதிகாரிகள் முதலானவற்றை விரக்தர்களினது பிரவிருத்தியின் பொருட்டுக் கூறுகின்றதோ, அது பிரஹ்மகாண்டமாம். எதைப்படிப்பதால் புருடன் ஞானவாயிலாக ஜீவன்முக்திவிதேகமுக்திவடிவப் பயனை யடைகின்றானோ, அந்த ஞானகாண்ட அர்த்தத்தை நிர்ணயிக்க, ஸ்ரீமத் வியாசர், சங்கரர், விசுவேசர், வசிஸ்டர் முதலான பல ஆசிரியர்களா லமைக்கப்பட்ட நூல்கள் கௌணவேதாந்த சாஸ்திரங்களாம். வேதாந்தவடிவானஉபநிடதங்கள் முக்கியவேதாந்த சாஸ்திரங்களாம்.

ஜாக்கிரம் ௩ :-

௧. ஜாக்கிரஜாக்கிரம்:-வர்த்தமான ஜாக்கிரத்தில் உண்டாகும் சொரூபசாக்ஷாத்காரம்.

௨. ஜாக்கிரசொப்பனம் :-ஜாக்கிரத்தில் உண்டாகும் சென்ற அல்லது இனி வரும் விஷயங்களைச் சிந்தித்தலாகிய மனோராஜ்யம்.

௩. ஜாக்கிரசுழுத்தி :-ஜாக்கிரத்தில் பிராந்தியினால் உண்டாகும் ஜடசொரூபமாகிய விருத்தி.

ஜீவன் ங :-

க. பாரமார்த்திகன் :- சாக்ஷி(கூடஸ்த)சேதனம்.

உ. வியாவகாரிகன் :-சாபாஸ அந்தக்கரணரூபஜீவன்.

ங. பிராதிபாஸிகன் :-சாபாஸ அந்தக்கரணரூப வியாவகாரிகஜீவனிடத்திற் சொப்பனத்தில் அத்தியஸ்தமாகும் ஜீவன்.

*உசு. க. விசுவன் :-ஜாக்கிரத்தில் மூன்று தேகத்திற்கும் அபிமானியாகிய ஜீவன்.

உ. தைஜஸன்:-சொப்பனத்தில் ஸ்தூலதேகத்தி னபிமானத்தை விட்டுச், சூக்ஷ்மம் காரணமென்னும் இரண்டு தேகங்களின் அபிமானியாயுள்ள அதே ஜீவன்.

ங. பிராஞ்ஞன் :-சுழுத்தியில் ஸ்தூலசூக்ஷ்மதேகங்களின் அபிமானத்தை விட்டுக், காரணதேக மொன்றையே அபிமானித்துள்ள அதே ஜீவன்.

---

*உசு. பைங்கலம், வராகம்.

## நால்வகைப்பதார்த்தங்கள்.



அநுபந்தம் ௪ :—தன்னை அறிந்த பிறகு புருஷனைக் கிரந்தத்தில் பொருத்துவது.

க. அதிகாரி:—மலவிக்ஷேபதோஷங்களில்லாது, அஞ்ஞானதோஷமுள்ளவனாய், விவேகமுதலிய நான்கு சாதனங்களோடுகூடிய புருஷன் வேதாந்தத்திற்கு அதிகாரி.

உ. விஷயம் :—பிரஹ்மாத்ம ஐக்கியம் வேதாந்தசாஸ்திரத்தின் விஷய(பிரதிபாத்திய)மாம்.

௩. பிரயோஜனம் :—சகல துக்கநிவிருத்தியும் பரமாநந்தப்பிராப்தியுமாகிய மோக்ஷம் வேதாந்தத்தின் பிரயோஜனம்.

௪. சம்பந்தம் :—கிரந்தத்திற்கும் விஷயத்திற்கும் பிரதிபாதகப்பிரதிபாத்தியத்தன்மையாகிய சம்பந்தமாம்.

*உஎ. அந்தக்கரணம் ௪ :—

க. மனம் :—சங்கற்பவிகற்பமாகிய விருத்தி; ஸ்தானம் கண்டம்.

---

*உஎ. பைங்கலோபநிஷத்து, யோகசிகோபநிஷத்து.

உ. புத்தி :–நிச்சயமாகிய விருத்தி ; ஸ்தானம் முகம்.

ங. சித்தம் :–சிந்தி(ஸ்மரி)த்தலாகிய விருத்தி; ஸ்தானம் நாபி.

ச. அகங்காரம் :–அகந்தையாகிய விருத்தி ; ஸ்தானம் ஹிருதயம்.

அவச்சேதகம் ச :–வேறுபிரித்தறிவிப்பதான வியாவர்த்தகத்தினை அவச்சேதக மென்பர்.

க. விசேஷணம் :–தனது ஆசிரயத்தின் சொரூபத்தில் பிரவேசித்து, அவ்வாசிரயத்தினைப்பிற பதார்த்தங்களினின்றும்வேறுபிரித்தறிவிப்பது.

(உ-ம்) நீலக்குடத்திலுள்ள நீலநிறம் தனது ஆசிரயமாகிய குடத்தின் சொரூபத்தில் பிரவேசித்து, அக்குடத்தை மற்றவெண்குடமுதலியவற்றினின்றும் வேறுபிரித்தறிவிப்பதாயிருப்பது போல.

உ. உபாதி :–தனது ஆசிரயத்தின் சொரூபத்தில் பிரவேசியாது, அவ்வாசிரயத்தினைப் பிறபதார்த்தங்களினின்றும்வேறுபிரிவித்தறிவிப்பது.

(உ-ம்)கடம் தனது ஆசிரயமாகிய கடாகாயத்தின் சொரூபத்திற் பிரவேசியாது, அக்கடாகாயத்தினை மற்ற மடாகாய முதலியவற்றினின்றும் வேறுபிரித்தறிவிப்பதா யிருப்பதுபோல.

௩. உபலக்ஷணம் :-யாதானும் ஓர்காலத்தில் ஓர்தேசத்தி லிருப்பதாய்த் தனது ஆசிரயத்தைப் பிறவற்றினின்றும் வேறுபிரித்தறிவிப்பது.

(உ-ம்)காகம் யாதேனும் ஓர்காலத்து ஓர்தேசத் திருப்பதாய்த் தனது ஆசிரயமான தேவதத்தனது வீட்டை மற்றைய வீடுகளினின்றும் வேறுபிரித்தறிவிப்பதா யிருப்பதுபோல.

௪. உபரஞ்சகம்:-இயல்பாய்ப் பெறப்பட்டதர்மமாய்த் தனது ஆசிரயத்தை வேறுபிரிவித்தறிவிப்பது.

(உ-ம்) நிரவயவத்தன்மை, விபுத்தன்மை, சேதிக்கப்படாமைமுதலியன இயல்பாய்ப்பெறப்பட்ட தர்மமாய்த் தம் ஆசிரயமாகிய ஆகாயத்தை வேறுபிரித்தறிவிப்பதுபோல.

அவச்சேத்தியம் ௪ :-வேறுபிரித்தறிவித்தலாகிய அவச்சேத முடையதனை †அவச்சேத்தியம், ‡அவச்சின்னம், வியாவிருத்தம், வியாவர்த்தியம், வியாதர்த்தநீயம் என்பர்.

---

†அவச்சேத்தியம் = } வேறுபிரித்தறிவிக்கத் தக்கது.
வியாவர்த்தியம் = }
வியாவர்த்தனீயம் = }

‡அவச்சின்னம்=வியாவிருத்தம்= வேறுபிரித்தறிவிக்கப்பட்டது.

க. விசிஷ்டம் :—விசேஷணமுடையது.

உ. உபகிதம் :—உபாதியுடையது.

ங. உபலக்ஷிதம் :—உபலக்ஷணமுடையது.

ச. உபரஞ்சிதம் :—உபரஞ்சகமுடையது.

*உஅ. அவஸ்தை ச :—

க. ஜாக்கிரம். உ. சொப்பனம். ங. சுழுத்தி. ச. துரியம்.

*உகூ. அவஸ்தாஸ்தானம் ச :—

க. ஜாக்கிரஸ்தானம் நேத்திரம். உ. சொப்பனஸ்தானம் கண்டம் ங. சுழுத்திஸ்தானம் இருதயம். ச. துரியஸ்தானம் உச்சி.

ஆசிரமம் ச :—

க. பிரஹ்மசரியம் :—கர்ப்பாதானம் ஜாதகர்மமுதலிய ஸம்ஸ்காரங்களோடுகூடிய எட்டு அல்லது பத்துவருஷ ஆயுளான காலத்தில் மூன்று

---

*உஅ. *உகூ. பிரஹ்மோபநிஷத்து, சாரீரகோபநிஷத்து, பரப்பிரஹ்மோபநிஷத்து.

வருணத்தாராலும் சாவித்திரியோடு கூடிய யஞ்ஞோபவீதசம்ஸ்கார மானபின் வித்தைகற்கும் பொருட்டுக்குருகுலவாசம் செய்தல் பிரஹ்மசரிய ஆசிரமமாம்.

ஸ்த்ரீசம்பாஷணை முதலிய எட்டு அங்கங்களின் அபாவவடிவமும், குருசுசுரூஷை முதலியனவும் பிரஹ்மசாரியின் அசாதாரணதருமங்களாம்.

அந்தப் பிரஹ்மசர்யம் (௧) நைஷ்டிகம், (௨) உபகுர்வாண மென்று இரண்டு வகைப்படும்.

(௧) குருவிடம் வித்தைகற்றபின் மரணபரியந்தம் விஷயப்பற்றின்றி வைராக்கியமுடையவனுயிருத்தல் நைஷ்டிகபிரஹ்மசரியமாம்.

(௨) வைராக்கிய மில்லாவிடின் வித்தைகற்றதற்குக் குருதக்ஷிணை கொடுத்துத் தனது தர்மங்களில் நிலைத்தல் உபகுர்வாணபிரஹ்மசரியமாம்.

௨. கிருகஸ்தம் :—குருகுலவாசம் செய்வதில் வைராக்கியாதிகள் உண்டாகாமலும், ராகாதி(பஞ்சக்கிலேசாதி)களால் தகிக்கப்படாமலு மிருந்தால், குருதக்ஷிணை கொடுத்தபிறகு, புத்ரோத்பத்தியின் பொருட்டுத் தன்குலத்துள்ள ஸ்த்ரீயை வரித்தல் கிருஹஸ்தாச்சிரமமாம்.

அவ்வாச்சிரமத்தில் தனக்குப் பரம்பரையாகக் கிடைத்த விருத்தியை(தொழிலை)க்கொண்டுத் தருமமாகத் தநாதிகளைச் சம்பாதித்து, அதில் நான்கு பங்கைக்கொண்டு பகவத்காரியங்களையும் மற்றவைகளால் தன்குடும்பாதிகளையும் இரக்ஷித்தல் **கிருகஸ்தனது அசாதாரண தருமங்களாம்.**

பகவத்பக்தி, சாதுசேவை, வேதாந்தசிரவணாதிகள் **கிருஹஸ்தனது சாதாரணதருமங்களாம்.**

௩. **வானப்பிரஸ்தம்:**—தான் வரித்தஸ்த்ரீயினிடத்துப் புத்திரோத்பத்தியான பின்னும் விஷயாதிகளில் வைராக்கிய முண்டாகாவிடின், சரீர இந்திரியாதிகளை வாட்டுதற்கு அரண்யம்(காடு) அல்லது மலையின்குகை முதலானவற்றில் வசித்தல் **வானப்பிரஸ்தாச்சிரமமாம்.**

கிருஷ்ட(உழுதுபயிரிட்ட)அல்லது சமைத்த அந்நங்களாலும், கந்தமூலபலங்களாலும், பரமேசுவரனைப் பூசித்துச் சரீரயாத்திரையின்(தேகநிலைத்தற்)பொருட்டு அதனைப்புசித்துக் கிரீஷ்ம முதலான ஆறு ருதுக்களின் குணங்களைத் தன் சிரசாலேற்றுச் சகித்தல் **வானப்பிரஸ்தனது அசாதாரண தருமங்களாம்.**

௪. சந்நியாசி:-அதன்பின் விஷயாதிகளில் வைராக்கியத்தோடு சாஸ்திரவிசாரத்தினுல் சகலவிகிதகருமங்களையும் விட்டு, ஞானமடையும்பொருட்டுத் தண்டதாரணுதி பிரேஷமந்த்ர உச்சாரணத்தோடுகூடிய சன்னியாசத்தையடைதல் சன்னியாச ஆசிரமமாம்.

அதனையே யதியாச்சிரமமென்றும், கிரமசன்னியாசமென்றும் சொல்லுவர்.

என்று வைராக்கியமுண்டானதோ, அன்றே அங்கிகரிக்கப்படும் சமதமாதி தர்ம அநுஷ்டானங்களும், ஓங்கார உபாசனையும், குருமுகமாகச் செய்யும் வேதாந்தசிரவணுதிகளும் சர்வபூதங்களிடத் திரக்கமும், ஸ்த்ரீதநாதிகளின் நீக்கமுமாகிய இவ்வெல்லாம் பரமஹம்சசந்நியாசியின் அசாதாரணதருமங்களாம்.

நான்குவருணத்தாருக்கும் நான்கு ஆச்சிரமங்களின் சாதாரண அசாதாரண பேதமுடைய அநேகதருமங்கள் சுருதிஸ்மிருதிகளிற் கூறியுள்ளன. அவற்றுட் சில உபயோகமாகும் தருமங்கள் திசைமாத்திரத்தைக் காட்டுவதுபோல இங்குக் கூறப்பட்டிருக்கின்றன.

ஆர்த்தன்முதலிய பக்தர் ச :-

க. ஆர்த்தன் :-அத்தியாத்மமுதலிய துக்கங்களால் வியாகூலமுள்ளவன்.

உ. ஜிஞ்ஞாசு:-பகவானது உண்மையை அறியுமிச்சை யுடையவன்.

ரு. அர்த்தார்த்தி :-இகலோகபரலோக போகங்களில் இச்சையுடையவன்.

ச. ஞானி :-ஜீவன்முக்தனாகிய வித்துவான்.

உற்பத்திமுதலிய கிரியைகள் ச :-இங்கேகிரியை என்னும் சப்தத்தால் கிரியையாகிய கர்மத்தின் பலம் சொல்லப்படுகின்றது.

க. உற்பத்தி :-முதற்கணம்(ஜன்மம்). குலாலனது கிரியைக்குப் பயனாகிய குடத்தின் உற்பத்திபோல.

உ. பிராப்தி :-நடத்த லென்னும் கிரியையின் (இச்சித்த இடத்தை அடைதலாகிய) பலம்.

ரு. விகாரம் :-அந்நியவுருவத்தை யடைதல். சமையற்கிரியை(தொழிலு)க்குப் பயனாகிய அந்நத்தின் விகாரம்(திரிபு)போல.

௨. சம்ஸ்காரம் :-(க)மலத்தின் நிவிருத்தி, (உ) குணத்தின் பிராப்தி என்னும் பேதத்தால் சம்ஸ்காரம் இரண்டுவகையாம்.

(க) வஸ்திரத்தைக் கழுவுதலாகிய கிரியைக்குப் பயனுகிய மலநிவிருத்திபோலும்.

(உ) குசும்பாவில் வஸ்திரத்தை நனைத்தலாகிய கிரியைக்குப் பயனுகிய இரத்தகுணத்தின் உற்பத்திபோலும்.

சத்தப்பிரவிருத்தியின் நிமித்தம் ௪ :-

க. ஜாதி :-பிராஹ்மணன், அசுவம், பசு என்பன ஜாதிசப்தங்கள். அவை பிராஹ்மணர் முதலான வியக்திகளிலுள்ள பிராஹ்மணத்துவாதி ஜாதிகளைக் கொண்டு, சுரோதாவினிடத்துச் சக்தியை அங்கீகரித்தல்வாயிலாகத் தமது அர்த்தத்தைப் போதிப்பனவாய், ஜாதிவிசிஷ்ட வியக்தியின் ஸ்மரணையை உண்டாக்குகின்றன.

உ. குணம் :-வெண்மை, செம்மைமுதலிய குணசப்தங்கள். அவையும் தமது ஆசிரயமான திரவியத்துள்ள வெண்மை செம்மைமுதலான

குணங்களைக் கொண்டுச் சுரோதாவிற்கு விசிஷ்டமாகிய தமது அர்த்தத்தை யறிவிப்பனவாகின்றன.

ங. கிரியை :—சமைப்போன், பாடகன் என்பன கிரியாசப்தங்கள். அவையும் சமைத்தல்படித்தல் வடிவக்கிரியைகளை, நிமித்தமாகக்கொண்டு கிரியையுடையவனைச் சுரோதாவிற் கறிவிப்பனவாகின்றன.

ச. சம்பந்தம் :—தனிகன், கோபாலன், புத்திமான் என்பன சம்பந்தசப்தங்கள். அவையும் தனுதிவிசேஷணங்களின் பிரவிருத்திநிமித்தங்களால் சுரோதாவினிடத்துத் தமது அர்த்தத்தை யறிவிப்பன வாகின்றன.

சந்நியாசம் ச :—

*க. குடீசகம், உ. பகூதகம். ங. ஹம்ஸம். ச. பரமஹம்ஸம்.

சமாதிவிக்கினம் ச:—

க. இலயம். உ. விக்ஷேபம். ங. கஷாயம். ச. இரஸாஸ்வாதம்.

---

*கூ. பிக்ஷுகோபநிஷத்து, சாட்யாயனோபநிஷத்துமுதலியன.

இதன் விரிவை, விசாரசாகரம் ஏழாவது தரங்கம் ௪௬௬. ௪௭௨. வரையிலுள்ள பிரசங்கங்களிற்காண்க.

சித்தநிரோத(சித்தத்தைஜயிக்கும்)யுக்தி ௪:-

௧. அத்தியாத்மவித்தை :-ஸ்ரீகுருபிரசாதத்தாற் கிட்டிய தத்துவம்பதார்த்தவிசாரத்தினு லுண்டாகும் பிரஹ்மாத்மஐக்கியவிஷயமாகிய ஞானத்தின் பிராப்தி அத்தியாத்மவித்தையாம்.

அல்லது சுரோத்திரியரும் பிரஹ்மநிஷ்டருமாகிய குருமுகமாக வேதாந்தசாஸ்திரங்களை விதியோடு கிரகித்தல், அத்தியாத்மவித்தையாம்.

௨. சாதுசங்கம்:-ஜிஞ்ஞாசுவினிதத்தைக் கோருகிறவரும் ஹிதோபதேசத்தினுல் சம்சயங்களைச் சேதிப்பவரும், இகலோகபரலோகப் பிரயோஜனங்களை விரும்பாதவருமாகிய சாதுவிற்குச் சிரத்தையோடு செய்யும் சுசுரூஷைமுதலியன சாதுசங்கமாம்.

௩. வாசனுத்தியாகம் :-அசுரசம்பத்துவடிவ நாநாவித மலினவாசனைகளை, அவைகளின் விரோதமான தைவசம்பத்துவடிவ சுத்தவாசனைகளைக் கொண்டு விடுதல் வாசனுத்தியாகமாம்.

ச. பிராணாயாமம்:–ரேசகபூரகமுதலான அப்பியாசக்கிரமங்களா லுண்டாகும் சுபாவமான பிராணகதியின் நிரோதவடிவம் பிராணாயாமமாம்.

சித்தஜயத்திற்குக் காரணமாகிய இந்நான்கில் முதல் மூன்றும் மிருதுல(இலேசான)மார்க்கங்களாம். இவைகளால் சித்தநிரோதமாகாதகாலத்து(க்லிஷ்டமுள்ள)கடினமார்க்கமான பிராணநிரோதவடிவ யுக்தியைக்கொண்டு சித்தஜயம் செய்வது அவசியமாம்.

*ருக. சிரவணாதி ச:—

*ருஉ. க. சிரவணம். உ. மனனம். ரு. நிதித்தியாசனம். ச. சமாதி.

தர்மமுதலியன ச:–நான்கு புருஷார்த்தம்.

க. தர்மம்:–சகாம அல்லது நிஷ்காம புண்ணியம்.

---

*ருக. அத்தியாத்மோபநிஷத்து.

* ருஉ. விசாரசாகரம் கஅ-வது பிரசங்கத்திற் காண்க.

௨. அர்த்தம் :-இந்தவுலகத்திலும் பரலோகத்திலுமுள்ள போகத்திற்குச் சாதனங்களாகிய திரவியமுதலியன.

௩. காமம்:-இகலோகபரலோகங்களின் போகம்.

௪. மோக்ஷம் :-அநர்த்தநிவிருத்தி ஆநந்தப்பிராப்தி.

பரிசம் ௪ :—

௧. சீதம் :-துவக்கிந்திரியத்தோடு குளிர்ந்த ஜலாதித்திரவியங்களின் சையோகமானபோது, “இது சீதளமாயிருக்கின்றது” என்னும் துவக்கிந்திரிய ஜந்யஞானத்திற்கு விஷயமாவது சீதபரிசமாம்.

௨. உஷ்ணம் :-அக்கினிமுதலான உஷ்ணத்திரவியங்களின் சையோகமானபோது, “இது சுடுகின்றது” என்னும் ஞானத்திற்கு விஷயமாவது உஷ்ணபரிசமாம்.

௩. மிருது :-மயிலிறகு, புஷ்பம், மிருதுவான வஸ்திரம் பஞ்சுமுதலிய திரவியங்களின் சையோகமானபோது, “இது மிருதுவாகவிருக்கின்றது” என்னும் ஞானத்திற்கு விஷயமாவது மிருதுபரிசமாம்.

௪. கடினம்:—கட்டை ஆயுதம் கல்முதலான திரவியாதிகளின் சையோகமானபோது, "இது கடினமாக விருக்கின்றது" என்னும் ஞானத்திற்கு விஷயமாவது கடினபரிசமாம்.

*௫௫. பிரஹ்மவித்துமுதலியோர் ௪ :—

௧. பிரஹ்மவித்து:—நான்காவது பூமியிலுள்ள ஞானி. மஹாவாக்கியவிசாரத்தாலுண்டாகிய ஞானத்தினுல் ஆவரண அத்தியாசங்களின் நிவிருத்தியாகப் பூரணுநந்தப் பிரஹ்மத்தை பிரத்தியக் ஞானவடிவததால் ஸாக்ஷாத்தாக அறிகிறவன் பிரஹ்மவித் தெனப்படுவன். அவனே சத்துவாபத்தி யென்னும் பெயருடைய நான்காம் பூமியிலுள்ளவன். அவனே சுரோத்திரியபிரஹ்மநிஷ்டகுரு. அவனே உபதேசவாயிலாக வேதாந்த சம்பிரதாயங்களில் பிரவர்த்திக்கச் செய்கிறவன். அவனுக்கு இந்த ஜாக்கிரப்பிரபஞ்சம் சொப்பனம போலத்தோற்றுகிறது. எப்படிச் சொப்பனங்கண் டெழுந்தவன் சொப்பனப் பிரபஞ்சத்தை ஸ்மரித்தானுயினும், அதை மித்தையாக மதிக்கின்ருனே, அப்படியே இவனும்

---

*௫௫. வராகோபநிஷத்து ௪-வது அத்யாயம், பாலபோதம் ௫௨-வது பிரசங்கம்.

பிராரப்தபயனைப் புசிக்கும் காலத்தில் ஜாக்கிர ஜகத்தைக் கண்டபோதிலும் அதை மித்தையாக வே மதிக்கின்றான்.

௨. பிரஹ்மவித்துவரன் :—ஐந்தாம் பூமியிலுள்ள ஞானி. எவனுக்குப் பிரஹ்மஞானத்தின் பின் புத்திரன் வித்தமுதலான வாசனைகளும், தேக லோக சாஸ்திரவாசனைகளும் நீங்கும்பொருட்டுச் சின்மாத்திரவாசனை மைத்திரிமுதலான விரோதிவாசனை என்பவற்றின் திடதர அப்பியாசமுமுண்டாகி, ஜீவன்முக்தியின்பொருட்டு வாசனை நசித்திருக்கின்றதோ, அவனுக்கே முற்கூறிய பிரஹ்மவித்தினும் வரனுந்தன்மை யுண்டாகின்றது. அவனே அசம்சக்தி யென்னும் பெயரிய ஐந்தாவது யோகபூமியி லிருப்பவன். அவனே பிரஹ்மவித்வர னெனப்படுகின்றான். அவனுக்கிந்த ஜாக்கிரப்பிரபஞ்சம் சுழுத்திபோன் றிருக்கின்றது. சுழுத்தியி லிருப்பவனுக்கு ஸர்வவிருத்திகளும் நித்திரையில் ஒடுங்கியிருப்பதுபோல, இவனுக்கும் ஜாக்கிராவஸ்தையில் இந்திரியாதிக ளிருப்பனவாகக் காணப்படினும், அவைகளால் விஷயங்கள் கிரகிக்கப்படாமையால், சுழுத்தனவன். அவனுக்குப் பெரும்பாலும் அடங்கியவிருத்திகள்நிர்விகற்பமாகவேயிருக்கின்றன.

ஜடபரதாதிகளைப்போல ஒருகால் உபதேசத்தின் பொருட்டும் அல்லது சரீர யாத்திரையின் பொருட்டும் விருத்திகள் எழவும செய்யும்.

௬. பிரஹ்மவித்வரியான் :—ஆறும் பூமியிலுள்ள ஞானி. எவன் பிரஹ்மஞானத்தின் பின் வாசனுக்ஷயமனோநாசாதிகளால் பூர்ணனுயிருக்கின்றானே, அவன் பதார்த்தாபாவினிவடிவ ஆறுவது பூமியி லிருப்பவன். அவனே முற்கூறிய வரனினும் வர(மேலானவ)னாக இருத்தலால் பிரஹ்மவித்வரியா னெனப்படுகின்றான். காடசுழுத்தியுடையவன் நித்திரை யினின்றும் தானே விழியாது பிறர் எழுப்ப விழிப்பதுபோல, இவனும் சதாநிர்விகற்பப்பிரஹ்மத்தில் லயமா யிருத்தலால், அவதூதாதிகளைப்போல தானே உத்தானதசையை அடைகிறதில்லை; ஒருகால் பிறரால் விழிக்கவும் கூடும்.

௭. பிரஹ்மவித்வரிஷ்டன்:—எழாம் பூமியிலுள்ள ஞானி. எந்தப் பிரஹ்மவேத்தாவினுடைய மனமும் வாசனையும் அத்தியந்தம் நாசமா யிருக்கின்றதோ, அவன் அந்த அகண்ட பிரஹ்மத்தோடு தன்மயனு யிருத்தலால், ஒருபோதும் பிறராலும் விழிப்படைகிறதில்லை. ஜலநிரப்பிய கடத்தைத்தடாகத்தில் வைத்தகாலத்தில் அந்தக் கட

த்தின் உள்ளிலும் வெளியிலும் ஜலம் நிறைந்திருப்பது போல, இவன் சஸ்திரகாத (ஆயுதவெட்டு) முதலான பெருந்துன்பங்களைச் செய்யினும், ஏழாவதாகிய துரியமென்னும் பெயருடைய யோகபூமியி லிருத்தலால் ரிஷபர்முதலியோரைப்போல சொரூபத்தினின்றும் சலிக்கிறதில்லை. இவனே பிரஹ்மவித்வரிஷ்டன்.

பிரமாணம் ௪:—பிரமாஞானத்திற்குக் கரணம் பிரமாணம். இங்கே நான்கு பிரமாணங்களைக் கூறுதல் நியாயசாஸ்திரத்தினபடியாம்.

க. பிரத்தியக்ஷம். உ. அநுமானம். ௩. உவமானம். ௪. சத்தம்.

புருஷார்த்தம் ௪ :—

க. தர்மம் :— சுருதிஸ்மிருதிகளை யநுசரித்த காமியகர்மாநுஷ்டானங்களா லுண்டாகும் அபூர்வ(அதிருஷ்ட)ங்களின் பரியாயம்.

உ. அர்த்தம :—அவை(தர்மங்)களாலுண்டாகின்ற தனுதிபதார்த்தங்களும், சுவர்க்காதி உலகங்களும்.

௩. காமம்:—சகாமபுண்ணியாதிபயனுல் தானிச்சித்தபடி இந்திரியாதிகளால் இச்சித்த விஷயங்களைப் புசித்தல்.

ச. மோக்ஷம் :- கர்த்திருத்வாதி சகலபந்த நிவிருத்திபூர்வகமான சித்தத்தின் பிரஹ்மாகார நிலை.

பூதக்கிராமம்(யோனி) ச:-

க. ஜராயுஜம்:-கருப்பையினின்று தோன்றும் மனிதர் மிருகமுதலியன.

உ. அண்டஜம்:- முட்டையினின்று தோன்றும் பறவை பாம்புமுதலியன.

ந. உற்பிஜ்ஜம்:-வித்து வேர் கிழங்கு கொம்பு கொடி முதலியவற்றினின் றுண்டாகும்விருக்ஷமுதலியன.

ச. சுவேதஜம்:-வேர்வைமுதலியவற்றினின்றுதோன்றும் பேன் மூட்டுப்பூச்சிமுதலியன.

பூஜாபாத்திரம் ச:-

க. பிரஹ்மநிஷ்டர்:-அசம்பாவனை விபரீதபாவனையின்றிய பிரஹ்மசாக்ஷாத்காரமுடையவரும், சர்வகாமநிவிருத்தரும், இந்த ஜகத்தைமித்தையாகக் காண்பவரும் எவரோ, அவர் பிரஹ்மநிஷ்டர்.

உ. முமுக்ஷு:- எவன் விஷயபோகங்களினிச்சையை விட்டு,விவேகவைராக்கியாதி சாதனங்

களோடு மோக்ஷ மொன்றையே விரும்புபவனு யிருக்கின்றானே, சுரோத்திரியரும் பிரஹ்மநிஷ் டருமாகிய குருவை ஈசுவரபுத்தியாகச்சேவை செய்கின்றானே, வேதாந்தசிரவணார்த்தங்களெல் லாம் எவனைத் தஞ்சமாக வடைகின்றனவோ, அவன் முமுக்ஷு.

ங. பக்தன்:- ஆத்மநிவேதனமுள்ள ஹரிதா ஸன்.

ச. சுவதர்மநிஷ்டன் (தன்வர்ணுசிரமதர்மத்தி ல் நிற்பவன்).

*ஙச. மைத்திரிமுதலியன ச:-

†க. மைத்திரி:-பணமுள்ளவனிடத்திலாவது, குணத்தினுற் சமானமானவனிடத்திலாவது, ஈசு வரபக்தனிடத்திலாவது, விஷயி கர்மி உபாசகர்க

---

*ஙச வராகோபநிஷத்து.

† நன்குறுவார் தம்பா னட்பை
நாடன்மைத் திரியா மிக்கத்
துன்புறுவார் தம்பா லன்னார்
துயர்க்கிரங்கல் கருணை யாகு
மின்புறுவார் தம்மை நோக்கி
யின்புறுதன் முதிதை பாவ
வன்கணர்பால் வேட்கை கோப
மருவிடாமை யுபேக்ஷை யாகும். (சு)

ளிடத்திலாவது "இவர்கள் என்னுடையவர்கள்" என்றுண்டாகும் புத்தி.

௨. கருணை:- துக்கமுடையவன், குணத்தினல் தாழ்ந்தோன், அஞ்ஞானி, ஜிஞ்ஞாசு என்னுமிவர்களிடத்திலுள்ள இரக்கம்.

௩. முதிதை:- புண்ணியவான், குணத்தினல் மேற்பட்டவன், ஈசுவரன், முக்தன் என்னுமிவர்களிடத்திலுள்ள பிரியம்.

௪. உபேக்ஷை:- பாவி, அவகுணன், துவேஷி, பாமரன் என்னுமிவர்களிடத்திலுள்ளஇராகத்துவேஷமில்லாமையாகியஉதாசீனத்தன்மை.

*௬௫. மோக்ஷத்துவாரபாலகர் ௪:-

---

மைத்திரியே முதலா நான்கு
மருவிடுதல் லுள்ளத் தென்றுந்
தோததுறமற் சரமே யிஞ்சை
துயர்தருதீப் பொருமை யாதி
பித்துறுதூர்க் குணங்க ணீங்கப்
பெரியபொரு ளிலகா திற்கு
முத்தரிட மியற்கை யாக
முந்துறுமே யிந்த நான்கும். (௨)

---

*௬௫. மகோபநிஷத்து ௪-வது அத்யாயம்.

௧. சமம். ௨. சந்தோஷம். ௩. விசாரம்(விவேகம்). ௪. சாதுசங்கம்.

யோகபூமி ௪:-

௧. வாக்குலயம். ௨. மனோலயம். ௩. புத்திலயம். ௪. அகங்காரலயம்.

வருணம் ௪:-

௧. பிராஹ்மணன். ௨. க்ஷத்திரியன். ௩. வைசியன். ௪. சூத்திரன்.

வர்த்தமான ஞானப்பிரதிபந்தம் ௪:-

௧. விஷயாசக்தி:-அநேக அநர்த்தங்களுக்குக் காரணமான ஸ்த்ரீபுத்திராதிவிஷயங்களில் பிராந்தியினால் இது என்னுடையதென்னும் மமதை புத்தியோடு அங்கீகரித்தவைகளில் முன் ஸம்ஸ்காரத்தினாலுண்டாகும் திடப்பிரீதி அதாவது அவைகளின் வியோகத்தையும் தியாகத்தையும் சகியாமை அல்லது விசாரகாலத்தில் அவைகளையடிக்கடி சிந்தித்தல் விஷயாசக்தியாம்.

௨. புத்திமந்தத்தன்மை:-சுரோத்திரியரும் பிரஹ்மநிஷ்டருமாகிய குருவினால் யுக்திப்பிரமாணதிருஷ்டாந்தங்களோடு அறிவிக்கப்படும் பிரஹ்மாத்மஐக்கியவடிவ அர்த்தங்களை நிச்சயபுத்

தியாகக் கிரகியாதிருத்தல், அல்லது விஷயாசக் தியினுல் தூலத்தன்மையடைந்த சித்தத்திற்குச் சூக்ஷ்மப்பிரஹ்மவஸ்துவைக் கிரகிக்கும் சாமர் த்தியமின்மை பிரஞ்ஞாமாந்தியமாம்.

௩. குதர்க்கம் :—ஷட்விதலிங்கங்களா லறிவிக் கப்பட்ட அத்விதீயவேதாந்தார்த்தங்களை யநாத் மசாத்திரத்துள்ள மூலமின்றிய விரோததர்க்கங் களால் விபரீதமாகக் கொள்ளுதல் குதர்க்கமாம்.

௪. விபரீததுராக்கிரகம் :—நான் சுருதியுணர்ந் தவன், பண்டிதன், பூபாலன், விரக்தனென்று தேகேந்திரியாதி அநாத்மாக்களில் ஆத்மபுத்தி யைச் செய்தல். அல்லது, பிராந்தியினுல் ஆத்மா விலாரோபித்த வருண ஆசிரமகர்த்திருத்வ போ க்திருத்வ அபிமானுதிகளை அசங்க அத்விதீய ஆத்மசிரவணுதிகளைச் செய்தபிறகும் விடாதிரு த்தல் துராக்கிரகமாம்.

(இந்நான்கில் ஒன்றிருப்பினும் யதார்த்தஞா ன முண்டாகாதெனின், யாவு முடையோனுக் குண்டாகா தென்பதில் என்ன சொல்லவேண்டி யிருக்கிறது).

வர்த்தமானஞானப்பிரதிபந்தநிவிருத்தியின் ஏது ச:—

க. சமமுதலியன:—இது விஷயாசக்தியை நிவர்த்திப்பது.

உ. சிரவணம் :—இது புத்தியின் மந்தத்தன்மையை நிவர்த்திப்பது.

ந. மனனம்:—இது குதர்க்கத்தை நிவர்த்திப்பது.

ச. நிதித்தியாசனம்:—இது விபரியயத்தி(விபரீதபாவனையி)லுண்டாகும் துராக்கிரக அகந்தையை நிவர்த்திப்பது.

விவேகமுதலியன ச:—

* ௩௬. க. விவேகம். உ. வைராக்கியம். ந. ஷட்சம்பத்தி. ச. முமுக்ஷுத்துவம்.

வேதம் ச:—

க. இருக்கு. உ. யஜுசு. ந. சாமம். ச. அதர்வணம்.

---

* ௩௬. விசாரசாகரம் பிரசங்கம் எ-முதல் கச-வரையில் பார்க்க.

## ஐவகைப்பதார்த்தங்கள்.



*கஎ. அக்னி ரு:-க. சுவர்க்கம், உ. இந்திரன், ௩. பிருதிவி, ச. புருஷன், ரு. ஸ்த்ரீ.

அஞ்ஞானத்தின் பேதம் ரு:-அஞ்ஞானத்தில் வேதாந்தாசாரியர்களின் மதபேதம்.

க. மாயையவித்தைவடிவம்:-சிலர்(வித்தியாரண்ணியசுவாமிகள்)அஞ்ஞானத்தை மாயை(சமஷ்டி அஞ்ஞானமய ஈசுவரவுபாதி) அவித்தை (வியஷ்டி அஞ்ஞானமய ஜீவவுபாதி)வடிவமாக ஒப்பியிருக்கின்றனர்.

உ. ஞானக்கிரியாசக்திவடிவம் :- சிலர் அஞ்ஞானத்தை ஞானசக்திக் கிரியாசக்தியாகக் கொள்ளுகின்றார்கள்.

௩. விக்ஷேப ஆவரணவடிவம் :-சிலர் அஞ்ஞானத்தை ஆவரணவடிவ மென்றும், விக்ஷேப(த்திற்கு ஏதுவாகியசக்தி)வடிவ மென்றும் கொள்ளுகின்றனர்.

---

*கஎ. சாமவேதசாந்தோக்கிய உபநிஷத்தின் ஐந்தாவது அத்யாயத்துள்ள பஞ்சாக்கினிவித்தையிலும் ஸ்ரீபஞ்சதசி தியானதீபம், கக-வது சுலோகவுரையிலும் அதன் டிப்பணத்திலும் காண்க.

௪. சமஷ்டிவியஷ்டிவடிவம்:-சிலர் அஞ்ஞானத்தைச் சமஷ்டி (ஈசுவரவுபாதி) வியஷ்டி (ஜீவவுபாதி) வடிவமென்று கொள்ளுகின்றனர்.

௫. காரணவடிவம்:-சிலர் அஞ்ஞானத்தை ஜகத்திற்கு உபாதானகாரணமாகிய மூலப்பிரகிருதிமய ஈசுவரவுபாதிவடிவமாகக் கொள்ளுகின்றனர். அந்தப்பக்ஷத்தில் ஜீவன் காரிய (அந்தக்கரண) வுபாதி வுடையவனாகக் கொள்ளப்பட்டிருக்கின்றனன்.

அபாவம் ௫:-இல்லையென்னும் தோற்றத்திற்கு விஷயம்.

௧. பிராகபாவம்:-காரியத்தின் உற்பத்திக்கு முன்னுள்ள காரியத்தின் அபாவம் (முன்னின்மை).

௨. பிரத்துவம்சாபாவம்:-நாசத்திற்குப்பின் உண்டாகும் அபாவம் (அழிவுபாட்டின்மை).

௩. அந்நியோந்நியாபாவம்:-ஒன்றிலொன்றின்மை. அது உருவபேதம்போலும், கடபடங்களின் பேதம்போலுமாம்.

௪. அத்தியந்தாபாவம்:-மூன்றுகாலத்திலுமில்லாமை (முழுதுமின்மை). அது வாயுவில் உருவமில்லாமைபோலும்.

௫. சாமயிகாபாவம்:-ஓர் (எடுத்துக்கொள்ளும்)சமயத்தில். பூமிமுதலியவற்றில் உண்டாகும் குடத்தின் அபாவம்.

*௩௮. அவஸ்தை ௫:-

௧. ஜாக்கிரம். ௨. சொப்பனம். ௩. சுழுத்தி ௪. துரியம். ௫. துரியாதீதம்.

இயமம் ௫:-

௧. அஹிம்சை (கொல்லாமை). ௨. சத்தியம் (வாய்மை). ௩. பிரஹ்மசரியம் (எண்வகை மைதுனமின்மை). ௪. அபரிக்கிரகம்—நிருவாகத்திற்கு அதிகமாகத் தனத்தைக் கொள்ளாதிருத்தல். ௫. அஸ்தேயம்—கள்ளாமை (திருடாதிருத்தல்).

*௩௯. உபவாயு ௫:—

௧. நாகன்:-வாந்திக்கேதுவாகிய வாயு. இருதயம் ஸ்தானம்.

௨. கூர்மன் :-கண்ணிமைத்தற்கேதுவாகிய வாயு. ஆசனம் ஸ்தானம்.

---

*௩௮. மண்டலப்பிராஹ்மணோபநிஷத்து.

*௩௯. பிரஹ்மவித்தியோபநிஷத்து, பைங்கலோபநிஷத்து, தியானபிந்தூபநிஷத்து.

௩. கிரிகரன்:—தும்மலுக் கேதுவாகிய வாயு. நாபி ஸ்தானம்.

௪. தேவதத்தன்:—கொட்டாவி விடுவதற் கேதுவாகிய வாயு. கண்டம் ஸ்தானம்.

௫. தனஞ்சயன்:—வீங்குதற் கேதுவாகிய வாயு. சர்வாங்கம் ஸ்தானம்.

ஏதுப்போலி ௫ :—(ஹேத்வாபாசம்) ஏதுவின் இலக்கண(சாத்தியத்தின் சாதகத்துவ)மில்லாததாய், ஏதுவைப்போலத்தோற்றும் துஷ்ட ஏது, அல்லது ஏதுவின் ஆபாசம் (தோஷம்) ஏதுப் போலியாம்.

௧. சவ்வியபிசாரம்:-துணிபொருளாகிய சாத்தியத்தின் (அக்கினியின்) ஆசிரய (பர்வத) த்திலும், அதன் அபாவத்தின் ஆசிரயத்தி(மடுவி)லும் இருக்கும் ஏது, சவ்வியபிசாரமாம். அது 'பர்வதம் அக்கினியுடையது ; பிரமேயமா(அளவையால் அளக்கத்தக்கதா)கலின்' என்பதாம், இதனையே அநைகாந்திக(பிறழ்ச்சியுடைய)ஏது வென்றும் கூறுவர்.

௨. விருத்தம் :—சாத்தியமல்லாவிடத்து வியாபித்திருக்கும் ஏது, விருத்தமா(மாறுகொள்வதா)ம். அது 'சத்தம் நித்தியம்; கிரியாஜந்யமா யிரு

த்தலால்' என்னும் ஏது, சாத்திய(நித்திய)மல்லா அநித்தியத்தில் வியாபித்திருக்கின்றது; ஏனெனின், எது கிரியாஜந்நியமோ, அது அநித்தியமாம், கடம்போல என்னும் நியம மிருத்தலால் என வரும்.

ங. சற்பிரதிபக்கம்:-சாத்தியத்தின் அபாவத்தைச் சாதிக்கும் அன்னிய ஏது எதற்கிருக்கின்றதோ, அது சற்பிரதிபக்கமா(மறுதலையுடையதா)ம். அது 'சத்தம் நித்தியமாம்; செவிக்கு விஷயமாதலால்' என்னும் ஏதுவினது சாத்திய (நித்தியத்துவ)த்தின் அபாவத்தைச் சாதிக்கும், 'சத்தம் அநித்தியமாம்; காரியமாகையால், கடத்தைப்போல' என்னும் ஏதுப்போல. யாது காரியமோ, அது அநித்தியமேயாம்.

ச. அசித்தம்:-ஏதுவின் சொரூபம் பக்ஷத்திற் பெறப்படாமை அசித்தம்(பேறில்லது). அது, 'சத்தம் குணமாம்; நேத்திரஜந்நியஞானத்திற்கு விஷயமாதலால்; உருவத்தைப்போல' என்பது. இங்கே கண்ணிற்கு விஷயமாதலாகிய ஏதுவின் சொரூபம் சத்தமாகிய பக்ஷத்தில்லை; ஏனெனின், சத்தம் சிரவணஜந்நியஞானத்திற்கு விஷயமாதலால்.

ரு. பாதிதம்:—எதனது சாத்தியத்தின் அபாவம் வேறொரு பிரமாணத்தால் நிச்சயிக்கப்படுகின்றதோ, அது பாதிதம்(மறுப்புடையது). அது 'அக்கினி சூடில்லாதது ; திரவியமாயிருத்தலால்' என்னும் ஏதுவினது சாத்தியத்தி(உஷ்ணமின்மையி)ன் அபாவம் (சூடு) தொக்கிந்திரியத்தால் கிரகிக்கப்படுகின்றது என்பதுபோல.

*௪௦. கதி ரு:—

க. யஞ்ஞங்களால் தேவர்களை யடைகின்றான்.

உ. தபசினால் விராட்பத மடைகின்றான்.

௩. கர்மசந்நியாசத்தால் பிரஹ்மாவின் பத மடைகின்றான்.

௪. வைராக்கியத்தினால் ப்ரகிருதியில் லய மடைகின்றான்.

ரு. ஞானத்தினால் கைவல்ய மடைகின்றான்.

கர்மம் ரு:—

க. நித்தியம்:-எப்போதும் செய்யவேண்டிய கர்மம்(ஸ்நானசந்திமுதலியன).

---

*௪௦. அக்கினிபுராணம். பக்கம் ௧௦௧௪.

உ. நைமித்திகம்:-ஏதேனுமோர் நிமித்தத்தை முன்னிட்டுச் செய்யவேண்டிய கர்மம்(கிரகணசிராத்தமுதலியன).

௩. காமியம்:-காமத்தின்பொருட்டு விதிக்கப்பட்ட கர்மம்(யாகாதிகள்).

ச. பிராயச்சித்தம்:- பாவநிவிருத்தியின்பொருட்டு விதிக்கப்பட்ட கர்மம்.

ரு. நிஷித்தம் :-செய்யாமலிருக்கும்பொருட்டுச் சொல்லப்பட்ட கர்மம்(பிரஹ்மஹத்திமுதலியன).

*சக. கர்மேந்திரியம் ரு:-

க. வாக்கு. உ. பாணி. ௩. பாதம். ச. உபஸ்தம். ரு. குதம்.

கியாதி ரு :-தோற்றுதலும் சொல்லுதலுமாகிய வியவகாரம்.

க. அசத்கியாதி:-சூந்யவாதிகள் அசத்தாகிய (சொரூபமில்லாத) சர்ப்பத்தின்தோற்றமுஞ்சொல்லுதலும் இரஜ்ஜுதேசத்தில் ஒப்புகின்றார்கள்.

---

*சக. பைங்கலம்,வராகமுதலிய உபநிஷத்துக்கள்.

உ. ஆத்மக்கியாதி :-க்ஷணிகவிஞ்ஞானவாதிக ள் ஒப்பியிருக்கும் க்ஷணிகபுத்தியாகிய ஆத்மாவி ன் சர்ப்பரூபத்தோற்றமும் சொல்லுதலுமாம்.

ங. அந்நியதாக்கியாதி:-நையாயிகர் புற்று முத லிய தூரதேசத்திலுள்ள சர்ப்பத்தின் பிரதீதியும் (தோற்றமும்) சொல்லுதலும் தோஷபலத்தினு லே இரஜ்ஜுதேசத்தில் ஒப்புகிறார்கள். அது அ ந்நியதாக்கியாதியாம். அல்லது இரஜ்ஜுவாகிய ஞேயத்திற்குச் சர்ப்பரூபமாகிய ஞானம் ஒப்பி யிருக்கின்றார்கள்; அது அந்நியதாக்கியாதியாம்.

ச. அக்கியாதி:- சாங்கியப்பிரபாகரமதாநுசா ரிகள், "இது சர்ப்பம்" என்னுமிடத்து, "இது" என்னும் அம்சம் இரச்சுவின் இது வென்னுந் தன்மையின் பி[illegible]தியக்ஷஞானமாம்; "சர்ப்பம்" என்பது முன்கண்ட சர்ப்பத்தின் ஸ்மிருதிஞான மாம்; தோஷபலத்தால் இவ்விரண்டுஞானங்கள து அக்கியாதி அ[illegible]து அவிவேகம்(பேதத்தோ ற்றரவின்மை)உண்டாகின்றதென்று ஒப்புகிறா ர்கள். அது அக்கியாதியாம்.

ரு. அநிர்வசனீயக்கியாதி: வேதாந்தசித்தாந்த த்தில் இரஜ்ஜுவில் அதன[illegible]வித்தையால் அ நிர்வசநீய(சத்தசத்விலக்ஷண)சர்ப்பமும் அதன் ஞானமும் உண்டாகின்ற[illegible]னது கியாதி

என்னும் தோற்றமும் சொல்லுதலுமாகிய வியவகாரம் அநிர்வசனீயக்கியாதியாம்.

கிலேசம் ரு:—

†க. அவித்தை:—(க). துக்கத்தில் சுகபுத்தி. (உ). அநாத்மாவில் ஆத்மபுத்தி.(௩). அநித்தியத்தில் நித்தியபுத்தி.(ச). அசுத்தத்தில் சுத்தபுத்தி என்பனவாம். இது நான்குவிதமாகிய காரிய அவித்தையாம்.

---

†க. துயரினையே யின்ப மென்றுந்
  தோற்றநான்மா வான்மா வென்றும்
பெயருமநித் தியத்தை யென்றும்
  பெயராநித் தியமா மென்று
முயர்விலாதா மசுத்தந் தன்னை
  யுயர்சுத்த மென்றுங் காண
லயருறுநால் வகைய தான
  வவித்தையாமென் றுரைப்பர் மேலோர்.(க)

புத்தியோ டான்மா தன்னைப்
  பொருத்தியொன் றென்று காணல்
பித்துறஸ் மிதையா மிக்கப்
  பெட்பினை மேவு மஃதே
நத்திரா கந்து வேட
  நன்மையில் குரோத மாகுஞ்
செத்திடு வாமென் றஞ்சல்
  செப்பபி நிவேச மாகும். (உ)

உ. அஸ்மிதை:-சாக்ஷிபுத்திகளின் ஐக்கிய(ஆத்மாவும் புத்தியும் ஒன்று என்னும்)ஞானம்(சாமானிய அகங்காரம்).

ங. இராகம்:-திடஆசை(பேராசை).

ச. துவேஷம்:-குரோதம்.

ரு. அபிநிவேசம்:-மரணபயம்.

*௪உ. கோசம் ரு:-

க. அந்நமயம். உ. பிராணமயம். ங. மனோமயம். ச. விஞ்ஞானமயம். ரு. ஆநந்தமயம்.

சப்தமுதலியன ரு:-

க. சத்தம். உ. பரிசம். ங. உருவம். ச. இரசம். ரு. கந்தம்.

ஜீவன்முக்திப்பிரயோஜனம் ரு:-ஜீவன்முக்திஞானிக்குச் சித்தித்திருந்தபோதிலும், இங்கே

---

கிளர்ந்திடு மிவற்றைப் பஞ்சக்
   கிலேசமென் றுரைப்ப ரென்று
முளர்ந்தனி லிவைகண் மேவா
   தொழிந்திட விரும்பு வாரேற்
றுளங்கிடா துளத்தைச் செவ்வே
   சுத்தமாஞ் சிவத்தில் வைத்து
வளம்பெற நிறுத்து வாரேன்
   மருவிடா வோடு மன்றே. (ங)

---

*௪உ. முத்கலம், தைத்திரீயமுதலிய உபநிஷத்துக்கள்.

ஜீவன்முக்தியென்னும் சத்தத்தால் ஜீவன்முக்தியின் விலக்ஷணாநந்தத்தின் அவஸ்தை(ஐந்தாவது முதலிய பூமி)கள் கொள்ளப்படுகின்றன. அதன் பிரயோஜனம் ஐந்துவகையாம்.

†க. ஞானரக்ஷை:—ஒருமுறை உண்டாகிய திடஞானம் நாசமாகாமையால், ஞானரக்ஷைதானே சித்திக்கின்றது. என்றாலும் இங்கே நிரந்தரப்பிரஹ்மாகார விருத்தியின் ஸ்திதி, ஞானரக்ஷை என்னும் சத்தத்திற்கு அர்த்தமாம்.

---

† க. வந்தவப் பிரமா கார
மாகிலா விருத்தி யென்றும்
நந்தறு திலகி நிற்றல்
ஞாநரட் சையென்ன லாகுஞ்
சந்ததம் பிரமா காரஞ்
சார்மநச் சம்ய மாகி
வந்தனை யாதி செய்வார்
மருவற்காந் தவம தாகும். (க)

வாதியின் மதத்தைத் தாழ்த்த
வல்லவப் புலவன் சொல்லிற்
கேதமில் பொருள்வே றுக்கி
யெதிர்த்துரை யாடு செற்பம்
வாதுசெய் வலியின் மூர்க்கன்
வாதமாம் விதண்டை யென்னும்
வாதுக ளிலாமை யாகும்
வல்விசம் வாத மின்மை. (உ)

௨. தவம்:-மன இந்திரியங்களின் ஏகாக்கிரத் தன்மை அல்லது மனோவாக்குக்காயங்களின் சம்யமம் (அடக்கம்).

௩. விசம்வாதமில்லாமை :-ஜல்பம் விதண்டை யென்னும் வாதங்க ளில்லாமை.

௪. துக்கநிவிருத்தி:-திருஷ்ட (பிரத்தியக்ஷ) துக்கத்தின் நிவிருத்தி.

---

துக்கமீ தெனத்தி ருட்டத்
  துயருண ராமை தானே
துக்கநி விருத்தி யென்று
  சொலப்படு மென்று மின்ப
மிக்கிடு பிரமா கார
  விருத்தியே யிருத்த லானே
தக்கவா நந்த வாப்தி
  தானிது வாகு மன்றே. (௩)

இதனையே சீவன் முத்தி
  யின்பமென் றுரைத்தார் முன்னோர்
மிகுசொரு பாநந் தத்தின்
  விலக்ஷண வின்ப மாகுந்
தகுநல சீவன் முத்தி
  தனக்கிவை பயனு மென்று
முதுமறை யுணர்ந்த மேலா
  முநிவர் மொழிகு வாரால். (௪)

ரு. சுகப்பிராப்தி :-நிராவரணமும் பரிபூரண மும் விருத்தியோடுகூடியதுமாகிய ஜீவன் முக்தி விலக்ஷணாநந்தத்தின் பிராப்தி.

*சரு. ஞானேந்திரியம் ரு:-

க. சுரோத்திரம், உ. துவக்கு, ங. சக்ஷு, ச. சிங்குவை, ரு. ஆக்கிராணம்.

திருஷ்டாந்தம் ரு:-ஜகத்தின் மித்தியாத்துவத் தில் திருஷ்டாந்தம் ஐந்துவிதமாம்.

க. சுத்தியிலிரஜதம்.

உ. இரஜ்ஜுவில் சர்ப்பம்.

ங. தாணுவிற்புருடன்.

ச. ஆகாயத்திற்கருமை.

ரு. *சசு. மரீசிகையில் ஜலம்:-மத்தியானகா லத்தில் மருஸ்தலத்தில்(ஊஷரபூமியில்)பிரதிபிம் பித்த சூரியனது கிரணம், மரீசி, மரீசிகா என்று சொல்லப்படும். அதில் தோற்றும்ஜலத்தை மிருக

---

*சரு. வராகம், திரிசிகிபிராஹ்மணம், பைங்கல முதலிய உபநிஷத்துக்கள்.

*சசு. அந்நபூர்ணோபநிஷதம்.

ஜல மென்றும், கானல்ஜல மென்றும், பேய்த்தே ரென்றும் கூறுவர்.

தூலபூதம் ௫:–

க. ஆகாசம், உ. வாயுவு, ௩. அக்கினி, ச. அப்பு, ௫. பிருதிவி.

தேகத்தின்தோஷம் ௫:–

க. காமம், உ. குரோதம், ௩. நிசுவாசம், ச. பயம், ௫. நித்திரை.

தேகதோஷநிவிருத்தி உபாயம் ௫:–

க. சங்கற்பமின்மை, உ. க்ஷமை, ௩. இலகுவான ஆகாரம், ச. அப்பிரகாதத்துவம்(அடிபடாமை), ௫. தத்துவசேவனம். (மண்டலப்பிராஹ்மணோபநிடத்து.)

நியமம் ௫:–

க. சௌசம்(தூய்மை). (க)பாகியம், (உ.) ஆந்தரமென் றிரண்டு வகையாம்:–

(க) அசுசியும் மலினமுமான திரவியாதிகளின் சேர்க்கையா லுண்டாகும் அசுத்தி யெவையோ, அவற்றை ஜலம் மண்முதலியவைகளாலும் ஆசமனஸ்நாநாதிகளாலும் நீக்குதல் பாகிய சௌசமாம்.

(உ) சகாம மலின அந்நத்தையும், விஷயஇச்சையையும், ராகத்துவேஷாதிகளையும் விடுதலாலுண்டாகும் அந்தக்கரணசுத்தி ஆந்தரசௌசமாம்.

உ. சந்தோஷம்:—தனதுபிராரப்தத்தாற்கிடைத்த போகங்களிலேயே போது மென்னும் புத்தியும், ஒருபோதும் இந்திரியங்களின் பிரியத்தின் பொருட்டு வாயில்கடோறும் செல்லாதிருத்தலும் சந்தோஷமாம்.

ங. தவம்:—மன இந்திரியங்களை பஜனவிரோதிவியாபாரங்களினின்று தடுத்தல் தவமாம்; கேவலம் காயத்தினது கிலேசமாத்திரம் தவமன்று; அதற்கும் தாபசத்தன்மை யிருத்தலால்.

ச. சுவாத்தியாயம் :—தனது சாகையின் வேதபாகத்தைக் குருமுகமாக விதியோடு அர்த்தக்கிரகணம் வரையில் அத்யயனஞ்செய்தல் அல்லது கீதைமுதலியவற்றை நித்தியம் ஓதுதல்.

ரு. ஈசுவரப்பிரணிதானம்:—சர்வகர்மங்களையும் ஈசுவரனிடம் அர்ப்பணம் செய்தல், அல்லது ஓங்காரமுதலிய ஈசுவர உபாசனே.

* சரு. பஞ்சவர்க்கம் ரு:—

* சரு. ஸர்வசாரோபநிஷத்து.

௧. மனாதி:-மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.

௨. பிராணாதி:-பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன்.

௩. ஸத்துவாதி:-சத்துவம், ரஜசு, தமசு.

௪. இச்சாதி:-காமம், சங்கற்பம், சந்தேகம், சிரத்தை, அசிரத்தை, தைரியம், அதைரியம், நாணம், புத்தி, பயம்.

௫. புண்ணியாதி:-புண்ணியம், பாபம், ஞானம், சம்ஸ்காரம்.

பிரளயம் ௫:-

௧. நித்தியப்பிரளயம்:-க்ஷணத்திற்கு க்ஷணம் சகலகாரியங்களும் தீபச்சுடரைப் போல நாசமாதல் அல்லது சுழுத்தி.

௨. நைமித்திகப்பிரளயம்:-பிரஹ்மாவின் இராத்திரியாகிய நிமித்தத்தால் உண்டாகும் பூலோக முதலிய கீழ்மூன்றுலகங்களின் நாசம்.

௩. தினப்பிரளயம்:-பிரஹ்மாவின் தினத்தில் பதினான்கு மனுவந்திரங்களுண்டாகின்றன. அவை ஒவ்வொன்றன் நாசம் தினப்பிரளயமாம். இதனையே அவாந்தரப்பிரளயமென்றும், மனு

(உ) சகாம மலின அந்நத்தையும், விஷயஇச்சையையும், ராகத்துவேஷாதிகளையும் விடுதலாலுண்டாகும் அந்தக்கரணசுத்தி ஆந்தரசௌசமாம்.

உ. சந்தோஷம்:—தனதுபிராரப்தத்தாற்கிடைத்த போகங்களிலேயே போதுமென்னும் புத்தியும், ஒருபோதும் இந்திரியங்களின் பிரியத்தின் பொருட்டு வாயில்கடோறும் செல்லாதிருத்தலும் சந்தோஷமாம்.

௩. தவம்:—மன இந்திரியங்களை பஜனவிரோதிவியாபாரங்களினின்று தடுத்தல் தவமாம்; கேவலம் காயத்தினது கிலேசமாத்திரம் தவமன்று; அதற்கும் தாபசத்தன்மை யிருத்தலால்.

௪. சுவாத்தியாயம் :—தனது சாகையின் வேதபாகத்தைக் குருமுகமாக விதியோடு அர்த்தக்கிரகணம் வரையில் அத்யயனஞ்செய்தல் அல்லது கீதைமுதலியவற்றை நித்தியம் ஓதுதல்.

௫. ஈசுவரப்பிரணிதானம்:—சர்வகர்மங்களையும் ஈசுவரனிடம் அர்ப்பணம் செய்தல், அல்லது ஓங்காரமுதலிய ஈசுவர உபாசனை.

* ௪௫. பஞ்சவர்க்கம் ௫:—

---

*௪௫. ஸர்வசாரோபநிஷத்து.

க. மனாதி:-மனம், புத்தி, சித்தம், அகங்காரம்.

உ. பிராணாதி:-பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன்.

ங. ஸத்துவாதி:-சத்துவம், ரஜசு, தமசு.

ச. இச்சாதி:-காமம், சங்கற்பம், சந்தேகம், சிரத்தை, அசிரத்தை, தைரியம், அதைரியம், நாணம், புத்தி, பயம்.

ரு. புண்ணியாதி:-புண்ணியம், பாபம், ஞானம், சம்ஸ்காரம்.

பிரளயம் ரு:-

க. நித்தியப்பிரளயம்:-க்ஷணத்திற்கு க்ஷணம் சகலகாரியங்களும் தீபச்சுடரைப் போல நாசமாதல் அல்லது சுழுத்தி.

உ. நைமித்திகப்பிரளயம்:-பிரஹ்மாவின் இராத்திரியாகிய நிமித்தத்தால் உண்டாகும் பூலோக முதலிய கீழ்மூன்றுலகங்களின் நாசம்.

ங. தினப்பிரளயம்:-பிரஹ்மாவின் தினத்தில் பதினான்கு மனுவந்திரங்களுண்டாகின்றன. அவை ஒவ்வொன்றன் நாசம் தினப்பிரளயமாம். இதனையே அவாந்தரப்பிரளய மென்றும், மனு

வந்தரப்பிரளய மென்றும் கூறுவர். சிலர் இதனை யே நைமித்திகப்பிரளய மென்றும் கூறுவர்.

ச. மகாப்பிரளயம்:-பிரஹ்மாவின் நூறு வருஷத்திற்குப் பிறகு பிரஹ்மதேவருடன் ஆகாயமுதல் சர்வபூதங்களும் நாசமாகுதல்.

ரு. ஆத்தியந்திகப்பிரளயம்:- காரணத்தோடு ஜகத்திற்கு ஞானத்தினுல் உண்டாகும் பாதம் (அத்தியந்தநிவிருத்தி).

*சசு. பிராணன்முதலியன ரு:—

க. பிராணன். உ. அபானன். ௩. வியானன். ச. உதானன். ரு. சமானன்.

*சஎ. பிராணுதியைந்தின் ஸ்தானம் ரு:—
க. ஹிருதயம், உ. குதம், ௩. சர்வாங்கம், ச. கண்டம், ரு. நாபி.

பிராந்தி ரு:—(சூ-வது கலையைப்பார்க்க).

க. பேதப்பிராந்தி. உ. கர்த்திருத்துவப்பிராந்தி. ௩. சங்கப்பிராந்தி. ச. விகாரப்பிராந்தி. ரு. சத்தியத்துவப்பிராந்தி.

---

*சசு. பிருகதாரணியகம், பிரஹ்மோபநிஷத்து முதலியன.

*சஎ. அமிர்தநாதோபநிஷத்துமுதலியன.

பிராந்திநிவிருத்திதிருஷ்டாந்தம் ரு:-(௬-வது கலையைப் பார்க்க).

௧. பிம்பப்பிரதிபிம்பம். ௨. சிவப்புஸ்படிகம். ௩. கடாகாசம். ௪. இரஜ்ஜுசர்ப்பம். ௫. கனககுண்டலம்.

பேதம் ரு:—

† ௧. ஜீவேசுவரபேதம். ௨. ஜீவஜீவபேதம். ௩. ஜீவஜடபேதம். ௪. ஈசஜடபேதம். ௫. ஜடஜடபேதம்.

மகாயஞ்ஞம் ரு:—

௧. தேவயஞ்ஞம்:-தேவதைகளையுத்தேசித்து வேதத்திற்கூறிய நித்திய அக்கினிஹோத்திரத்

---

† க. சீவனி னீசன் வேறு
 சீவனிற் சீவன் வேருஞ்
சீவனிற் சடந்தான் வேறு
 தேய்சடத் தின்வே றீசன்
ருவுறு சடத்தின் வேருஞ்
 சடமெனு மிவைக டாமு
மேவிடு பஞ்ச பேத
 விதமென மொழிய லாகும்.

தில் விகிதமான ஹவ்யவடிவ அன்னத்தைப்போடுதல்.

௨. ரிஷியஞ்ஞம்:—வேதாதிகளைக் குரு உச்சரித்தபின் தான் உச்சரித்தல்வடிவ அத்தியயனாதி கருமங்கள்.

௩. பிதிருயஞ்ஞம்:— பிதிருக்களை யுத்தேசித்துச் சிரார்த்தாதிகளில் அவர்களின் திருப்திக்காக கவ்யவடிவ அன்னங்களைத் தருதலும், தருப்பணாதிகருமங்களும்.

௪. மானுஷயஞ்ஞம்:—அதிதி அப்பியாகதர்களாகிய சத்பாத்திரங்களைப் பகவத்சந்தோஷத்தின்பொருட்டுச் சக்திக்கியன்றவாறு தனது கிரகத்தில் சிரத்தையோடு நாடோறும் புசிப்பித்தல்வடிவ கருமங்கள்.

௫. பூதயஞ்ஞம்:—பசு பக்ஷி முதலியவைகளுக்குச் சக்திக்குத்தக்கபடி தன் கிரகத்துள்ள அன்னாதிகளைத் தருதல்.

யோகபூமி ௫:—

†௧. க்ஷேபம்:—இராகத்துவேஷாதிகளால் சித்தம் சலித்தல்.

---

†௧. சித்தபிரா காதி தம்மாற்
திரமுழு தூ சலித்தல் க்ஷேபம்

௨. விக்ஷேபம்:-பகிர்முகமாகிய சித்தம் ஒவ்வொருகால் தியானத்தோடு கூடியிருத்தல். அது க்ஷேபத்தினும் விசேஷமாகிய விக்ஷேபமாம்.

௩. மூடம்:-நித்திரை தந்திரை(தூக்கத்தின் ஆதியில் உண்டாகும் சோம்பல்) முதலியவற்றோடு கூடியதன்மை.

௪. ஏகாக்கிரம் :- யோகாப்பியாசபலத்தால் சித்தம் ஒருவஸ்துவில் பிரவாகம்போல் தொடர்ந்து நிற்றல்.

---

வைத்தவிடத் தசையா தோர்கான்
  மன்னுதல்வி க்ஷேப மாகு
நித்திரையே சோம்ப லாதி
  நேர்வதுவே மூட மொன்றிற்
றத்துமியல் பின்றி நிற்றல்
  சாரேகாக் கிரமா மென்பர். (௧)

சித்தவி ருத்தி யெங்குஞ்
  சென்றிடா தடங்கி நிற்றன்
மெத்தவு மொடுக்கந் தன்னை
  மேவிடு நிரோத மாகு
மித்தகை யான வைந்து
  மியோகத்தின் பூமி யாகு
மித்தினில் க்ஷேப மூட
  மியோகினுக் குரிய வாகா. (௨)

ரு. நிரோதம்:—சித்தம் சோர்வின்றி எவ்விரு த்திவடிவமுமாகா தடங்கியிருத்தல்.

வசனமுதலியன ரு:—

க. வசனம். உ. ஆதானம் (ஏற்றல்). ௩. கமனம்(போகுதல்). ௪. இரதிபோகம். ரு. மலநீக்கம்.

அறுவகைப்பதார்த்தங்கள்.



†அசிங்நுவத்தன்மைமுதலியன சு :—சந்நியாசியின் தர்மவிசேஷம்.

க. அசிங்நுவத்தன்மை :— சுவைவிஷயத்தில் விருப்பமில்லாமை.

---

† சுவையறி நாவி ருக்கச்
சுவையினை யறியா துண்ண
லெவையுமாம் பிரம மல்லா
தெதனையும் பேச லின்மை
யவைநல சந்நி யாசிக்
கசிங்நுவத் தன்மை யாகுங்
கவையுறு மநமோ டுங்கக்
காரண மாகு மென்ப. (க)

௨. நபும்ஸகத்துவம் :- குமரி, தருணி (பதினாறு வயதுள்ளவள்), விருத்தை என்னும் ஸ்திரீகளிடத்தில் சமத்துவம் (விகாரமில்லாமை).

௩. பங்குத்துவம் (முடம்):- அவசியமானால் ஒரு தினத்தில் ஒரு யோசனை தூரத்திற்கு அதிகமாய் நடவாதிருத்தல்.

௪. அந்தத்துவம் (குருடு):-ஒரு தனுசு (வில்) அளவிற்கு அதிகமாகப் பார்வையை விடாதிருத்தல்.

---

கிஞ்சுக மொழியார் மாதர்
 கிளர்ச்சியாய்த் தன்னைக் கிட்டிக்
கெஞ்சியே விருப்பங் காட்டக்
 கிழவியே குழந்தை யென்னக்
கொஞ்சமுங் கிளர்ச்சி யின்றிக்
 குவிந்திடு மநத்த னாதல்
புஞ்சகத் தன்மை யில்லாப்
 புகழ்பெறு தர்ம மாகும். (௨)

காதமும் பலந டக்குங்
 கால்களைப் பெற்றி ருந்துங்
காதம தொன்றன் மேலே
 கருதிடா னடக்க வெண்ணின்
ஆதலா லென்று முள்ள
 யமுந்திய மநத்த னாலே
பாதம தசையாத் தன்மை
 பங்குத்வ மாகு மன்றே. (௩)

ரு. பதிரத்துவம்(செவிடு):— வீண் வார்த்தைக ளைக் கேளாதிருத்தல்.

---

பார்த்திடு கண்ணி ரண்டும்
படுத்துவ முள்ள வாகப்
பார்த்திடு பொருள்க ளெல்லாம்
பரமதா யிலக லாலே
பார்த்திட வெண்ணு மொன்றைப்
பார்க்கினு முழநான் கின்மேற்
பார்த்திடா னதனு வீதே
பகரந்தத் தன்மை யாகும். (ச)

ஏதமில் பிரம வார்த்தை
யின்றிய வெறுவு மேதன்
காதினில் வாங்காத் தன்மை
கஙபதி ரத்து வம்மா
மோதுறு விவகா ரங்கண்
முற்றுமே நன்கு ணர்ந்தும்
பேதையைப் போலி ருத்தல்
பேசுமுக்தத் தன்மை யாகும். (ரு)

ஓதிய விவைக ளாறு
முயர்வுள சந்நி யாசி
காதலோ டநுட்டித் தற்காங்
கஙமுள தரும மாகுஞ்
சாதகன் கைக்கொள் வானேற்
றனிநிலே யதனைச் சார்வா
னேதமில் சாத்தி யற்கீ
தினியசீ வன்முத் திக்காம். (சு)

௬. மூக்தத்துவம்(அறியாமை):–சமர்த்தனுயி ருந்தும் வியவகார மில்லாதிருத்தல்.

அநாதிபதார்த்தம் ௬:–உற்பத்தியில்லாதபதார் த்தம்.

௧. ஜீவன். ௨. ஈசன். ௩. சுத்தசேதனம். ௪. அ வித்தை. ௫. சேதனுவித்தைகளின் சம்பந்தம். ௬. அவற்றின் பேதம்.

* ௪அ. அரிவர்க்கம் ௬:–பரலோகத்திற்கு வி ரோதமுடைய ஆந்தர(உள்ளிருக்கும்)சத்துருக் களின் சமூகம்(கூட்டம்).

௧. காமம்:–கிடைத்த வஸ்துவை அநுபவிக்கு ம் இச்சை(விருப்பு).

௨. குரோதம்:–துவேஷம்(வெறுப்பு).

௩. உலோபம்:–கிடையாத வஸ்துவை அடை யவேண்டுமென்னு மிச்சை.

௪. மோகம்:–ஆத்மாநாத்மாக்களின் அல்லது காரியாகாரியங்(நன்மைதீமை)களின் அவிவே கம்.

௫. மதம்:–கருவம்(அகங்காரம்).

*௪அ. முத்கலம், வராகம்.

சு. மற்சரம்:—அந்நியரது மேன்மையைச் சகியாமை.

அவஸ்தை சு:—ஸ்தூலதேகத்தின் காலம்.

க. சிசு:—தேகத்தின் ஒருவருஷகாலம்.

உ. கௌமாரம் :—தேகத்தினைந்து வருஷ்காலம்.

ங. பௌகண்டம்:—தேகத்தின் ஆறுமுதல் பத்துவருஷகாலம்.

ச. கிசோரம்:—தேகத்தின் பதினொன்றுமுதல் பதினைந்துவருஷகாலம்.

ரு. யௌவனம்:—தேகத்தின் பதினாறு முதல் நாற்பது வருஷகாலம்.

சு. ஜரை(மூப்பு):—தேகத்தின் நாற்பதிற்கு மேற்பட்ட காலம்.

இரசம் சு:—

க. தித்திப்பு. உ. புளிப்பு. ங. உவர்ப்பு. ச. கைப்பு. ரு. துவர்ப்பு. சு. உறைப்பு.

இலிங்கம் சு:—வேதவாக்கியத்தின் தாற்பரியத்தை நிச்சயிக்கும் இலிங்கம்.

க. உபக்கிரமம் உபசம்ஹாரம்:—ஆதியந்தங்களின் ஏகரூபத்துவம்(தொடக்கம் முடிவு).

௨. அப்பியாசம்:-அடிக்கடி படித்தல்.

௩. அபூர்வதை:-அலௌகிகத்தன்மை.

௪. பலம்:-மோக்ஷம்.

௫. அர்த்தவாதம்:-துதி.

௬. உபபத்தி:-அநுகூலதிருஷ்டாந்தம்.

ஈசுவரனது பகம்(ஐசுவரியம்)௬:-

௧. சமக்கிரஐசுவரியம். ௨. சமக்கிரதர்மம். ௩. சமக்கிரகீர்த்தி. ௪. சமக்கிரலக்ஷ்மி. ௫. சமக்கிர ஞானம். ௬. சமக்கிரவைராக்கியம். (சமக்கிரம் =எல்லாம்.)

ஈசுவரனது ஞானம் ௬:-

௧. உற்பத்தி. ௨. பிரளயம். ௩. கதி(போக்கு). ௪. ஆகதி:-இந்தவுலகத்தில் ஜீவனது வரவாகிய ஆகதி யாதோ அதன் ஞானம். ௫. வித்தை. ௬. அவித்தை.

* ௬௯. ஊர்மி ௬:-சம்சாரசாகரத்தின் அலைகள்.

௧. ஜனனம். ௨. மரணம். ௩. பசி. ௪. தாகம். ௫. சந்தோஷம். ௬. சோகம்.

---

*௬௯. முத்கலம், வாரகம்.

கர்மம் சூ:—நித்தியகர்மம்.

க. ஸ்நாநம். உ. ஜபம். ௩. ஹோமம். ச. அர்ச்சனம்:—தேவபூஜை. ரு. ஆதித்தியம்:—போஜனசமயத்தில்வந்த அதிதி(அப்பியாகதர்)களின் பொருட்டுச் செய்யும் அந்நதானம். சூ. வைசுவதேவம்:—அக்கினியில் போடப்பட்ட திரவியத்தின் ஹோமம்.

*ருo. கௌசிகம் சூ:—அந்நமயகோச(தேக)த்திலுண்டாகும் பதார்த்தங்கள்.

க. தோல். உ. மாமிசம். ௩. இரத்தம். ச. மேதை(கொழுப்பு). ரு. மஜ்ஜை(மூளை). சூ. எலும்பு.

*ருக. சந்நியாசம் சூ:—

க. குடீசகன். உ. பஹூதகன். ௩. ஹம்ஸன். ச. பரமஹம்ஸன். ரு. துரியாதீதன். சூ. அவதூதன்.

சமமுதலியன சூ:—

க. சமம். உ. தமம். ௩. உபரதி. ச. திதிக்ஷை. ரு. சிரத்தை. சூ. சமாதானம்.

---

*ருo. முத்கலம், வராகம்.

*ருக. சந்நியாஸோபநிஷத்து, நாரதபரிவிராஜகோபநிஷத்துமுதலியன.

*௫௨. சமாதி ௬:—

௧. பாகியதிருசியாநுவித்தம். ௨. ஆந்தரதிருசியாநுவித்தம். ௩. பாகியசத்தாநுவித்தம். ௪. ஆந்தரசத்தாநுவித்தம். ௫. பாகியநிருவிகற்பம். ௬. ஆந்தரநிருவிகற்பம்.

சாஸ்திரம் ௬:—

௧. சாங்கியம். ௨. யோகம். ௩. நியாயம். ௪. வைசேஷிகம். ௫. பூர்வமீமாஞ்சை. ௬. உத்தரமீமாஞ்சை.

சூத்திரம் ௬:—

௧. ஜைமிநீயம். ௨. ஆசுவலாயனம். ௩. ஆபஸ்தம்பம். ௪. போதாயனம். ௫. காத்தியாயனம். ௬. வைகானசீயம்.

பிரமாணம் ௬:—

௧.பிரத்தியக்ஷம் :—பிரத்தியக்ஷப்பிரமாவின் கரணம் பிரத்தியக்ஷப்பிரமாணமாம். அப்படிப்பட்டவை சுரோத்திரமுதலிய ஞானேந்திரியம் ஐந்தாம். (பிரமா=பிரமாணத்தாலுண்டாகும் ஞானம்).

---

*௫௨. சரஸ்வதிரகஸ்யோபநிஷதம்.

உ. அநுமானம்:-அநுமிதிப்பிரமாவின் கரணமாகிய இலிங்கத்தின் ஞானம் அநுமானப்பிரமாணமாம். அது பருவதத்தில் அக்கினியை அறிதற்கேதுவாகிய புகைவடிவாகிய இலிங்கத்தின் ஞானம்போன்றது.

ந. உவமானம் :-உவமிதிப்பிரமாவின் கரணமாகிய சாதிருசியஞானம் உவமானப்பிரமாணமாம். ஆமா(காட்டுப்பசு)விலுள்ள ஆவின்சாதிருசியஞானம்போல. (சாதிருசியம்=ஒப்புமை).

ச. சத்தம்:-சாப்திப்பிரமாவின் கரணமாகிய இலெளகிகவைதிகசப்தங்கள் சத்தப்பிரமாணமாம்.

ரு. அருத்தாபத்தி :-அருத்தாபத்திப்பிரமாவின் கரணமாகிய உபபாத்தியத்தின் ஞானம் அருத்தாபத்திப்பிரமாணமாம். பகலிலுண்ணாத பருத்த புருஷனது இராத்திரிபோஜனத்தை அறிவிக்கும் அருத்தாபத்திப்பிரமாவிற் கேதுவாகிய பருமனி(உபபாத்தியத்தி)ன் ஞானம்போல.(உபபாத்தியம்=சம்பாதிக்கப்படுவது). [இராத்திரிபோஜனம் உபபாதகம் அதாவது பருமனைச் சம்பாதிப்பது. பருமன் உபபாத்தியம் அதாவது போஜனத்தால் சம்பாதிக்கப்படுவது.]

௬. அநுபலப்தி:—அபாவப்பிரமாவின் கரணமாகிய பதார்த்தத்தின் அப்பிரதீதி(தோற்றரவின்மை)அநுபலப்திப்பிரமாணமாம். வீட்டில் குடத்தின் அபாவஞானத்திற்கேதுவாகிய குடத்தின் அப்பிரதீதிபோல.(அபாவப்பிரமா இல்லையென்னும் ஞானம்).

*௫௩. பிராந்தி(பிரமம்)௬:—

௧. குலம், ௨. கோத்திரம். ௩. ஜாதி. ௪. வருணம். ௫. ஆசிரமம். ௬. ரூபம். அல்லது பெயர்.

*௫௪. விகாரம் ௬ :—

௧. பிறப்பு. ௨. இருப்பு:—முன்னில்லாததின் இருக்கை. ௩. விருத்தி(வளர்ச்சி). ௪. பரிணமம் (திரிபு). ௫.க்ஷயம்(குறைவு). ௬. நாசம்.

வேதாங்கம் ௬:—

௧. சிக்ஷை. ௨. கல்பம். ௩. வியாகரணம். ௪. நிருக்தம். ௫. சந்தசு .௬. ஜோதிஷம்.

---

*௫௩. முத்கலம்.

*௫௪. முத்கலம், வராகம், கர்ப்போபநிஷதம்.

## எழுவகைப்பதார்த்தங்கள்.



அதலமுதலியன எ:-

க. அதலம். உ. விதலம். ங. சுதலம். ச. தலாதலம். ரு. இரஸாதலம். சு. மகாதலம். எ. பாதாளம்.

*ருரு. அஞ்ஞானத்தின் அவஸ்தை எ:-

க. பீஜஜாக்கிரம். உ. ஜாக்கிரம். ங. மகாஜாக்கிரம். ச. ஜாக்கிரசொப்பனம். ரு. சொப்பனம். சு. சொப்பனஜாக்கிரம். எ. சுழுத்தி.

அவஸ்தை எ:-சிதாபாசனுக்குக் கிரமமாகப் (ங)பந்தத்திற்கும்(ச)மோக்ஷத்திற்கும் ஏதுவாகும் தசை.

க. அஞ்ஞானம்:-"எனக்குத் தெரியவில்லை" என்னும் வியவகாரத்திற்கு ஏதுவாகும் ஆவரண விக்ஷேபசக்திகளையுடைய அநாதிஅநிர்வசநீய பாவரூபமாகிய பதார்த்தம்.

---

*ருரு. மகோபநிஷதம்.

௨. ஆவரணம்:—"இல்லை, தோற்றவில்லை" என்னும் வியவகாரத்திற்கு ஏதுவாகிய அஞ்ஞானத்தின் காரியம்.

௩. விக்ஷேபம்:—தர்மத்தோடுகூடிய பிரபஞ்சமும், அதன ஞானமும்.

௪. பரோக்ஷஞானம்.

௫. அபரோக்ஷஞானம்.

௬. சோகநிவிருத்தி:—விக்ஷேபநாசம் (பிராந்திநிவிருத்தி).

௭. திருப்தி:—ஞானத்தா லுண்டாகும் சந்தோஷம்.

*௫௬. சைதன்னியம் ௭:—

௧. ஈசுவரன்:—மாயாவிசிஷ்டசேதனம்.

௨. ஜீவன்:—அவித்தியாவிசிஷ்டசேதனம்.

௩. சுத்தம்:—நிருபாதிகசேதனம்.

௪. பிரமாதா:—பிரமாதாவாகிய அந்தக்கரணத்தால் அவச்சின்னசேதனம்.

---

*௫௬. கடோபநிஷத்து.

ரு. பிரமாணம்:—இந்திரியவாயிலாகச் சரீரத்தினின்றும் வெளியே புறப்பட்டுக் கடமுதலிய விஷயம்வரையிலும்பொருந்தும் விருத்தி பிரமாணமாம். அதனுல் அவச்சின்ன (வளைபட்ட)சேதனம் பிரமாணசேதனமாம்.

சு. பிரமேயம்:—பிரமேயமாகிய கடமுதலிய விஷயத்தால் அவச்சின்ன (மற்றவற்றினின்றும் வேறுபிரிக்கப்பட்ட)சேதனம்.

எ. பிரமா:—கடமுதலிய விஷயாகாரமாகியவிருத்தி பிரமாவாம். பிரமை யென்பதும் அது. அதனுல் அவச்சின்னசேதனம், அல்லது அதில் பிரதிபிம்பித்தசேதனம் பிரமாசேதனமாம். இதனையேபிரமிதிசேதன மென்றும், பலசேதன மென்றும் கூறுவர்.

ஞானபூமி எ:—(இதன் பதின்மூன்ருவது கலையிற் காண்க).

க. சுபேச்சை. உ. விசாரணை. ௩. தநுமானஸி. ச. சத்துவாபத்தி. ரு. அசம்சத்தி. சு. பதார்த்தாபாவினி. எ. துரியம்.

தாது எ:—

க இரசம்:—புசிக்கப்பட்ட அந்நம் சூக்ஷ்மம் (புண்ணியபாவம்), மத்திமம்(அந்நத்தின்சாரம்),

தூலம்(மலம்)என்று மூன்றுவிதமாகவிபாகமாகின்றது. அவற்றிலுள்ள மத்திமவிபாகம்(பிரிவு) இரசமாம்.

௨. இரத்தம்.
௩. மாமிசம்.
௪. மேதை:-கொழுப்பு.
௫. மஜ்ஜை:-எலும்பிலுள்ள மூளை.
௬. எலும்பு.
௭. வீரியம்.

திரவியமுதலியபதார்த்தங்கள் ௭ :-நியாயமதத்தில் திரவியமுதலிய ஏழுபதார்த்தங்கள் ஒப்பப்பட்டிருக்கின்றன.

௧. திரவியம்:-நியாயமதத்தில் ஒப்பியிருக்கும் (௧)பிருதிவி. (௨) ஜலம். (௩)அக்கினி. (௪)வாயு. (௫)ஆகாசம். (௬)காலம். (௭)திக்கு. (அ)ஆத்மா. (௯)மனம் என்னும் ஒன்பது திரவிய(குணத்திற்கு ஆசிரயமாகியபதார்த்த)ங்கள்.

௨. குணம் :-நியாயமதத்தில் ஒப்பியிருக்கும் (௧) உருவம்(நிறம்), (௨) இரசம்(சுவை), (௩)கந்தம்(மணம்), (௪) பரிசம்(ஊறு), (௫) சங்கை(எண்), (௬) பரிமாணம்(அளவு), (௭) பேதம்(வே

ற்றுமை), (அ) சையோகம் (சேர்க்கை),( கூ) வி பாகம் பிரிவு, (கo) பரத்துவம்(முன்மை), (கக) அபரத்துவம்(பின்மை), (கஉ) குருத்துவம்(கன தி), (கங) திரவத்துவம்(நெகிழ்ச்சி), (கச) சிநே கம், (கரு) சத்தம்(ஒலி), (கசு) புத்தி(அறிவு), (கஎ) சுகம், (கஅ) துக்கம், (ககூ) இச்சை, (உo) வெறுப்பு, (உக) பிரயத்தினம்(முயற்சி), (உஉ) தர்மம்(புண்ணியம்), (உங) அதர்மம்(பாபம்), (உச) வாசனை(சம்ஸ்காரம்) என்னும் இருபத்து நான்கு குணங்கள்.

ங. கர்மம்:—நியாயமதத்தில் ஒப்பப்பட்டிருக் கும் (க) உத்க்ஷேபணம்(எழும்பல்), (உ) அப க்ஷேபணம்(வீழ்தல்), (ங) ஆகுஞ்சனம்(வளைத ல்), (ச) பிரஸாரணம்(நிமிர்தல்), (ரு) கமனம் (நடத்தல்)என்னு மைந்துவிதகர்மங்கள்.

ச. சாமானியம் :—நியாயமதத்தில் ஒப்பப்பட் டிருக்கும் பரம்(சத்தை)அபரம்(கடத்துவமுத லியன) என்னும் இருவகைஜாதி.

ரு. விசேஷம் :—வைசேஷிகமதத்தில் பரமா ணுக்களின் மத்தியில் அநேக அவகாசரூப பதா ர்த்தங்கள் ஒப்பியிருக்கின்றார்கள். அவை விசே ஷமாம்.

சூ. சமவாயம்: வேதாந்தமதத்தில் எங்கெங்கே தாதாத்மியசம்பந்தம் ஒப்பியிருக்கின்றார்களோ, அங்கங்கே நியாயமதத்தில் ஒப்பியிருக்கும் சம்பந்தவிசேஷம்(நித்தியசம்பந்தம்)சமவாயமாம்.

எ. அபாவம்:-(க)பிராகபாவம்(முன்இன்மை). (உ) பிரத்துவம்சாபாவம் (அழிந்தபின் இல்லாமை). (ந) அந்நியோந்நியாபாவம் (ஒன்றில் ஒன்றின்மை). (ச) அத்தியந்தாபாவம் (முற்றுமின்மை). (ரு) சாமயிகாபாவம்(ஓர்சமயத்தில்லாமை) என்னும் ஐந்து விதமாகிய இல்லை என்னும் ஞானத்திற்கு விஷயமாகும் பதார்த்தங்கள்.

பூலோகமுதலியன எ:-

க. பூலோகம். உ. புவர்லோகம். ந. சுவர்லோகம். ச. மகாலோகம். ரு. ஜனலோகம். சூ. தபோலோகம். எ. சத்தியலோகம்.

மௌனமுதலியன எ:-

க. மௌனம். உ. யோகாசனம். ந. யோகம். ச. திதிக்ஷை. ரு. ஏகாந்த சீலத்துவம். சூ. ஆசையின்மை. எ. சமத்துவம்.

*ருஎ. ரூபம் எ:-

*ருஎ. கர்ப்போபநிஷத்து.

க. வெண்மை. உ. கருமை. ங. பொன்மை. ச. செம்மை. ரு. பசுமை. சு. புகைமை. எ. சித்திரம்.

வியசனம் எ:-

க. சரீரம். உ. மனம். ங. குரோதம். ச. விஷயம். ரு. தனம். சு. இராச்சியம். எ. சேவகவியசனம்.

## எண்வகைப்பதார்த்தங்ள்.



†அப்பிரமாதத்தின் குணங்கள் அ:-

க. சத்தியம், உ. தியானம், ங. சமாதானம், ச. விதிப்படி நடத்தல், ரு. வைராக்கியம், சு. திருடாமை, எ. பிரஹ்மசரியம், அ. நாளைக்கு வேண்டுமென்று சேர்த்துவையாமை.

ஆநந்தம் அ:-

க. எப்போது மாலைமுதலிய விஷயங்களின் இலாபத்தால் அந்தந்த விஷயத்தின் இச்சை

---

† "सत्यं ध्यानं समाधानं चोद्यं वैराग्यमेव च ।
अस्तेयं ब्रह्मचर्यं च तथाऽसंग्रहमेव च ॥" என்பது சநத்ஸுஜாதீயம் ஙு-ம் அத்தியாயம்.

நீங்குகின்றதோ, அப்போது மனது அந்தர்முக மாகின்றது. ஆகவே அம்மனதில் எந்த ஆத்ம சொரூபத்தின் ஆநந்தம் பிரதிபிம்பத்தினை யடைகின்றதோ, அது விஷயாநந்த மெனப்படும்.

அல்லது, எப்போது விரும்பிய விஷயத்தின் அடை வுண்டாகின்றதோ, அப்போது இச்சை வடிவ சஞ்சலமான இராஜசவிருத்தியினது நிவிருத்தி யுண்டாகின்றது. கிடைத்த விஷயத்தின் ஞானவடிவ சாத்துவீகவிருத்தியினால் விஷய உபகிதசேதனத்தின் சொரூபவடிவ ஆநந்தத்தின் விளக்க முண்டாகின்றது. இந்த விருத்தி விஷயவடிவ நிமித்தத்தா லுண்டாகின்றது. ஆதலால் இந்தவிருத்தி விஷயாநந்த மெனப்படுகின்றது.

அல்லது விரும்பியவிஷயத்தின் ஞானத்தால் இச்சையாகிய விருத்தி நீங்குகின்றது. அந்த இச்சையின் நிவிருத்திவடிவ நிமித்தத்தினாலேயே வேறு அந்தர்முகவிருத்தி யுண்டாகின்றது. அதனால் அந்தக்கரண உபகித ஆநந்தத்தின் பானமுண்டாகின்றது. இவ்வந்தர்முகவிருத்தி அல்லது அந்தவிருத்தியி லுண்டாகும் சொரூபாநந்தத்தின் பிரதிபிம்பம் விஷயாநந்த மெனப்படுகின்றது.

இஷ்டவிஷயமான சந்தனம் மாலைமுதலான பதார்த்தங்கள் கிடைத்து, அவைகளையநுபவிக்கும்போது, இச்சைமறைதலாகிய நிமித்தத்தா லுண்டாகும் அந்தர்முகமனோவிருத்தியில் பிரதிபிம்பிக்கு மாநந்தம் விஷயாநந்தமாம்.

இதனையே பிரதிபிம்பாநந்த மென்றும் இலேசாநந்த மென்றும் கூறுவர். இதனால் பிரஹ்மா முதல் எறும்புபரியந்தமான சர்வஜீவர்களும் நிர்வாகஞ்செய்கின்றனர்.

௨. சுழுத்தியில் அநுபவிக்கும் சொப்பிரகாச ஆநந்தம் பிரஹ்மாநந்தம்.

௩. நித்திரையினின்றும் விழித்தபோது மயக்கமுடைய சுழுத்தியில் அநுபவித்த பிரஹ்மாநந்தத்தின் வாசனையாகச் சொற்பகாலம் அநுபவிக்கும் ஆநந்தம் வாசனாநந்தம்.

௪. பிரியமுள்ள வஸ்துக்கள் எல்லாவற்றினும் யானே அதிகப்பிரிய னென்று விவேகத்தாலறிந்தகாலத் துண்டாகும் ஆநந்தம் ஆத்மாநந்தம்.

௫. யோகசமாதிகள் பழகுங்கால் அதில் நிராவரணமாகத் தோன்றும் ஆநந்தம் முக்கியாநந்தம்.

௬. உதாசீனமடைந்த போதுண்டாகும் ஆந ந்தம் நிஜாநந்தம்.

௭. துவைதமாகிய பிரபஞ்சாதிகளை உபேக்ஷி த்து, அத்வைதமான தன்னை விவேகத்தால் நாடு ங்காலத்தி லுண்டாகும் ஆநந்தம் அத்துவிதாநந் தம்.

௮. மகாவாக்கியவிசாரஞானத்தினு லந்தக்கர ணவிருத்தியில் பிரதீதியாகும் ஆநந்தம் வித்தியா நந்தம்.

சப்தசக்திக்கிரகண ஏது ௮:-

க. வியாகரணம். உ. உபமானம். ௩. கோசம் (நிகண்டு). ௪. ஆப்தவாக்கியம். ரு. விருத்த(முதி யோர்) வியவகாரம். ௬. வாக்கியசேஷம். ௭. வி வரணம். ௮. நிச்சயிக்கப்பட்ட பதத்தின் சந்நிதி (அண்மை).

*ருஅ. சமாதியினங்கள் ௮:-

க. இயமம். உ. நியமம். ௩. ஆசனம். ௪. பிரா ணாயாமம். ரு. பிரத்தியாகாரம். ௬. தாரணை. ௭. தியானம். ௮. சவிகற்பசமாதி.

*ருஅ. சாண்டில்யதர்சனுதியுபநிஷத்துக்கள்.

பாசம் அ:-

க. தயை. உ. சங்கை. ௩. பயம். ச. வெட்கம். ரு. நிந்தை. சு. குலம். எ. சீலம். அ. தனம்.

*ருகூ. பிரகிருதி அ:-

க. பிருதிவி. உ. ஜலம். ௩. அக்கினி. ச. வாயு. ரு. ஆகாசம்.

சு. மனம் :—இங்கே மன மென்றதனுல் சமஷ்டிமனமாகிய அகங்காரம் கொள்ளப்படும்.

எ. புத்தி:—இங்கே புத்தி என்றதனுல் சமஷ்டி புத்தியாகிய மகத்தத்துவம் கொள்ளப்படும்.

அ. அகங்காரம்:—இங்கே அகங்கார மென்றதனுல் மகத்தத்துவத்திற்கு முன் சுத்த அகங்காரத்திற்குக் காரணமாயுள்ள அஞ்ஞானமாகிய மூலப்பிரகிருதி கொள்ளப்படும்.

*சுo. பிரஹ்மசரியத்தினங்கம் அ:-

---

*ருகூ. சாரீரகோபநிஷத்து.

*சுo. கடோபநிஷத்து. நாரதபரிவிராஜகம்.

†க. ஸ்திரீயின் தரிசனம். உ. பரிசனம். ௩. கேளி:—விளையாட்டு. ௪. கீர்த்தனம். ரு. குஹ்ய பாஷணம்(இரகசியமாகப் பேசுதல்). ௬. சங்கற்பம் :—சிந்தனம்(ஸ்மரணம்). ௭. நிச்சயம். அ. கிரியாஜந்நியசுகம் என்னும் அஷ்டமைதுனத்தினும் விபரீதம் அதாவது இவற்றின் இன்மை.

*௬க. புரி அ:—

க. ஞானேந்திரியபஞ்சகம். உ. கர்மேந்திரிய

---

†க. காதலாய்த் தையலாரைக்
காணுத லவர்மெய் தீண்டல்
கோதுற வவரோ டாடல்
கூசிடா தவர்க்கீர்த் தித்த
றீதுறத் தனித்துப் பேசல்
சிந்தித்த றுணிதல் சேர
மாதொடு கூட லெட்டு
மைதுந மென்னும் வேதம். (க)

எண்வகை மைது நத்தை
யெண்ணிடா தொழித்த யோகி
கண்படில் வினைகள் கோடி
கணத்தினிற் பறக்கு மென்னி
னண்புட னவரை நாடி
நலமிக வுபச ரித்தே
பண்பொடு போற்று வார்க்காம்
பயன்றனைச் சொல்ல லாமே. (உ)

*௬க. பைங்கலம்.

பஞ்சகம். ங. அந்தக்கரணசதுஷ்டயம். ச. பிராணாதிபஞ்சகம். ரு. பூதபஞ்சகம். சூ. அவித்தை. எ. காமம். அ. மூவிதகர்மம் அல்லது வாசனை.

மதம் அ:—

க. குலம். உ. சீலம். ங. தனம். ச. அழகு. ரு. யௌவனம். சூ. வித்தை. எ. தவம். அ. இராஜ்யம்.

மூர்த்திமதம் அ:—

க. பிருதிவிமதம்:—அஸ்திமாமிசமுதலிய பிருதிவியினது தத்துவங்களி னபிமானம்.

உ. ஜலமதம்:—சுக்கிலசுரோணிதமுதலிய ஜலத்தினது தத்துவங்களி னபிமானம்.

ங. தேயுமதம்:—பசிமுதலிய தேயுவினது தத்துவங்களின் மிகுதி.

ச. வாயுமதம்:—நடத்தல் ஓடுதல்முதலிய வாயுவின் தத்துவங்களோடு கூடியதன்மை.

ரு. ஆகாயமதம்:—காமக்குரோதமுதலிய ஆகாயத்தின் தத்துவங்களோடு கூடியதன்மை.

சூ. சந்திரமதம்:—குளிர்ச்சியாகிய சந்திரனது குணத்தோடு கூடியிருத்தல்.

எ. சூரியமதம்:—சந்தாப (குரோதாதிரூப) மாகிய சூரியனது குணத்தோடு கூடியிருத்தல்.

அ. ஆத்மமதம்:—வித்தை தனம் குலமுதலிய ஆத்மாவினது சம்பந்திகளினபிமானம்.

---

## ஒன்பதுவகைப்பதார்த்தங்கள்.

*கூஉ. சம்சாரம் கூ:—

க. ஞாதா. உ. ஞானம். ௩. ஞேயம். ச. போக்தா. ரு. போக்கியம். சு. போகம். எ. கர்த்தா. அ. கரணம். கூ. கிரியை.

தத்துவம் கூ:—ஓர்மகாத்மாவினது மதத்தில் ஒப்பியிருக்கும் இலிங்கதேகத்தின் ஒன்பது தத்துவங்கள்.

க. சுரோத்திரம். உ. துவக்கு. ௩. சக்ஷு. ச. சிங்குவை. ரு. கிராணம். சு. மனம். எ. புத்தி. அ. சித்தம். கூ. அகங்காரம்.

---

*கூஉ. முத்கலம்.

## பத்துவகைப்பதார்த்தங்கள்.



*சூரு. நாதம் ௧௦:-

௧. சிணீயெனல், ௨. சிஞ்சினியெனல், ௩. கண்டாநாதம், ௪. சங்கநாதம், ௫. தந்திரிநாதம், ௬. தாலநாதம், ௭. வேணுநாதம், ௮. மிருதங்கநாதம், ௯. பேரீநாதம், ௧௦. மேகநாதம்.

சிங்காரமுதலிய ரசம் ௧௦:-

௧. சிங்காரம். ௨. வீரம். ௩. கருணை. ௪. அற்புதம். ௫. ஆசியம் (சிரிப்பு). ௬. பயங்கரம். ௭. விபற்சம்(அருவருப்பு). ௮. இரௌத்திரம். ௯. சாந்தம். ௧௦. பிரியபக்தி அல்லது ஞானம்.

*சூ௪. தோஷங்கள் ௧௦:-

௧. திருட்டு, ௨. வியபிசாரம், ௩. ஜீவஹிம்சை, இம்மூன்றும் சரீரதோஷங்கள்.

---

*சூ௬. ஹம்ஸோபநிஷத்து.

*சூ௪. நிருஸிம்ஹதாபினீயஉபநிஷத்து. (விசாரசாகரம்-௧௧௬ பக்கம்-௬௫.)

௧. பொய்மொழிதல், ௨. பிறர்நிந்தை, ௩. கடுஞ்சொல், ௪. வீண்பேச்சு, இந்நான்கும் வாக்கின் தோஷங்கள்.

௧. இச்சை, ௨. சிந்தை, ௩. புத்திமந்தத்தன்மை யென்னும் இம்மூன்றும் மனதின் தோஷங்கள்.

*௬௫. நாடியும் தேவதையும் ௧௦:-

௧. இடை (சந்திரன்) இடது மூக்கிலுள்ள சந்திரநாடி; விஷ்ணு தேவதை.

௨. பிங்கலே (சூரியன்) வலதுமூக்கிலுள்ள சூரியநாடி; பிரமா தேவதை.

௩. சுழுமுனே (மத்திமை) நாசியின் மத்தியிலுள்ள நாடி; உருத்திரன் தேவதை.

௪. காந்தாரி (வலது நேத்திரம்) இந்திரன்.

௫. அத்திசிங்ஙுவை (இடது நேத்திரம்) வருணன்.

---

*௬௫. பத்து என்பதனே தியானபிந்து, யோகசூடாமணி முதலியவற்றிற் காண்க. நாடிகள் ௧௪ என்றும் கூறுவர். அவற்றைச் சாண்டில்யதர்சனபாவஞ்தியுபநிஷத்துக்களிற் காண்க.

௬. பூஷை (வலது காது) ஈசுவரன்.

௭. யசஸ்விநி (இடதுகாது) பிரஹ்மா.

௮. குகு(குதம்) பிருதிவி.

௯. அலம்புடை (கந்தஸ்தானம்) சூரியன்.

௧௦. சங்கினி (நாபி) சந்திரன்.

## பதினொருவகைப்பதார்த்தங்கள்.

*௬௬. ஆநந்தம் ௧௧:-

௧. மநுஷ்யாநந்தம். ௨. மநுஷ்யகந்தர்வாநந்தம். ௩. தேவகந்தர்வாநந்தம். ௪. பிதிர்லோகாநந்தம். ௫. ஆஜானஜதேவாநந்தம். ௬. கர்மதேவாநந்தம். ௭. தேவாநந்தம். ௮. இந்திராநந்தம். ௯. பிரகஸ்பதியாநந்தம். ௧௦. பிரஜாபதியாநந்தம். ௧௧. பிரஹ்மாநந்தம்.

ஞானசாதனம் ௧௧:-

†௧. விவேகம். ௨. வைராக்கியம். ௩. சமாதி

---

*௬௬. தைத்திரீயம்.

†௧. பகுத்தறி விவேகத் தோடு
பகர்விரா கஞ்ச மாதி
தொகுத்திடு மாற ளுப்தி
துயரொழி முத்தி வேட்கை

ஷட்சம்பத்தி. ச. முமுக்ஷுத்துவம். ரு. ஆசிரியர்வழிபாடு(விதிபூர்வகமாகக் குருவைச் சரணமடைதல்). சு. சிரவணம். எ. தத்துவஞானப்பியாசம். அ. மனனம். கூ. நிதித்தியாசனம். ௰. மனோநாசம்:—இங்கே இரஜோதமோகுணங்களால் சத்துவகுணம் திரஸ்கரிக்கப்படுதலாகிய மனதின் ஸ்தூலத்தன்மை, மன மெனப்பட்டது. பிரஹ்மாப்பியாசத்தின் மிகுதிப்பாட்டால் இரஜோதமோகுணங்கள் திரஸ்கரிக்கப்பட்டுச்சத்வகுணம் ஆவிர்ப்பவித்தல் மனோநாசமாம். கக. வாசனாக்ஷயம்.

---

பகுப்புள வாசாற் சார்தல்
  பகர்வது கேட்டல் ஞாந
மிகுத்திடப் பழக லத்தை
  விசதமாச் சிந்தை செய்தல். (க)

நிதித்தியா சநம நத்தி
  னிகழசத் தாவவி ருத்தி
கதித்திடா தடங்க லென்னுங்
  கனமனோ நாச முள்ளிற்
பதித்துள சம்ஸ்கா ரங்கள்
  பற்றிடா தொழித்த லென்று
விதித்திடு மிவைகள் ஞான
  மேவுசா தநங்க ளாகும். (உ)

---

## பன்னிரண்டுவகைப்பதார்த்தங்கள்.



அநாத்மாவின் தர்மம் கஉ:-

க. அநித்தியம். உ. விநாசி. ங. அசுத்தம். ச. நாநா. ரு. க்ஷேத்திரம். சு. ஆசிரிதம். எ. விகாரி. அ. பரப்பிரகாசியம் :- (மற்றொன்றால் பிரகாசிக்கப்படுவது). கூ. ஏதுவுடையது. கO. வியாப்பியம்:-பரிச்சின்னம் (தேசகாலவஸ்துவினாலாகிய பரிச்சேத முடையது). கக. சங்க(சம்பந்த)முடையது. கஉ. ஆவிருதம்(மறைப்புள்ளது).

ஆத்மாவின் தர்மம் கஉ:-

க. நித்தியம்:-உற்பத்திநாச மில்லாதது.

உ. அவ்வியயம்:-குறைதலும் நிறைதலு மில்லாதது.

ங. சுத்தம்:-மாயை அவித்தையாகிய மல மில்லாதது.

ச. ஏகம்:-சஜாதீயபேத மில்லாதது.

ரு. க்ஷேத்திரஞ்ஞன்:-சரீரமாகிய க்ஷேத்திரத்தினை அறிபவன்.

சு. ஆசிரயம்:—அதிஷ்டானம்.

எ. அவிகாரி.

அ. சோப்பிரகாசம்:—தனது பிரகாசத்தில் அந்நியப்பிரகாசங்களின் அபேக்ஷையில்லாததாய் எல்லாவற்றையும் பிரகாசிப்பது.

கூ. ஏது:—வலைக்குக் காரணமாகிய சிலந்தியைப்போலவும், நகத்திற்குக் காரணமாகிய புருஷனைப்போலவும் ஜகத்திற்கு அபின்ன நிமித்த [விவர்த்த] உபாதானகாரணமாம்.

கய. வியாபகம்:—அபரிச்சின்ன(பரிபூரண)ம்.

கக. சங்கமில்லாதது:— சஜாதீயவிஜாதீயசுகத சம்பந்த மில்லாதது.

கஉ. அநாவிருதம்:—எவ்விதத்தாலும் மறைப்பில்லாதது.

*பிராஹ்மணனது விரதம் கஉ:—

க. ஞானம். உ. சத்தியம். ங. சமம். ச. தமம். ரு. சுருதம்:—சாஸ்திராப்பியாசம். சு. மாச்சரிய

---

* ज्ञानं च सत्यं च दमः श्रुतं च अमात्सर्यं ह्रीस्तितिक्षाऽनसूया। यज्ञश्च दानं च धृतिः शमश्च महाव्रता द्वादश ब्राह्मणस्य ॥ ஸநத்ஸுஜாதீயம் அத்யாயம்-ங-ச-கக.

மின்மை:--அந்நியரது மேன்மையைச் சகியாமை யாகிய மச்சரமில்லா திருத்தல். எ. நாணம். அ. திதிக்ஷை. கூ. அசூயையில்லாமை :--குணத்தில் தோஷத்தை ஆரோபித்தலாகிய அசூயை யில்லா திருத்தல். கo. யஞ்ஞம். கக. தானம். கஉ. தைரியம்:--காமக்குரோதங்களின் வேகத்தைத் தடுத்தல்.

மகத்துவ(பெருமை)ஏதுவாகிய தர்மம் கஉ: --

க. செல்வம். உ. அபிஜனம்:--குடும்பம். ங. அழகு. ச. தவம். ரு. சுருதம்:-- சாஸ்திராப்பியாசம். சு. ஓஜசு:--இந்திரியங்களின்தேஜசு. எ. தேஜசு. அ. பிரபாவம். கூ. பலம். கo. பௌருஷம். கக. புத்தி. கஉ. யோகம்.

---

## பதின்மூன்றுவகைப்பதார்த்தங்கள்.

பாகவததர்மம் கங:--பகவத்பக்தர்களது தர்மம்.

க. சகாமகர்மபலத்தின் விபரீததரிசனம்.

உ. திரவியம் கிரகம் புத்திரன்முதலியவற்றைத் துக்க மென்றும், சல மென்றும் அறிதல்.

௩. பரலோகம் நிலையில்லாதது என்று அறிதல்.

௪. சத்தப்பிரஹ்மத்திலும் பரப்பிரஹ்மத்திலும் குசல (சாமர்த்திய) முள்ள குருவைநோக்கிச் செல்லல்.

௫. குருவினிடத்தில் ஈசுவரபுத்தியும் நிஷ்கபடசேவையும்.

௬. பரமேசுவரனிடத்தில் சகல கர்மங்களையும் சமர்ப்பித்தல்.

௭. பக்திவைராக்கியத்தோடுகூடிய சொரூபாநுபவம்.

௮. சாதுசங்கம்.

௯. சௌசம், தவம், திதிக்ஷை, மௌனம், சுவாத்தியாயம், ஆர்ஜவம்(நேர்மை), பிரஹ்மசரியம், அஹிம்ஸை, துவந்துவசமத்துவம் (சீதோஷ்ண முதலிய இருமைத்தர்மங்களைச் சகிக்கும் சுபாவம்).

௧௦. எங்கும் ஆத்மவடிவமாக ஈசுவரனைத்தரிசித்தல்.

கக. கைவல்லியம்(தனிமையா யிருத்தல்), அநிகேதத்துவம்(வீடுகட்டாதிருத்தல்), ஏகாந்தப (தனியிடம்), கந்தைவஸ்திரம், சந்தோஷம்

கஉ. சருவபூதங்களிலும் ஆத்மாவின் ஐசுவரிய முடைமையைத் தரிசித்தல், பகவத்வடிவமாகிய ஆத்மாவில் சகல பூதங்களையும் தரிசித்தல்.

கங. ஜன்மம் கர்மம் வருணம் ஆசிரமமுதலியவற்றால் தேகத்தில் நிரபிமானமும், தான்பிற ரென்னும் புத்தி யில்லாமையும்.

---

## பதினான்குவகைப்பதார்த்தங்கள்.

திரிபுடி கச:-

ஞானேந்திரியங்களின் திரிபுடி.

| இந்திரியம். | தேவதை. | விஷயம். |
|---|---|---|
| அத்தியாத்மம். | அதிதெய்வம். | அதிபூதம். |
| க. சுரோத்திரம். | திக்கு. | சத்தம். |
| உ. துவக்கு. | வாயு. | பரிசம். |
| ங. சக்ஷு. | சூரியன். | உருவம். |
| ச. சிங்குவை. | வருணன். | இரசம். |
| ரு. கிராணம். | அசுவினிகுமாரர். | கந்தம். |

## கர்மேந்திரியங்களின் திரிபுடி.

| | | | |
|---|---|---|---|
| சு. | வாக்கு. | அக்கினி. | வசனம்(கிரியை). |
| எ. | பாணி. | இந்திரன். | ஏற்றலிடுதல். |
| அ. | பாதம். | வாமனர். | நடக்தல் |
| கூ. | உபஸ்தம். | பிரஜாபதி. | இரதிபோகம். |
| கO. | குதம். | இயமன். | மலத்தியாகம். |

## அந்தக்கரணம் நான்கன் திரிபுடி.

| | | | |
|---|---|---|---|
| கக. | மனம். | சந்திரன். | சங்கற்பவிகற்பம். |
| கஉ. | புத்தி. | பிரஹ்மா. | நிச்சயம். |
| கங. | சித்தம். | வாசுதேவன். | சிந்தித்தல். |
| கச. | அகங்காரம். | உருத்திரன். | அகந்தை. |

## பதினைந்துவகைப்பதார்த்தங்கள்.

---

மாயையின் பெயர் கரு:—

க. மாயை. உ. அவித்தை, ங. பிரகிருதி. ச. சக்தி. ரு. சத்யை. சு. மூலை. எ. தூலை. அ. யோனி. கூ. அவ்வியக்தம். கO. அவ்வியாகிருதம். கக. அஜை. கஉ. அஞ்ஞானம். கங. தமசு. கச. துச்சை. கரு. அநிர்வசனீயை.

---

## பதினாறுவகைப்பதார்த்தங்கள்.



*சுஎ. அவஸ்தையும் அவஸ்தாபிமானியும்கசு:-

க. ஜாக்கிரஜாக்கிரம். விசுவவிசுவன். உ. ஜாக்கிரசொப்பனம். விசுவதைஜஸன். ங. ஜாக்கிரசுமுத்தி. விசுவப்பிராஞ்ஞன். ச. ஜாக்கிரதுரியம். விசுவதுரியன். ரு. சொப்பனஜாக்கிரம். தைஜஸவிசுவன். சு. சொப்பன சொப்பனம். தைஜஸதைஜஸன். எ. சொப்பனசுமுத்தி. தைஜஸப்பிராஞ்ஞன். அ. சொப்பனதுரியம். தைஜஸதுரியன். கூ. சுமுத்திஜாக்கிரம். பிராஞ்ஞவிசுவன். கய. சுமுத்தி சொப்பனம். பிராஞ்ஞதைஜஸன். கக. சுமுத்தி சுமுத்தி. பிராஞ்ஞபிராஞ்ஞன். கஉ. சுமுத்தி துரியம். பிராஞ்ஞதுரியன். கங. துரியஜாக்கிரம். துரியவிசுவன். கச. துரியசொப்பனம். துரியதைஜஸன். கரு. துரியசுமுத்தி. துரியப்பிராஞ்ஞன். கசு. துரியதுரியம். துரியதுரியன்.

*சுஅ. கலை கசு:-

---

*சுஎ. பரமஹம்ஸபரிவிராஜகோபநிஷதம்.

*சுஅ. பிரசிநோபநிஷத்து.

†க. இரணியகருப்பம். உ. சிரத்தை. ங. ஆகாசம். ச. வாயு. ரு. தேயு. சு. ஜலம். எ. பிருதிவி. அ. தசேந்திரியம். கூ. மனம். க0. அந்நம். கக. பலம். கஉ. தவம். கங. மந்திரம். கச. கர்மம். கரு. உலகம். கசு. பெயர்.

†க. இரணிய கருப்பத் தோடிங்
 கியல்சிரத் தைவிண்கா றீநீர்
தரணியிந் திரிய நோக்கந்
 தகுவலி மந்தி ரங்கண்
முரணிலாத் தவசு கன்ம
 மொழிந்திடு முலகம் பேரே
திரமிலிவ் வீரெட் டான்மா
 செறிந்திடாக் கலைக ளாகும். (க)

## ஸ்ரீவிசாரசந்திரோதயம் பதினாறுங்கலை
## வேதாந்தபதார்த்தசம்ஞாவர்ணநம் என்பது
## முடிந்தது.

சுந்தர குரவன் றன்பாற் றுகளிலா விவ்வி சார
சந்திரோ தயமா நூலுட் டரித்தவர் ஞானப் பேற்றுற்
பந்தம தொழிந்து மெய்ம்மைப் பரஞ்சோதி வடிவ மாய
வந்தமி லின்ப மெய்தி யழிவிலா திருப்ப ரென்றும்.

## ஸ்ரீ விசாரசந்திரோதயம்.
## முடிந்தது.

|| ॐ ||

தஞ்சை பிரஹ்மநிஷ்டபண்டித ஸ்ரீ வெ. குப்புஸ்வாமி ராஜு

என்னும் பூர்வாசிரமநாமம் பூண்டிருந்த

ஸ்ரீ வி. பிரஹ்மாநந்தஸ்வாமிகளால் மொழிபெயர்க்கப்பட்டு,

ஸ்ரீ சங்கரவிலாசசாரதாமந்திரத்தில்

விற்பனைக்கு தயாராகவிருக்கும் புத்தகங்கள்.

| | | | |
|---|---|---|---|
| ஸ்ரீபஞ்சதசி (பஞ்சதசப்பிரகரணம்) வாலியூம் 1 & 2. | 10— 0—0 | ஹடயோகப்பிரதீபிகை (யோகநூல்) ... | 2— 0—0 |
| ஸ்ரீவிருத்திப்பிரபாகரம் | 4— 0—0 | ஸ்ரீவிசாரசந்திரோதயம் (வேதாந்தநூல்) ... | 1— 8—0 |
| ஸ்ரீவிருத்திரத்நாவலி (வேதாந்தநூல்) ... | 0—12—0 | ஸ்ரீசிவஞானபோதம், தத்துவப்பிரகாசிகை உரையுடன் | 1— 8—0 |
| ஸ்ரீவிசாரசாகரம் ... | 3— 4—0 | | |

| | |
|---|---|
| ஸ்ரீபாலபோதம் ... | 1— 8—0 |
| ஸ்ரீநாரதபக்திசூத்திரம் | 1— 8—0 |
| ஸ்ரீநந்திகேசுவரகாரிகை | 0— 4—0 |
| ஸ்ரீஞானவாசிஷ்டவசனம் (வைராக்கியப்பிரகரணம்). | 1— 4—0 |
| ஸ்ரீசிவயோகப்பிரதீபிகை | 0—10—0 |
| ஸ்ரீசுருதிஷட்லிங்கசங்கிரகம் ... | 0— 8—0 |
| கைவல்யோபநிடதம், அமிர்தபிந்தூபநிடதம், சுகரகசியோபநிடதம், ஸ்கந்தோபநிடதம், செய்யுள். | 0— 5—0 |
| ஸ்ரீபகவத்கீதை, கர்மகீதை, ஸப்தசுலோகிகீதை-இத்தான்பையண்டு | 1— 4—0 |
| ஸ்ரீசிவபஞ்சாக்ஷரவிளக்கம், ஸ்ரீராமமந்திரார்த்தம், ஸ்ரீகணேசஷோடசநாமஸ்தவம் | 0— 4—0 |
| ஸ்ரீஜகத்குருஆதிசங்கராசாரியர் சரித்திரம் செய்யுள். | 0— 3—0 |
| ஷ ஷ வசனம். ... | 0— 2—0 |
| ஸ்ரீபிரஹ்மவிதாசீர்வாதபத்ததி ... | 0— 2—0 |
| தருக்ககௌமுதி-நியாயபதார்த்தம் பதினறுடன் | 0—10—0 |
| தத்துவமஸிமகாவாக்கியவுபதேசம் (உபநிஷத்) | 0— 3—0 |

நாநாஜீவவாதக்கட்டளை
2-ம் பதிப்பு ... 0— 4—0
ஷை செய்யுள் ... 0— 3—0
விவேகசிந்தாமணி (வேதா
ந்தபரிச்சேதம்) ... 0— 6—0
அபரோக்ஷாநுபூதி(வேதா
ந்தம்) ... 0— 8—0
ஆத்மபோதமும், தத்து
வபோதமும் ... 0— 8—0
ஸ்ரீபஞ்சீகரணமுதலியன
27-புத்தகங்கள் சேர்ந்தது 1— 0—0
உத்தரகீதை ... 0— 6—0
ஸ்ரீராமகீதை ... 0— 6—0
ஸ்ரீகுருகீதை, காலிகோ
பைண்டு ... 1— 4—0
ஸ்ரீகுருகீதை-ராப்பர் ... 1— 0—0

ஸ்ரீதேவிகீதை ... 0—12—0
ஸ்ரீஜகத்குருசங்கராசாரி
யர்படம் (பெரிது) ... 0— 2—0
ஷை (சிறிது) ... 0— 1—0
ஸ்ரீபிரஹ்மாநந்தஸ்வாமி
கள் படம் ... 0— 4—0
ஸ்ரீஅநுமார்சீதாதேவிக்கு
கணையாளி கொடுத்தபடம் 0— 1—0
ஸ்ரீசங்கரவித்யாரண்யா
ஷ்டோத்தரசதநாமம்
கிரந்தம், நாகரம்,
தமிழ், தனித்தனி. } 0— 2—0
ஸ்ரீகுர்வஷ்டோத்தர
சதநாமாவலி, நாகரம்,
கிரந்தம்,தமிழ், சேர்ந்
தது. } 0— 3—0

| | |
|---|---|
| ஸ்ரீசங்கரநீலகண்டாசாரியசம்வாதம் | 0— 6—0 |
| ஸ்ரீபிரஹ்மநாமாவலி, செய்யுள் | 0— 2—0 |
| ஸ்ரீபிரஹ்மநாமாவலி, நாகரம், கார்டு | ... 0— 0—6 |
| கீதாசாரத்தாலாட்டு | ... 0— 6—0 |
| ஸ்ரீநாராயணஸ்தோத்திரம் கார்டு, நாகரம் | ... 0— 0—6 |
| ஸ்ரீநாமராமாயணமும், நாராயணஸ்தோத்திரமும், தமிழ். | 0— 1—0 |
| ஸ்ரீஇராமாயணசூர்ணிகை நாகரி, தமிழ், தனித்தனி. | 0— 1—0 |
| ஸ்ரீகாயத்ரீராமாயணம், நாகரம் | 0— 1—0 |

## பிறர் பதிப்பு.

| | |
|---|---|
| ஸ்ரீகணேசர்முதலிய அஷ்டோத்தரம் 21-அடங்கியது, தமிழ். | 0— 4—0 |
| இராஜவிநாயகர் கும்மி | ... 0— 1—0 |
| அத்வைதவுண்மை | ... 0— 4—0 |
| அத்வைதவிளக்கம் | ... 0—12—0 |
| வேதாந்தசூளாமணி உரையுடன் | ... 1— 8—0 |
| வேதாந்தமனனசிந்தாமணி | ... 0—12—0 |
| ஞானயிபோதம் | ... 0— 2—0 |

| | | | |
|---|---|---|---|
| மெஞ்ஞானபோதம் ... | 0—12—0 | விபூதிமாஹாத்மியம் ... | 0— 1—0 |
| பிரஹ்மமும் அதன்வியக்தாவஸ்தையும் ... | 0— 1—0 | விபூதி ருத்ராக்ஷிரமகாத்மியம் ... | 0— 4—0 |
| சர்வஞானோத்திரம் ... | 0— 3—0 | புட்பவிதியும் பலனும் ... | 0— 3—0 |
| வேதசாரசமுத்தரணம் | 0— 4—0 | சிவபூஜைத்திரட்டு ... | 0— 3—0 |
| சங்கரதுவேஷி வாய்ப்பூட்டு ... | 0— 4—0 | சிவமஹிம்ந ஸ்தோத்திரம் | 0— 2—0 |
| நான்குமகாவாக்கியார்த்தம் ... | 0— 2—0 | சிவபுராணமென்னும் சைவபுராணம் ... | 3— 0—0 |
| மகாவாக்கியரகசியம் | 0— 8—0 | திருவிளையாடற்புராணம் | 2— 0—0 |
| ஸ்ரீதக்ஷிணாமூர்த்தியஷ்டகம்(கிரந்தம்-தமிழ்) | 0— 2—0 | ஷை ஷை சாரவெண்பா | 0— 2—0 |
| | | சூதசங்கிதை ... | 0— 2—0 |
| | | சர்வஞானோத்தரம் ... | 0— 2—0 |
| தலயாத்திரை பொதுவிதி | 0— 8—0 | அருணாஜல புராணம் ... | 1— 4—0 |
| கங்காயாத்ராதீபிகை ... | 1— 8—0 | திருக்காளத்தி ஷை ... | 0— 8—0 |
| ஸ்ரீஜகந்நாத-ஹரித்வார | 0— 2—0 | அரிச்சந்திர ஷை ... | 2— 4—0 |

| | |
|---|---|
| திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, பெரிய புராணம் | 0—12—0 |
| திருவேங்கைகோவை ... | 2— 8—0 |
| கந்தரநுபூதி உரையுடன் | 0— 6—0 |
| கந்தபுராணசாரசங்கிரகம் | 0— 1—0 |
| துலாக்காவேரி மஹாத்மியம் ... | 0— 8—0 |
| சிவராத்திரி ௸ ... | 0— 6—0 |
| சமிவனக்ஷேத்திர ௸... | 0— 8—0 |
| சிதம்பர ௸ (கிரந்தம்) | 0— 8—0 |
| பிராசீனதர்மங்கள் ... | 0— 4—0 |
| நித்யாநுசந்தானம் ... | 1— 8—0 |
| மநுமுறைகண்டவாசகம் | 0— 4—0 |
| தேவாரத்திரட்டு(கண்ணுசாமி பிள்ளையால்)பெரியது | 0— 6—0 |
| ௸ சிறியது ... | 0— 2—0 |
| தேவாரத்திரட்டு(அற்புத) | 0— 4—0 |
| வைசியகுலவிளக்கம் ... | 0— 4—0 |
| சைவசித்தாந்தவரலாறு | 0— 6—0 |
| வேளாளசூளாமணி ... | 0— 4—0 |
| புலால் மறுப்பு ... | 0— 4—0 |
| மகாபாரதம் (ஆதி-சபா பருவங்கள்) ... | 1— 0—0 |
| ஆநந்தராமாயணம் ... | 5— 0—0 |
| பாலராமாயணம் (கிரந்தம்-தமிழ்) ... | 0— 6 0 |
| பக்தலீலாமிருதம்வசனம் | 3— 4—0 |
| பட்டினத்தார் பிரபந்தம் | 1— 4—0 |
| ௸ விருத்தியுரை ... | 3— 0—0 |
| குமாரதேவர்சாஸ்திரக் கோவை | 0—12—0 |
| அவதூதசம்வாதம் ... | 0— 4—0 |

| | |
|---|---|
| பிரபுலிங்கலீலை-செய்யுள் | 1— 0—0 |
| ஞசேலோபாக்யானம்(மூலம் உரையுடன்) | ... 3— 0—0 |
| நாலடியார் (இங்கிலீஷ் -தமிழ்) | ... 2— 0—0 |
| நைடதம் (மூலம்) | ... 1— 0—0 |
| பெருந்திரட்டுகுறுந்திரட்டு | ... 3— 0—0 |
| அணியிலக்கணம் | ... 0— 4—0 |
| யாப்பிலக்கணம் | ... 0— 3 - 0 |
| கல்லாடம் (மூலம்-உரை) | 3— 4—0 |
| தொல்காப்பிய பாயிர விருத்தியுரை | ...2— 0—0 |
| புலவராற்றுப்படை | ... 0— 4—0 |
| பாட்டியல்கொத்து | ... 0— 8—0 |
| தருக்காமிருதம் | ... 0— 8—0 |
| பர்த்ருஹரிவைராக்கிய சதகம் | ... 0— 4—0 |
| தலாட்டுபிரபந்தம் | ... 0— 6—0 |
| திருப்புகழ் | ... 0— 6—0 |
| ஸ்ரீகிருஷ்ணன்செய்திருப்புகழ் | ... 0— 1—0 |
| மதுரைமீனாக்ஷிபிள்ளைத்தமிழ் | ... 0— 4—0 |
| அகோராந்தாதி | ... 0— 1 - 0 |
| பதிற்றுப்பத்தந்தாதி | ... 0— 2—0 |
| அழுக்கணிசித்தர்பாடல் | 0— 1—0 |
| கட்டளைக்கொத்து | ... 0— 1—0 |
| நான்மணிமாலை | ... 0— 1—0 |
| கன்றுங்கனியுதவும் | ... 0— 6—0 |

| | |
|---|---|
| ருக்மாங்கதசரித்திரம் ... | 0— 6—0 |
| முதலாவது கரிகாலன் ஆராய்ச்சி | 0—12—0 |
| சிவேந்திரபாகசாஸ்திரம் | 2— 0—0 |
| ஜோதிட பாலசிக்ஷை ... | 0— 6—0 |
| ஜோதிட பிரபஞ்சசேகரம் | 0—12—0 |
| நவக்கிரகபலன் ... | 0— 2—0 |
| நவக்கிரகசூக்ஷ்ம துரியநாடி | 0—12—0 |
| காட்வார்ட் ஹோ! (Godward Ho!) | 0— 2—0 |
| சீலைக்கடலைபருப்புவிலை விவரம் ... | 0— 8—0 |
| மெஞ்ஞானக்கும்மி ... | 0— 4—0 |
| ஸம்ஸ்கிருதபாலபோதம் | 0— 5—0 |

| | |
|---|---|
| ஸம்ஸ்கிருத எழுத்துப் படம். | 0— 0—6 |

நாவல்.

| | |
|---|---|
| அநவத்யா ... | 0— 0—6 |
| திலோத்தமா ... | 0— 0—6 |
| பிருந்தை ... | 0— 0—6 |
| விசுவநாதியம் ... | 0— 1—0 |
| நீதிக்கதை ... | 0— 1—0 |
| தங்கக்கிளி ... | 0—10—0 |
| சுந்தரராஜா ... | 0—12—0 |
| பஞ்சாயித்து நாடகம் ... | 0— 6—0 |
| மதிமுகி (1- பாகம்) ... | 0— 4—0 |
| மதிமுகி (2-பாகம்) ... | 0— 4—0 |

